# கல்கி

மே 26 இதழில்



# பாலகுமாரன்

எழுதும்

# மனம் உருகுதே

தொடர் ஆரம்பம்

ஒவ்வொரு மனிதனுக்கும் இங்கே தன் தொழில் என்ன, தான் எதில் சிறக்க முடியும் என்பதே மிகப் பெரும் கேள்வி.
இக்கேள்விக்கு பதில் கிடைத்ததெனில், விருப்பமுள்ள தொழில் கிடைத்ததெனில், உழைப்பு அதிகரிக்கும்.
அந்த உழைப்பு உயர்வுதரும், செல்வம் தரும், பிசிறில்லா மகிழ்வு தரும்.
தன் தொழில் என்னவென்று தேடியவர் கதை.

# ரி
# மோ
# ட்

கூலி அதற்கு மேலே. நகத்தைக் கடித்துக் கடித்து உள்ளங்கை வரை உள்ளே போயிருக்கும். மிக முக்கியமான விக்கெட்டுகளை வீழ்த்திய ஸ்ரீநாத்தையும் நெஹ்ராவையும்கூட, சிறிய தவறுகளுக்காகச் சீறி விழுந்தார். A timely word may lessen stress, a loving word may heal and bless என்ற நர்ஸரி பாட்டை அவர் படித்ததில்லை.

• ஸ்ரீநாத்

கும்ப்ளேவை இரண்டாவது டெஸ்டிலிருந்து நீக்கியது பற்றி கவாஸ்கரும் பாய்காட்டும் புலம்பிக் கொண்டேயிருந்தார்கள். "முன்னூறு விக்கெட்டுகளுக்கு மேல் வீழ்த்தியிருக்கும் ஒரு வீரரை இப்படியா அவமானப்படுத்துவது? அவர் சரியாக ஆடவில்லை என்கிறார்



• சித்து

கள். சரி, அதே அளவுகோலை மற்ற ஆட்டக்காரர்கள் விஷயத்திலும் கடைப்பிடிப்பார்களா?'' என்றார் கவாஸ்கர். நல்லவேளை, கும்ப்ளே இல்லாமலே இந்தியா ஜெயித்தது. தோற்றிருந்தால் குதறி எடுத்திருப்பார்கள் கங்கூலியை.

ஐம்பது ரன்னுக்குள் கடைசி இரண்டு விக்கெட்டை வீழ்த்த வேண்டும் என்ற வலுவான நிலையில் இந்தியா இருந்தபோது, சித்துவுடன் கலந்துரையாடிய ஆலன் வில்கின்ஸ், "என்ன, வெற்றி நிச்சயம்தானே?" என்று கேட்டார்.

அலங்கார வாக்கியங்களில் சித்துவுக்கு அதியாய மோகம். அதீத பலம் சில சமயம் அபாயத்தில் கொண்டுவிடக் கூடும் என்று எச்சரித்து, "the fattest pig goes to the butcher" என்றார்.

அது என்ன, ஐந்து நாள் டெஸ்ட்டா அல்லது ஒரு நாள் போட்டியா? மேற்கிந்தியத் தீவுக்கும் இந்தியாவுக்கும் நடைபெற்ற இரண்டாவது கிரிக்கெட் டெஸ்ட்டின் ஐந்தாவது நாளன்று அப்படித்தான் சந்தேகம் உண்டாயிற்று. முதல் பந்து தொடங்கி, கடைசிப் பந்துவரை, பார்க்கிறவர்களை நாற்காலி நுனியில் உட்கார வைத்துவிட்டது. ஆனால் ஒருநாள் போட்டிகளின் ஆரவார ஆர்ப்பாட்டங்கள் இருக்கவில்லை. குண்டூசி விழுந்தாலும் கேட்கும் அளவுக்கு நிசப்தம்.

மேற்கிந்தியத் தீவுகளுக்கு இசையே உயிர். கிரிக்கெட் போட்டிகளின்போது இசைக்குழுவினர் கச்சேரியே நடத்துவது வழக்கம். ஆனால் அன்று லாரா படு டென்ஷனில் இருந்தார். கொஞ்சம் மியூசிக் ஆரம்பித்தவுடனே கையை உயர்த்தி ஆட்டி உடனே நிறுத்தும்படி ஆணையிட்டார். தன் கவனம் சிதறக் கூடாதென்பதில் அத்தனைக் கவலை. With peak concentration comes peak confidence.

அவர்தான் அப்படியென்றால் நம்ம கங்

மற்றச் சேனல்களைப் பார்க்க முடியாமல்

போய்விட்டது என்ற குறையை மேற்கிந்தியத் தீவு ரசிகர்கள் போக்கிவிட்டார்கள்.

Colour speaks all languages என்று அறிஞர் அடிஸன் சொன்னது போல, எத்தனை ரகரகமான வண்ணங்கள்! எவ்வளவு விதவிதமான கேரக்டர்கள்! முகம் பூரா முடியாலும் தாடியாலும் மூடிக் கொண்டிருப்பவர்; உடை அணிந்திருக்கிறாரா இல்லையா என்ற ஐயத்தை எழுப்பியவாறு சிகரெட் ஊதும் கவர்ச்சிக் கன்னி; மைதானத்தின் இன்னொரு மூலையில் கிரிக்கெட் விளையாடி மகிழும் ஏழைச் சிறுவர்கள், ஜட்டி மட்டுமே கட்டிய தொப்பைக்காரர்...

அதிருக்கட்டும்.

• கங்குலி



எண்ணம் ஏற்பட்டது. அட்சர லட்சம் கொடுக்கலாம் - புரியுமானால்.

'சார்லி சாப்ளின்' படத்தில் பிரபு தேவாவும் காயத்ரி ரகுராமும் பாடுகிற 'ச்சும்மா ச்சும்மா'வும் அந்த பிராண்ட்தான். காதில் விழுந்த ஒன்றிரண்டு வரிகள் அழகாக இருந்தன. முழுதும் தெரிந்தால் மேலும் ரசிக்கலாம். The best words in best order என்பது கவிதைக்குத்தான் பொருந்தும். சினிமாப் பாட்டுக்கு அல்ல.

பழகப் பழகப் பட்டி மன்றங்களும் புளிக்கும்.

விவாதத்துக்குரிய உருப்படியான பிரச்னைகளுக்குப் பஞ்சம். ஏதாவது ஒரு கேள்வி இருந்தால் போதும். ஸன் டிவியில் நடந்த பட்டிமன்றத்தின் தலைப்பு, 'கோடை பிறந்துவிட்டால் நெருக்கடியா, நிம்மதியா?'

# கொசுக்கடி இன்பமா, துன்பமா?

(இன்னும் கொஞ்ச நாள் போனால், 'கொசுக்கடி இன்பமா, துன்பமா?' என்ற தலைப்பு வரலாம்.)

Better to be silent and be thought a fool than speak and remove all doubts என்பது உண்மையெனத் தோன்றுகிறது.

இருந்தாலும், விஜய் நடத்திய பட்டிமன்றத்தில் சிறிது சுவாரஸ்யம் தென்பட்டது. போன், செல், இமெயில் போன்ற நவீன சாதனங்களின் அனுகூலங்களைப் பட்டியலிட்ட ஒரு பெண்மணி, "வெளிநாட்டில் கணவர் எங்கே இருக்கிறார், என்ன செய்கிறார் என்பதை இன்று உடனுக்குடன் தெரிந்து கொள்ளமுடிகிறது. முன்பெல்லாம் 'சீமைக்குப் போயிருக்கிறார்' என்பார்கள். அத்தோடு சரி. பர்மாவுக்குப் போகிற செட்டியார் திரும்பும் போது ஒரு பெண்ணுடன் வருவார்" என்றார்.

தன்மானமுள்ள நகரத்தார்கள் ஆட்சேபிக்க வேண்டிய பேச்சு.

வர்ணனையாளர் மைக்கேல் ஹோல்டிங் (மேற்கிந்தியத் தீவின் முன்னாள் வீரர்) 'எங்கள் ஊரில் எல்லாரும் வாய் விட்டுச் சிரிப்பார்கள். புன்னகை செய்யத் தெரியாது' என்றார்.

இது உண்மைதானா என்று கவனிக்க வேண்டும். இன்னும் நிறைய மேட்சுகள் இருக்கிறதே!



• கும்ப்ளே

'ஓ போடு' பாட்டைப் பற்றி இரண்டு பக்கத்துக்கு வாசகர்களின் பாராட்டுக்களை வெளியிட்டிருந்தது ஒரு தமிழ்த் தினசரி. (விளம்பரம்?) பாராட்டியவர்களில் பலர், 'இந்தப் பாட்டில் வார்த்தைகள் என்னவென்றே புரியவில்லை' என்று சொல்லியிருந்தார்கள்.

ராஜ் டிஜிட்டலின் 'லைவ் சாய்ஸ்' நிகழ்ச்சியைப் பார்த்தபோது, சமீப காலமாக சினிமாப் பாட்டு எல்லாமே அப்படித்தான் என்ற

**வினோத்**

# கல்கி – VBC Jewellery

இணைந்து வழங்கும்

## புன்னகைப் போட்டி - 9 முடிவு

'அட்மிஷன் ஜோக்' எழுதச் சொல்லி வந்த அறிவிப்பைத் தொடர்ந்து, வாசகர்கள் எழுதிக் குவித்த ஜோக்குகளில், சிரிப்பலை பொங்க வைத்த இரண்டு துணுக்குகள் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளன. ஜோக்கடித்தவர்களின் முகவரிகள்: தலா நான்கு கிராம் தங்கம் பெறும்

''எதுக்கு அந்த கான்வென்ட் முன்னாடி பிள்ளைகளோட அப்பா-அம்மா தர்ணா செய்யறாங்க...?!''

''அதுவா! பிள்ளைகளைச் சேர்க்க இவங்களுக்கு வைச்ச எண்டர்ரென்ஸ் தேர்வுல 'அவுட் ஆஃப் சிலபஸ்' கேள்வி வந்துடுச்சின்னு' போராடறாங்க!''

— எல். மாறன்,
96, வன்னியர் வீதி,
மேல்பட்டி — 635 805

''ஹலோ, பி-3 போலீஸ் ஸ்டேஷனா? என் பையனை ஸ்கூல்ல சேர்க்கறதுக்கு அட்மிஷன் ஃபீஸ் எடுத்துட்டுப் போகணும். துப்பாக்கி ஏந்திய இரண்டு போலீஸ்காரங்களைப் பாதுகாப்புக்காக அனுப்பி வைக்க முடியுமா?''

— ஆர். பிரசன்னா,
EI.91, TNHB,
காந்தி கிராமம்,
கரூர் — 639 004

## நீங்கள் கேட்டவை - தராசு

ஓ போட்டாலும் போதாது!

● பெ. பொன்ராஜபாண்டி,
மதுரை - 16.

? சமீபத்தில் எதற்காகவாவது 'ஓ' போட்டதுண்டா?

! முன்னாள் பிரதமரானாலும் குற்றம் குற்றமே என்று சுப்ரீம் கோர்ட் [illegible] டான்ஸி ஆசிரமத்துக்காக ஆர்ஜிதம் செய்யப்பட்ட நிலத்தைத் திருப்பித் தரவேண்டும் என்று தீர்ப்பளித்ததற்கு எத்தனை ஓ போட்டாலும் போதாது! ❐

● கே.வி. ராமன், சென்னை - 73.

? சட்டப்பேரவையில் ஒரு தீர்மானம் கொண்டு வந்தால், உறுப்பினர்கள் நடுநிலை என்பதை, தீர்மானத்துக்கு ஆதரவாகவா அல்லது எதிர்ப்பாகவா? எப்படி கணக்கில் எடுத்துக் கொள்வார்கள்?

! அரசியல் நோக்கில் எதிர்த்தரப்பினர் எப்படியும் பேசலாம். ஆனால், எதற்காக நடுநிலை என்ற அக்கட்சியின் விளக்கத்தைத்தான் நாம் கவனிக்க வேண்டும். உதாரணமாக, இலங்கையில் அமைதி திரும்ப வேண்டும் என்ற தமிழக சட்டப் பேரவைத் தீர்மானப் பகுதி தி.மு.க.வுக்கு ஏற்புடையது. ஆனால் அங்கு ராணுவத்தை அனுப்பி பிரபாகரனைப் பிடித்துவரவேண்டும் என்ற பகுதி ஏற்கத்தக்கதல்ல. அதனால்தான் நடுநிலை.

• 'ஜோக்'கான வரலாறு!

● பா. குணா, சேத்துப்பட்டு.

? சமீபத்தில் ரசித்த ஜோக்?

! 'ஜெ இல்லை என்றால் எம்.ஜி.ஆர். பெயர் வரலாற்றில் இல்லாமல் போயிருக்கும்' என அமைச்சர் வளர்மதி 'ஜிங் ஜிங்' அடித்திருப்

• சென்டிமென்ட் அரங்கம்



• சாதனை...



• ...அசாதாரண சாதனை!

பதுதான்!

● எம்.ராஜேந்திரன், லால்குடி.

? சன் டீ.வி. அரட்டை அரங்கம் போகும் போக்கைப் பற்றி...?

! ஏகப்பட்ட சென்டிமென்ட்களும் 'செட்-அப்' காட்சிகளுமாக செயற்கையாகப் போய்க் கொண்டிருக்கிறது - மெகா சீரியலுக்குப் போட்டியாக! அளவுக்கு மிஞ்சினால் அரட்டையும் எரிச்சல்!

● ஜி.கே.எஸ். மூர்த்தி, கோபிசெட்டிப்பாளையம்.

? பாராளுமன்றத்தில் நம்பிக்கை வோட்டெடுப்பு நடந்தால் பி.ஜே.பியை திரிணமுல் காங்கிரஸ் ஆதரிக்கும் என்கிறாரே மமதா பானர்ஜி?

! குழந்தையையும் கிள்ளி விட்டு, தொட்டிலையும் ஆட்டுவதில் மமதாவும் நாயுடுவும் நிபுணர்கள்.

● டி. ஜெய்சிங், கோவை -1.

? ஐந்து ஆண்டுகள் விஞ்ஞானிகள்தான் நாட்டை ஆளவேண்டும்; அடுத்த ஐந்து ஆண்டு டாக்டர்கள்; அடுத்த ஐந்து ஆண்டு எஞ்ஜினியர்கள் – இப்படி அமைந்தால் எப்படி இருக்கும்?

! Intellectual arrogance கொடிகட்டிப் பறக்கும். நாட்டின் நிலைமை இன்றுள்ளதைவிட மோசமானதாக இருக்கும்.

# வீரப்பன் விவகாரம் என்னவாயிற்று..?



• ஆதரவு ஆட்டம்!

● மலை அரசன், அருகந்தம்பூண்டி.

? நடிகைகளின் தொடர் தற்கொலைகள் எதை உணர்த்துகிறது?

! பணமும் புகழும் மட்டுமே நிறைவைத் தராது என்பதைத்தான்.

● டிக்ஷ்னரிப்ரியன், புனிதா, துறையூர்.

? யாரையுமே பகைத்துக் கொள்ளாமல் வெற்றிகரமாக ஓர் அரசியல் கட்சியை நடத்தவே முடியாதா?

! முடியும். ஐம்பதுகளில் அறுபதுகளில் எதிர்ப்பு இருந்தது; பகை இல்லை. இப்போது பகைதான் உள்ளது; அர்த்தமுள்ள எதிர்ப்பு மிஸ்ஸிங்.

● மங்கை, பாளையங்கோட்டை.

? அசல் ரயிலும் அரசியல் ரயிலும் கவிழக்கூடாது என்கிறாரே வாஜ்பாய்?

! கவிழக் கூடாது என்பது லட்சிய நோக்கு; கவிழ்ந்து கொண்டிருக்கின்றன என்பது யதார்த்தப் பார்வை.



• 'அம்மாடியோவ்!

● ஆர். அப்துல் சலாம், திருச்சி – 21.

? பிராட்மனின் சாதனையை டெண்டுல்கர் எட்டிப் பிடித்து விட்டாரே?

! சச்சினுக்கு வாழ்த்துக்கள். ஆனால் எத்தனை டெஸ்ட்களில் இந்த சாதனையைப் புரிந்திருக்கிறார் என்று பார்த்தால் பிராட்மனுக்கு நிகரல்ல என்பது புரிந்து போகும். பிராட்மனின் சராசரி ரன்கள் சாதனை, யாரும் எட்டிப் பிடிக்க முடியாத ஒன்று.

● எல். மாறன், மேல்பட்டி.

***? மனித உரிமை _ சமத்துவம் என்பது இன்னும் மலராத மதுரை பாப்பாபட்டி கிராமப் பிரச்னைக்கான ஆணிவேர் எதுவாக இருக்கும்?***

! ஆணிவேர், சல்லிவேர் எல்லாமே ஜாதி! ஜாதியைத் தவிர வேறொன்றுமில்லை.

● கா.நா.ராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்.

***? உ.பி.யில் பி.ஜே.பி, திரிணமூல், பகுஜன் சமாஜ் ஆகியன ஆட்சி அமைக்க உடன்பாடு செய்துகொண்டுள்ளது குறித்து...?***

! குதிரை வியாபாரம் படிந்தது. இனி கீழே தள்ளி குழி பறிக்கும் அத்தியாயம் தொடரும்.

● பொ.சு.ப்ரியா, சேலம் -6.

***? வீரப்பன் விவகாரம் என்ன வாயிற்று?***

! அதெல்லாத்துக்கும் தி.மு.க. ஆட்சிதானுங்க காரணம்! இப்ப அம்மாவால பிடிக்க முடியாம போனாலும் அதற்கும் முந்தைய தி.மு.க.ஆட்சிதான் காரணம் _ அம்மாவே சொல்லிட்டாங்க சட்டமன்றத்தில். தப்பித் தவறி நாட்டுல ஏதாச்சும் நல்லது நடந்தால் மட்டும் அதற்கு அம்மா தலைமையிலான அ.தி.மு.க.தான் காரணம்.

● கே. சுதர்ஷன், தூத்துக்குடி.

***? 'மூட்டை தூக்கியாவது குடும்பத்தைக் காப்பாற்றுவேன்' என சபதம் செய்கிறார்களே, உடலுழைப்பு மூலம் சம்பாதிப்பது கேவலமா என்ன...?***

! சம்பாதிப்பது என்ற சொல் உங்கள் கேள்வியில்தான் இருக்கிறது. வழக்கு மொழியில் இல்லை. மூட்டை தூக்குவது போன்று கஷ்டங்களைத் தாங்கியாவது குடும்பத்தைக் காப்பாற்றுவேன் என்று அர்த்தம் பண்ணிக் கொள்வதே சரி.

● எஸ். பாரதி, ஆவடி.

***? இனி ஆண்டிப்பட்டியில் எந்த அசௌகரியமும் இராது என்று அமைச்சர்கள் கூறியது குறித்து...?***

! ஆண்டிப்பட்டியில் ஆரம்பித்த அசௌகரியம்தான் தமிழ்நாடு முழுக்க பரவியிருக்கிறதே!

▢ ரூ. 100/- பரிசு பெறுபவர்:
கே.வி.ராமன்,
50, தனலட்சுமி நகர் பிரதான சாலை,
ஸ்ரீ ராஜராஜேஸ்வரி நகர் மேற்கு விரிவு
சேலையூர், சென்னை - 600 073

● ரூ. 50/- பரிசு பெறுபவர்:
டி. ஜெய்சிங்,
அருண் டிரேடர்ஸ்,
650, ரங்கேகவுடர் வீதி,
கோவை - 641 001

''நான்கு வருட காலம் வரியில்லாத பட்ஜெட் போட்டவன் நான். ஆனால் இந்த அரசு, வரியை உயர்த்தி மக்களைக் கஷ்டப்படுத்தியிருக்கிறது. கடந்த ஆறு மாத காலத்தில் மின் கட்டணம் ஏகமாக ஏற்றப்பட்டிருக்கிறது. தொழிற்சாலைகள் மூடப்பட்டிருக்கின்றன. விஷம் போல



• ஞானகிராமன்

# ''மக்கள் நலன் இரண்டாம் பட்சமே!''

## - எதிர்க்கட்சித் தலைவர் ஜானகிராமன்

ஏறுகிறது விலைவாசி. பல குடும்பங்கள், தாக்குப் பிடிக்க முடியாமல் புதுவையை விட்டே குடி பெயர்ந்துவிட்டன. கடந்த ஓராண்டில் 11000 ரேஷன் அட்டைகள் அரசிடமே ஒப்படைக்கப்பட்டு விட்டன. ஏற்கெனவே தொழிற்சாலை துவங்க

''தற்போது நாட்டின் பொருளாதார நிலையில் ஒரு மந்தமும், பின்னடைவும் இருக்கிறது. இந்தப் போக்கு புதுவையிலும் பிரதிபலிக்கும் ஆபத்திருப்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். எனவேதான் கவனமாகச் சிந்தித்து இந்த முறை பட்ஜெட் போட்டிருக்கிறோம். மின் கட்டணம் ஏற்றப்பட்டிருப்பதாகப் புகார் சொல்கிறார்கள். மற்ற மாநிலங்களை ஒப்பிடுகையில் இது மிகவும் குறைவு. புதுச்சேரி அரசின் மொத்த வருவாயான சுமார் 1200 கோடியில் கிட்டத்தட்ட பாதி அளவு மத்திய அரசிடம் இருந்து திட்டம் சார்ந்த பணிகளுக்கும், சாராத பணிகளுக்கும் கொடை மற்றும் கடனுதவியாகப் பெறப்படுகிறது. அந்த அடிப்படையில் மத்திய அரசின் சில நிர்ப்பந்தங்களுக்கு ஒப்புக் கொள்ள நேரிடுகிறது.

சமச்சீர் வரியைப் பொறுத்த மட்டில் சென்றமுறை இருந்த அரசு, ''அமுல்படுத்துகிறோம்'' என்று மத்திய அரசுக்கு உறுதிமொழி கொடுத்து விட்டதால் எங்களால் ஒன்றுமே செய்ய முடியவில்லை. இது பற்றி எதிர்க்கட்சியிடம் கேட்டால் ''தாங்கள் இதனால் ஏற்படும் இழப்பைக் ஈடு செய்யுமாறு மத்திய அரசிடம் கேட்டோம். நீங்கள்தான் போராடிப் பெற வேண்டும்'' என்று சொல்கிறார்கள். ஏற்கெனவே வருவாயில் சரி பாதியை மத்திய அரசிடம் பெற்றுக் கொண்டிருக்கும் நிலையில் இது எப்படிச் சாத்தியமாகும்? மேலும் சமச்சீர் வரியை அமுல்படுத்தியதால் இழப்பு சுமார் அறுபது கோடிதான். இதை ஈடுகட்டும் வகையில் பல நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன.

புதுவையில் பெரிய தொழிற்சாலைகள் நல்ல முறையில் இயங்கிக் கொண்டிருக்கின்றன. சலுகைகள் முடிந்த நிலையில் சில தொழிலதிபர்கள் சிறு தொழிற்சாலைகளை மூடி விட்டுப் போய்விட்டார்கள் என்பதும் உண்மை. தொழில் வளர்ச்சிக்கு இந்த அரசு எல்லா வித உதவிகளைச் செய்யவும் தயாராக இருக்கிறது. ஆனால் மாசு படுத்தக் கூடிய இரும்பு, உருக்குத் தொழிற்சாலைகள்

கொடுக்கப்பட்டு வந்த சலுகைகள் நிறுத்தப்படும் ஆபத்து இருப்பதால் புதிய தொழில் துவங்க யாரும் வருவதில்லை. மென்பொருள் தொழிற்சாலைகளுக்கு மட்டுமே ஆக்கமும் ஊக்கமும் கொடுக்கப்படும் என்று அறிவித்துள்ளது அரசு. ஆனால் உலக அளவில் மென்பொருள் தொழிலும் சரிந்துதான் இருக்கிறது.

'சமச்சீர் வரியை அமுல்படுத்தச் சொன்னால் ராஜினாமா செய்து விடுவோம்' என்று வாய்ச் சவடால் விட்டவர்கள் இன்று கைகட்டி வாய் பொத்தி அமுல்படுத்திவிட்டார்கள். இதனால் புதுவைக்கு 120 கோடி ரூபாய் வருமானம் குறைந்துவிட்டது. நான் முதல்வராக இருக்கும்போது என் வற்புறுத்தலால் வரதா கமிட்டி என்ற ஒன்றைப் போட்டு, சமச்சீர் வரி விஷயத்தை ஆராயச் சொன்னது மத்திய அரசு. புதுச்சேரியைப் பொறுத்தமட்டில், பொருட்களுக்கான வரி விகிதங்களை நிர்ணயம் செய்வதும், அதன் மூலம் வருமானத்தைப் பெருக்குவதும், இந்த யூனியன் பிரதேசத்துக்கான தனிப்பட்ட உரிமை என்பதை அந்தக் கமிட்டியிடம் நான் எடுத்துச் சொன்னேன். என் வாதத்தை அவர்கள் ஏற்றுக்கொண்டார்கள். அந்த அடிப்படையில் இந்த அரசு போராடாமல் சமச்சீர் வரியை ஏற்றுக்கொண்டது பெரிய வீழ்ச்சியை ஏற்படுத்தும். இது தவிர மாநிலத்தில் வசூலிக்கப்படும் விற்பனை வரி முழுக்க புதுவைக்கே தர வேண்டும். வருமானத்தைப் பெருக்க ஆக்கபூர்வமான நடவடிக்கைகள் எடுக்காமல் வரி போடுவது சற்றும் நியாயமல்ல!

எதிர்க்கட்சிகள் குறைபாடுகளைச் சொல்லும்போது அதை நீக்க முயற்சி செய்வதாகக் கூறுகிறார்கள். ஆனால் செயலில் அது பிரதிபலிப்பதில்லை. இந்த அரசுக்குத் தன்னை அரசியல் ரீதியாக காத்துக் கொள்ளவே நேரம் சரியாக இருக்கிறது. மக்களின் தேவைகள் இரண்டாம் பட்சமாகப் போய்விட்டது!''




மற்றும் ரசாயனத் தொழிற்சாலைகளை எந்தக் கட்டத்திலும் புதுவை மண்ணில் அனுமதிக்க மாட்டோம். நாங்கள் போட்ட வரியால் சாமான்ய மக்கள் சிறிதும் பாதிக்கப்பட மாட்டார்கள், விலைவாசியைப் பொறுத்தவரை, நாடு முழுவதும் ஒட்டுமொத்தமாக இருக்கும் நிலைதான் இங்கும் இருக்கிறது.

# "சாமான்ய மக்கள் பாதிக்கப்படவில்லை!"

**- முதல்வர் ரங்கசாமி**



• ரங்கசாமி

"எங்கள் அரசு அரசியல் ரீதியாக உறுதியாகத்தான் இருக்கிறது. அதைக் காப்பாற்றுவதற்கே எங்கள் நேரத்தைச் செலவிடுவதாகக் கூறுவது அபத்தம்.''


பாண்டிச்சேரி செய்திகள், கட்டுரைகள்:
ப்ரியன், ஆர்.சி. ஜெயந்தன்
படங்கள்: ராஜன்




# இனி பிள்ளை வரம் வேண்டி எங்கும் அலைய வேண்டாம்

## ஹோமியோ - சித்தா - ஆயுர்வேத முக்கூட்டு மருத்துவத்தால் குழந்தை பெறலாம்!

குழந்தை இல்லாத தம்பதிகள் பிள்ளைவரம் வேண்டி இனி எங்கேயும் அலைய வேண்டாம். குழந்தை பெறாமைக்கு குறைபாடு கணவனிடம் இருந்தாலும் சரி, மனைவியிடம் இருந்தாலும் சரி. ஹோமியோ-சித்தா-ஆயுர்வேத முக்கூட்டு மருத்துவத்தின் மூலம் ஆண் மலட்டுத் தன்மையும், பெண் மலட்டுத் தன்மையும் அறவே நீக்கி குழந்தை பிறக்கச் செய்கிறார்கள் டாக்டர் **ஏ.அர்ஜுனா, டாக்டர் வி.ஏ.ஆண்டாள்.** இவர்கள் 'நவீன வைத்தியாலயா' என்ற பெயரில் ஆஸ்பத்திரி நடத்தி வருகிறார்கள். திருவண்ணாமலை மாவட்டம் வந்தவாசியில் பிராமணர் தெருவிலும், சென்னையில் வடபழனி 100 அடி சாலையிலும் வெற்றிகரமாக சிகிச்சை நிலையங்கள் நடத்தி வருகிறார்கள்.

குழந்தைப் பெற்றுக் கொள்ள சிகிச்சைக்கு வரும் தம்பதிகளை டாக்டர் **ஏ.அர்ஜுனா** முதலில் கணவனின் உயிரணு உற்பத்தியை விந்து பரிசோதனையின் மூலம் குறைபாடுகளைக் கண்டறிகிறார். பிறகு மனைவியின் குறைபாடுகளை சில பரிசோதனைகளின் மூலம் தெரிந்து கொண்டு ஆண் மலட்டுத்தன்மை, பெண் மலட்டுத் தன்மை நீங்கி குழந்தை பெற முக்கூட்டு மருத்துவ சிகிச்சையளிக்கிறார்.



• உலகப் புகழ்பெற்ற மருத்துவத் திலகம் டாக்டர் A. அர்ஜுனாவுடன் திருவண்ணாமலை மாவட்டத்தில், உயிரணு உற்பத்தியாகி குழந்தை பெற்ற கிருஷ்ணன் - ஜெகதாம்பாள் தம்பதியர்.

"சென்னை கோடம்பாக்கத்தில் சம்பத் என்ற நபர் என்னிடம் சிகிச்சைக்கு வரும்போது அவரது விந்து பரிசோதனையில் டோட்டல் கவுண்ட் 70 மில்லியனும், மொட்டிலிட்டி 70%ம் இருந்தது. 2 மாத சிகிச்சைக்குப்பின் விந்து பரிசோதனையில் டோட்டல் கவுண்ட் 142 மில்லியனும், மொட்டிலிட்டி 80% உயர்ந்துள்ளது.

இது முக்கூட்டு மருத்துவத்தில் ஒரு சாதனையாகும்.

சென்னை புளியந்தோப்பைச் சேர்ந்த, அறவே உயிரணு இல்லாத ரவி எங்களிடம் சிகிச்சை பெற வந்து 2 மாத முக்கூட்டு மருந்தில், நல்ல முறையில் உயிரணு உற்பத்தியாகியுள்ளது.

கோவை பெரியநாயக்கன் பாளையத்தைச் சேர்ந்த லோகநாதனுக்கு அறவே உயிரணு இல்லை. அவருக்கு ஒரே மாத முக்கூட்டு மருந்தில் கவுண்ட் 110 மில்லியன், மொட்டிலிட்டி 20% உற்பத்தி ஆகியுள்ளது.

திருவாரூரைச் சேர்ந்த அறிவழகனுக்கு அறவே உயிரணு இல்லை. அவர் 7 மாதம் தொடர்ந்து முக்கூட்டு மருந்து சாப்பிட்டு உயிரணு உற்பத்தி ஆகியுள்ளது.

உயிரணு குறைவாக இருந்த கேரள மாநிலம் பாலக்காட்டைச் சேர்ந்த சேதுமாதவனுக்கு **16.6.2000**ல் கவுண்ட் 20மில்லியன், மொட்டிலிட்டி 50% இருந்தது. **13.7.2001**ல் கவுண்ட் 60மில்லியன், மொட்டிலிட்டு 50% என்று முன்னேற்றம் கண்டது.

மகாராஷ்டிர மாநிலம் நியூபாம்பே வாஷி பகுதியைச் சேர்ந்த ஜெயராமனுக்கு உயிரணு குறைவாக இருந்தது. **28.12.2000**ல் இருந்த கவுண்ட் 45 மில்லியன், மொட்டிலிட்டி 50% ஒரே மாதத்திற்குள் **26.1.2001**ல் கவுண்ட் 92மில்லியன், மொட்டி லிட்டி 30% என்று உயர்ந்தது.

சென்னையைச் சேர்ந்த, உயிரணு குறைவாக இருந்த ரகுவுக்கு 6.5.2000ல் கவுண்ட் 29 மில்லியன், 50% மொட்டி லிட்டி இருந்தது. எங்களது முக்கூட்டு மருந்துகள் மூலம் அவருக்கு 20.8.2000ல் கவுண்ட் 160 மில்லி யன் உயர்ந்தது.

சென்னை வண்ணாரப்பேட்டையில் மனோகரன் என்பவருக்கு 6 மாத முக்கூட்டு சிகிச்சையில் உயிரணு உற்பத்தி ஆகியுள்ளது.

காஞ்சீபுரத்தில் கணேசன் என்பவருக்கு சில மாத சிகிச்சையில் உயிரணு உற்பத்தி ஆகியுள்ளது.

வேலூரில் சுப்ரமணியன் என்பவருக்கு உயிரணு நார்மல் ரிசல்ட் உண்டாகியிருக்கிறது.

### ஆண் மலட்டுத் தன்மைக்கான காரணங்கள்:

ஆண்களுக்கு இளம் வயதிலேயே புட்டாளம்மை வந்திருந்தாலும், அம்மை வந்திருந்தாலும், மஞ்சள் காமாலை, டைபாய்டு ஜுரத்தால் பாதிக்கப்பட்டிருந்தாலும், விதைகளில் அடிபட்டிருந்தாலும், வெப்பம்

அதிகமுள்ள இடங்களில் வேலை செய்வதாலும், தன்னைவிட வயது முதிர்ந்த பெண்களிடம் தாம்பத்திய உறவு கொண்டாலும் அவர்களால் புத்திர பாக்கியம் அடைய முடியாத நிலை உள்ளது. அவர்களுக்கு முக்கூட்டு மருத்துவ சிகிச்சையால் உயிரணு உற்பத்தி செய்து புத்திரபாக்கியம் அடையச் செய்கிறோம்.

### பெண் மலட்டுத் தன்மைக்கான காரணங்கள்:

பெண்களில் கருப்பை ஓவரி வளர்ச்சியே இல்லாமல் இருப்பவர்களுக்கு வளர்ச்சியடைச் செய்கிறோம். வீட்டு விலக்கு ஒழுங்கில்லாதவர்களுக்கு ஒழுங்குபடுத்துகிறோம். சிலருக்கு வீட்டு விலக்கின் போது வரும் சூதக வயிற்றுவலியால் கருத்தரிக்க வாய்ப்பில்லாமல் போகும். இந்தக் குறையை முக்கூட்டு மருந்துகளால் நீக்கி கருத்தரிக்கச் செய்கிறோம்.

சில பெண்களுக்கு கருமுட்டை உற்பத்தி இருக்காது. இத்தகையவர்களை ஸ்கேன் மூலம் பரிசோதிக்கச் செய்து, கருமுட்டை உற்பத்தி நிலையை அறிந்து கருமுட்டை உண்டாக்கி கருவுறச் செய்கிறோம். பெண்களிடமுள்ள பிரதான பெரிய பிரச்னை, கருக்குழாயில் சதை அடைப்பு ஏற்படுவது. அதை முக்கூட்டு மருந்துகளால் கரைத்து அடைப்பை நீக்கி கருத்தரிக்க செய்கிறோம்.

சென்னை புதுப்பேட்டையைச் சேர்ந்த ஒரு முஸ்லிம் தம்பதிகளுக்கு எங்கள் வைத்தியத்துக்குப் பின், இரட்டைக் குழந்தை பிறந்தது.

பெங்களூர் ஜெயநகரைச் சேர்ந்த வள்ளி - சேகர் தம்பதியருக்கு எங்கள் சிகிச்சை மூலம் அண்மையில் பெண் குழந்தை பிறந்துள்ளது.

சென்னை குரோம்பேட்டையைச் சேர்ந்த ராஜா - அலமேலு தம்பதியர் திருமணமாகி நான்கு வருடங்கள் குழந்தை இல்லாதிருந்து, அவர்களுக்கு முக்கூட்டு சிகிச்சையளித்ததில், திருமதி ராஜா வுக்கு கடந்த 6.3.2001 அன்று ஆண் குழந்தை பிறந்துள்ளது.

பெங்களூரில் வசிக்கும் ஒரு தம்பதியினருக்கு 20 ஆண்டு காலம் குழந்தை இல்லாமல் இருந்து முக்கூட்டு மருத்துவத்தின் மூலம் குழந்தை பிறந்துள்ளது. மதுரையைச் சேர்ந்த அரசாங்கத்தில் பணிபுரியும் ஒரு மாவட்ட அதிகாரிக்கு 23 ஆண்டு காலம் குழந்தை இல்லாதிருந்து எங்களிடம் சிகிச்சை பெற்ற அவரது மனைவிக்கு கடந்த 5.6.2000ல் பெண் குழந்தை பிறந்துள்ளது.

❍ சென்னை கிண்டியில் கோபால் – சித்ரா தம்பதிகளுக்கு பல ஆண்டுகள் குழந்தை இல்லாமல் இருந்து எங்கள் முக்கூட்டு சிகிச்சையினால் பெண் குழந்தை பிறந்துள்ளது.

❍ விழுப்புரம் மாவட்டம் செஞ்சி அவலூர் பேட்டையில் சந்திரமூர்த்தி தம்பதிகளுக்கு ஆண் மகன் பிறந்துள்ளது.

❍ சென்னை, வடபழனி, கங்கையம்மன் கோயில் தெருவைச் சேர்ந்த, எங்களிடம் சிகிச்சைப் பெற்ற ஒரு முஸ்லீம் பெண்மணி புத்திரபாக்கியம் அடைந்துள்ளார்.

❍ தஞ்சாவூர் புரசகுடியில் சௌந்தர்ராஜன் - வனரோஜா தம்பதிகளுக்கு ஒரு பையன் பிறந்துள்ளது. மீண்டும் வனரோஜா தற்போது கர்ப்பமாக உள்ளார்.

❍ பாண்டிச்சேரி கணபதிபட்டில் சாந்தி செல்வராஜ் தம்பதிகளுக்கு பெண்ணும், பையனும் பிறந்துள்ளார்கள். சென்னை அரும்பாக்கத்தைச் சேர்ந்த, உயிரணு உற்பத்தி ஆகியும், கருக்குழாய் அடைப்பு நீங்கியும் தற்போது 6மாத கர்ப்பவதியாக உள்ள திருமதி தமிழரசி - முருகன் தம்பதிகள்.

இப்படி எங்கள் சிகிச்சையில் பல ஊர்களில் மாதா, மாதம் குழந்தைகள் பிறந்து கொண்டிருக்கின்றன.

எங்கள் மருத்துவமனையில், தமிழ்நாட்டில் எல்லா மாவட்டங்களிலிருந்தும், இந்தியாவின் அனைத்து மாநிலங்களிலிருந்து வந்தும்; அயல்நாடுகளில் அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்ஸ், கனடா, சுவிட்சர்லாந்து, நியூசிலாந்து, சவுதி அரேபியா, துபாய், குவைத், பக்ரைன், ரியாத், ஓமன், இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், ஜெர்மனி போன்ற வெளிநாடுகளில் இருந்து வந்தும் சிகிச்சை பெற்று பயனடைந்து வருகிறார்கள்.

எங்களிடம் சிகிச்சை பெற்று கர்ப்பமடைந்தவர்கள் கர்ப்பமடைந்த பின் 6 மாதம் வரை ஆங்கில மருத்துவர்களிடம் சென்று ஆங்கில மருந்துகளைச் சாப்பிட்டால் கருச்சிதைவு ஏற்படவும் வாய்ப்புண்டு என்றார்'' **டாக்டர் அர்ஜுனா**. சுகப்பிரசவத்திற்கு மருந்து உண்டு என்கிறார் அவர்.

நீங்களும் குறைந்த செலவில் புத்திரபாக்கியம் அடைய **டாக்டர் ஏ. அர்ஜுனா**, அவரது மனைவி **டாக்டர். வி.ஏ.ஆண்டாள்** அவர்களை அணுகவும்.



• டாக்டர் அர்ஜுனா, டாக்டர் V.A. ஆண்டாள் அர்ஜுனா




2002 மே 5
சித்ரபானு சித்திரை 22
மலர் : 60
இதழ் : 40

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## அயோத்தி கொள்ளு; குஜராத் கடிவாளம்!

"இன்றைய குஜராத் பிரச்னை ஒரு மாநிலத்தின் சட்ட ஒழுங்கு பிரச்னை மட்டுமல்ல; மாநிலத்தைக் காப்பதும், அதனை உள்நாட்டுக் கலவரங்களிலிருந்து மீட்பதும் அரசியல் சாசனப்படி அங்கு ஆட்சி நடக்க உதவுவதும் மத்திய அரசின் பொறுப்புகளுள் ஒன்று" என்பதாக மக்களவைத் துணைத் தலைவர் சையீது தீர்ப்பளித்துவிட்டார்.

குஜராத் பிரச்னை ஒரு தேசிய பிரச்னை அல்ல என்று கூறுவது அயோத்தி பிரச்னை ஒரு தேசிய பிரச்னை அல்ல; அது உத்தரப்பிரதேசத்தின் பிரச்னை என்று சொல்வதற்கு ஒப்பாகும்! அயோத்தி பிரச்னை குறித்து நாடாளுமன்றம் ஏன் கவலை கொள்ள வேண்டும்? உ.பி. அரசு அதைக் கையாண்டு கொள்ளும் என்று மத்திய அரசோ பிரதமரோ சொல்லத் துணிய மாட்டார்கள். குஜராத் விஷயத்தை விவாதிக்க ஆரம்பித்தால், மோடி அரசின் சாயம் வெளுத்துப் போகும். மத்திய அரசு கவிழாவிட்டாலும் மோடி பதவி விலகியாக வேண்டிய சூழ்நிலை உருவாகும் என்ற அச்சம்தான் வாஜ்பாய் அரசைத் தயங்கச் செய்தது.

இறுதி முடிவை சையீதிடம் விட்டது நல்லதே என்றாலும் இதற்காக ஆறு நாட்கள் நாடாளுமன்றத்தின் காலம் வீண்டிக்கப்பட்டதும் வாஜ்பாய் அன்ட் கோ கண்டனத் தீர்மானத்துக்கு ஒப்புக்கொள்ளாமல் இழுக்கடித்து இறுதியில் சம்மதித்ததும் நேர விரயம்




மட்டுமல்ல; பண விரயமும் கூட. நாடாளுமன்றக் கூட்டத் தொடரின் நாள் ஒன்றுக்கு இரண்டு கோடி ரூபாய் மக்களின் வரிப்பணம் செலவாகிறது என்பது குறித்து மன்ற உறுப்பினர்கள் சற்றும் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. அர்த்தமற்ற பிடிவாதங்களில் வீணடிக்கப்பட்ட நேரத்தில், குஜராத்தில் புதிது புதிதாக வன்முறைக் கொடூரங்கள் அரங்கேறியிருக்கின்றன. மனித உரிமை கமிஷனைத் தொடர்ந்து, தேசிய பெண்கள் கமிஷனும் குஜராத் நிலவரம் குறித்து அறிக்கை ஒன்றைச் சமர்ப்பித்திருக்கிறது - அம்மாநில காவல் துறையின் அத்துமீறல்களை அடுக்கியிருக்கிறது. வேலியே பயிரை மேய்வதைச் சுட்டிக் காட்டியிருக்கிறது.

இவ்வளவு தாமதத்தையும் சேதத்தையும் தவிர்க்கும் விதமாக, பிரதமர் ஆரம்பத்திலேயே மோடி பதவி விலக வேண்டும் என்று கண்டிப்புக் காட்டியிருக்கலாம். அவ்வாறு செய்யத் தவறியதோடு, குஜராத் பிரச்னையைப் பிரதமர் சர்வ சாதாரணமாகக் கருதி, ஒன்றுமில்லை என்பது போல் பேசியது மிகவும் கேவலம்.

மக்களவை விவாதத்துக்கு ஒப்புக் கொள்ளும் நேரத்தில்கூட, விவாதம் எந்த விதியின்கீழ் அனுமதிக்கப்பட வேண்டும் என்ற வாக்குவாதம் எழுந்திருக்கிறது. விவாதத்தின் பின் வாக்கெடுப்பைத் தவிர்க்க முயன்று தோற்றுவிட்டார் வாஜ்பாய்.

வாக்கெடுப்பில் தோல்வியுற்று மத்திய அரசு தார்மிகப் பொறுப்பேற்று ராஜினாமா செய்ய வேண்டி வருமோ என்கிற அச்சம் இப்போது எழுந்திருக்கிறது. அப்படிப்பட்ட அச்சத்துக்கு அவசியமின்றி முதலிலேயே தார்மிகப் பொறுப்புடன் நடந்து கொண்டிருந்தால், கண்டனத் தீர்மானத்துக்கே அவசியம் இல்லாது போயிருக்கும்.

குஜராத் குறித்த விவாதமும் கண்டனத் தீர்மானமும் வாக்கெடுப்பும் மாநிலங்கள் அவையிலும் நடைபெற இருக்கின்றன.

விவாதங்களில் பல புதிய கருத்துகளும் உண்மைகளும் வெளிவரலாம். வாஜ்பாய் அரசு




வரலாறு காணாத வகையில் கண்டிக்கப்படலாம். மோடி கூட பதவி விலக நேரலாம்.

ஆனால், என்ன நடந்தாலும் இதுவரை தொலைத்த உயிர்களையும் இழந்த நேரத்தையும் பொருளையும் ஈடுகட்ட முடியாது. மஹாராஷ்டிராவை அடுத்து மிகப் பெரிய தொழில் மாநிலம் குஜராத்தான்.

கடந்த பிப்ரவரி 27க்குப் பிறகு குஜராத் தொழில்துறை முடங்கிவிட்டது. உற்பத்தி பாதிக்கப்பட்டுள்ளதால் நாளொன்றுக்கு ஐம்பது கோடி ரூபாய் நஷ்டப்படுகிறது இம்மாநிலம். ரிலயன்ஸ், டாடா போன்ற அகில இந்திய நிறுவனங்கள் தவிர மற்றவை திண்டாடுகின்றன. இன்ஷூரன்ஸ் நிறுவனங்கள் நஷ்ட ஈடு விண்ணப்பங்களைப் பரிசீலித்து மாளவில்லை. குஜராத் பெற்றிருக்க வேண்டிய அயல்நாட்டு முதலீடுகளும் தடைபட்டிருக்கின்றன. ஐந்நூறு மில்லியன் டாலர் முதலீடு செய்யவிருந்த பிரிட்டிஷ் காஸ் கம்பெனி இப்போது யோசிக்கிறது. மார்ச் மாதம் கிளைகளைத் திறக்கவிருந்த மாக்டொனல்ட் ஃபாஸ்ட் ஃபுட்ஸ் தனது திட்டத்தை ஒத்திப் போட்டு விட்டது.

குஜராத் பூகம்பத்தால் பாதிக்கப்பட்ட தொழிலகங்கள் நிமிர்வதற்குள் மற்றும் ஓர் அடி பலமாக விழுந்திருக்கிறது.

அன்னியச் செலாவணி வரவு அதல பாதாளத்துக்கு இறங்கிவிட்டது.

இத்தனையும் மாநில அளவிலான பிரச்னைகள்தானா? குஜராத்தில் நம் சகோதரர்கள் படும் துயரங்கள் வெறும் உள்ளூர்ப் பிரச்னைதானா...? வாஜ்பாய் அரசை இரு அவைகளும் தட்டிக் கேட்கப் போகின்றன. அதற்கு முன் பிரதமரும் அவரது சகாக்களும் தங்களைத் தாங்களே தட்டிக் கேட்டுக் கொள்வது நல்லது. அயோத்தியில் ராமர் கோயிலுக்கு நாடு தழுவிய ஆதரவு வேண்டும்; ஆனால் அதன் விளைவான வன்முறைகளை தேசத்தில் யாருமே எதிர்க்காமல் மௌனமாய் இருக்க வேண்டும்! குதிரை, கொள்ளு என்றால் வாய் திறந்து, கடிவாளம் என்றால் மூடிக்கொள்ளும் கதைதான்! ○

# போண்டியாகுதா பாண்டி?




"குபேர், வெங்கடசுப்பா ரெட்டியார் போன்றோர் காலத்தில் அடிக்கல் போடப்பட்ட தொழில் வளர்ச்சி, விற்பனை வரிச் சலுகை, குறைந்த மின் கட்டணம், தண்ணீர் வசதி ஆகிய காரணங்களால் புதுவை மாநிலம் ஆலமரமாய்த் தழைத்தது. ஐந்தாறு ஆண்டுகளுக்கு முன்னர்தான், புதுவை நகரத்தைச் சுற்றி தொழிற்சாலைகள் உருவாயின. ஆனால் இன்றுள்ள சூழ்நிலையில் தொழில் வளர்ச்சி மந்த நிலையை அடைந்திருக்கிறது. இதைச் சரி செய்யாவிடில் சுத்தமாகப் படுத்துப் போய்விடும் ஆபத்திருக்கிறது'' என்று அபாய மணி அடிக்கிறார் புதுவை தொழில் வர்த்தக கழகச் செயலாளரான ஏ. பாலசுப்பிரமணியம்.



ஏ. பாலசுப்பிரமணியம்

"பெரிய தொழில்களை விலக்கி விட்டுப் பார்த்தால் இன்று, தட்டாஞ்சாவடி, மேட்டுப்பாளையம், கிருமாம்பாக்கம், சேகராப்பட்டு ஆகிய இடங்களில் உள்ள தொழிற்பேட்டைகளில் நூற்றுக்கும் அதிகமான தொழிற்சாலைகள் மூடப்பட்டிருக்கின்றன. இதனால் ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். சமச்சீர் வரியை அமுல்படுத்தியதால் பாண்டியில் வியாபாரம் சரிந்துவிட்டது. முன்பெல்லாம் குறைவான வரி விதிப்பு காரணமாக, தமிழகத்திலிருந்து ஏராளமானோர் வீட்டு உபயோகப் பொருட்கள், ஸ்கூட்டர்கள், கார்கள் வாங்க புதுவைக்கு வருவார்கள். இப்போது அந்த நிலை மாறிவிட்டது. இதனால் மக்களின் வருகை குறைந்து ஹோட்டல்கள், லாட்ஜ் வருமானம் பாதிக்கப்பட்டு மக்கள் கையில் பணம் புரள்வதும் சிக்கலாகி விட்டது."

"சமச்சீர் வரியை அமுல்படுத்த புதுவை அரசு ஒப்புக்கொண்டிருக்கக்கூடாது'' என்றும் அடித்துச் சொல்கிறார் பாலசுப்பிரமணியம்.

'பிரெஞ்சு கலாசாரத்தின் ஜன்னல் பாண்டிச்சேரி' என்றார் நேரு. எங்கள் மக்கள் விரும்பும் வரை கலாசாரம், பொருளாதாரம் ஆகிய விவகாரங்களில் எந்த பிற மாநிலங்களின் பார்வையைத் திணிக்கக்கூடாது என்றும் சொன்னார் அவர். ஆனால் இப்போது சமச்சீர் வரி முறை திணிக்கப்பட்டு பொருளாதாரம் பாழ்பட்டு நிற்கிறது. புதுவை அரசு கொடுத்த சலுகைகளால் 75 சதம் வெளி மாநிலத் தொழிலதிபர்கள்தான் இங்கு தொழில் துவங்கி பயன்பெற்றார்கள். இப்போது இருக்கும் ஒவ்வாத சூழலால் அவர்களும் மூடிவிடுவோமா என்று யோசித்துக்கொண்டிருக்கிறார்கள். உற்பத்திக்கு வேண்டிய மூலப் பொருட்களை நான்கு சதம் வரி கட்டித்தான் புதுவை மாநிலத்துக்குள் கொண்டு வர வேண்டும். அந்த நிலையில் உற்பத்தியாகும் பொருளின் விலை அதிகமாகி மார்க்கெட்டில் போட்டியிடுவது மிகவும் கடுமையாகிவிடுகிறது. உணவுப் பொருட்கள், பருப்பு வகைகள் தவிர மற்ற எல்லாவற்றிற்கும் இப்போது இங்கு வரி விதிப்பு அதிகம். உடனடியாக அரசு எதாவது செய்ய வேண்டும். அப்போதுதான் சரிந்து வரும் தொழில் வளர்ச்சியைத் தூக்கி நிறுத்தி வேலை வாய்ப்பை பெருக்க முடியும்'' என்று முத்தாய்ப்பாகச் சொல்கிறார் பாலசுப்பிரமணியம்.

- கௌசி

# காதல் இல்லீங்கோ!

புதுவை வாழ் பிரெஞ்சுக்காரர்கள், நாய்களோடு வாக்கிங் வரும் உள்ளூர்வாசிகள், வெளியூர், வெளிநாட்டு சுற்றுலாப் பயணிகள் என்று நிரம்பி வழிகிறது கடற்கரை. வாஞ்சையோடு அலைகளில் கால் நனைக்க நினைக்கிற யாருக்கும் புதுவைக் கடற்கரையில் அது சாத்தியமல்ல. காரணம் கடல் அரிப்பைத் தடுக்க வேண்டி கொட்டப்பட்ட பாறைகளில் மோதிக் கொண்டிருப்பதால், அங்கே மணல் தொலைத்துப் பொருமிக் கொண்டிருக்கிறது வங்கக் கடல். ஆனால் கொட்டப்பட்ட பாறைகளை ஒட்டிக் கட்டப்பட்டிருக்கும் தடுப்புச் சுவரில் அமர்ந்து ஜாலியாக உப்புக் காற்றை சுவாசிக்கிறார்கள். காதலர்கள் தடுப்புச் சுவரைத் தாண்டி பாறைகளின்மீதே நெருக்கமாய் உட்கார்ந்து கொள்கிறார்கள். காதல் தரும் தைரியம்!

தடுப்புச் சுவரில் அமர்ந்து சிரித்துப் பேசிக் கொண்டிருந்த இளம் ஜோடியை நெருங்கினோம். இளைஞர் பிரெஞ்சுக்காரர் என எண்ணி பேச்சுக் கொடுத்தால் "ஜீசஸ்... நான் ப்யூர் கனடியன்" என்று ஆங்கிலத்தில் அலறினார், இருபத்தைந்து வயது கிரேக் லெவிஸ்.

"கனடாவிலிருந்து வெளிவரும் ஆங்கில சஞ்சிகைகளில் எழுதிக் கொண்டிருக்கிறேன். ஒரு சர்வதேச காலமிஸ்ட் ஆவதுதான் லட்சியம். இவர் மிஸ் சிமா நாயர். ஆரோவில் நகர் பற்றி கட்டுரை எழுத கடந்த ஆண்டு புதுவை வந்தேன். ஆரோவில்லுக்குச் சுற்றுலா வந்திருந்த சிமாவை அங்கே முதன் முதலாய் சந்தித்தேன். ஆரோவில் பற்றி சிமா எனக்கு முழுமையாக எடுத்துரைத்த பின்னர் நான் எழுதிய கட்டுரைக்குப் பாராட்டுகள் குவிந்தன. இன்ப அதிர்ச்சியாக சிமாவும் கனடாவில்தான் உயர்கல்வி படிக்கிறார் என்று தெரியவந்ததும் எங்கள் உறவு இன்னும் ஒருபடி உயர்ந்து விட்டது" என்று சிரித்தார்.

"நாங்கள் தூய்மையான நண்பர்கள்! காதலர்கள் என்று எழுதி விடப் போகிறீர்கள், கவனம்!" என்று எச்சரித்தார் சிமா நாயர். பிறந்து வளர்ந்தது பெங்களூரிலாம்.




ஒரு கேரளத்து பெண் குட்டியையும், ஒரு கனடியயவனரையும் இணைத்து வைக்கிற கலாசாரப் பாலமாக விளங்கும் புதுவைக்கு வாழ்த்துகள்!





கலங்கிற்று. அதுவரை விளையாட்டாக இருந்த நான், சீரியஸானேன்.

அப்போதுதான் எனக்குக் கவலை வந்தது. ஆனால் பயம் வரவில்லை. என் கவலையெல்லாம் என் மனைவியைப் பற்றித்தான். உலகத்தையே என் கண்கள் மூலமாகத்தான் பார்ப்பார். பிள்ளைகள் இருவரும் அமெரிக்காவில். தனியாக என்ன செய்வாள்? "இப்படி இவளைத் தனியாக இருக்கச் செய்துவிட்டாயே, தெய்வமே" என்று கலங்கினேன்.

ஜாதகத்தைக் காண்பித்தேன். "ஆபத்து வரும். ஆனால் பிழைத்து விடுவாய்" என்று கூறினார்கள். நான் மரணத்திற்குத் தயாராகத் தொடங்கினேன். என்னை எல்லாப் பந்தங்களிலிருந்தும் கழற்றிக் கொள்ள முற்பட்டேன். நான் வாழ்க்கையை மிகச் சாதாரணமாக எடுத்துக் கொண்டேன்.

# எண்ணம் அழகானால்...

பயாப்ஸி ரிப்போர்ட் கேன்ஸர் என்று உறுதி செய்தது. நான் ஒரு தீர்மானமான புற்று நோயாளியானேன். கீமோதெரபி தந்தார்கள். வாயிலெடுப்பு, விக்கல், உணவில் வெறுப்பு, நிறம் கறுத்துப் போதல், தலைமயிர் கொட்டுதல் என்று ஏராளமான பக்க விளைவுகள். உடல் இளைத்தது. எப்போதும் படுத்துக்கொண்டே இருந்தேன். கண் பார்வையும் மங்கிற்று. "நான் இருந்து என்ன செய்யப் போகிறேன்? போய்விட்டால் பிரச்னை தீர்ந்துவிடுமே?" என்று எண்ணத் தலைப்பட்டேன். அதிர்ஷ்டவசமாக டியூமர் குறையத் தொடங்கிற்று.

பன்னிரண்டு சிட்டிங் ஆயிற்று. மிக வேதனையான அனுபவம். அதையெல்லாம் எப்படிப் பொறுத்துக்கொண்டேன். ஆச்சரியமாக இருக்கிறது. உறைப்பில்லாமல் சாப்பிட வேண்டும். சாப்பாடு பிடிக்காது. கறிகாய் மீது வெறுப்பு. பழங்களைக் கண்டால் குமட்டல். புழுங்கலரிசிக் கஞ்சி, சக்தி பான் ஆகிய திரவங்களை, சிறு இடைவெளிகளில் சாப்பிட்டேன்.

டாக்டர் சுப்பிரமணியம் என்னை டாக்டர் ஆர். சுரேந்திரனிடம் மீண்டும் அனுப்பினார். குடல் அறுவை சிகிச்சை செய்ய ஐந்து மணி நேரம் ஆயிற்று. ஹை ரிஸ்க் ஆபரேஷன் தான். ஆனாலும் நல்லபடியாக முடிந்தது. தெய்வ அருளால் எந்தவிதச் சிக்கலும் இல்லாமல் நிதானமாக முன்னேறினேன்.

மனத்தில் ஆரோக்கியமான சிந்தனை, குணமாகி விடும் என்கிற நம்பிக்கை, போராடும் மனோபலம் ஆகியவை அவசியம். புற்றுநோயோடு போராட மருந்துபாதி, மனம்பாதி.

எண்ணம் அழகானால் எல்லாம் அழகாகும்.

நல்ல நினைவுகள் நம்மை வாழ வைக்கின்றன.

நவம்பர் மாத இறுதியில் மாலை நேரங்களில் மெலிதான ஜுரம் வந்தது. 99.4° வரை போகும். பலவிதப் பரிசோதனைகள் செய்த டாக்டர் வி. பார்த்தசாரதி, இறுதியாக அடிவயிற்றை சோனோகிராம் எடுத்துப் பார்த்தார். ரத்தம் தோய்ந்து கட்டியாயிருப்பதாக ரிப்போர்ட் கூறிற்று.

இதுதான் தொடக்க நிலை.

என் மனைவி டாக்டரைப் பார்த்து "பயப்பட ஒன்றுமில்லையே டாக்டர்?" என்று கேட்டிருக்கிறார். "அப்படிச் சொல்ல முடியாது. இது ஒரு சீரியஸ் கேஸ்தான்" என்று கூறவும், என் மனைவி அழுது கொண்டே அறைக்கு வந்தாள். அவள் அழுகையைப் பார்த்ததும் எனக்கு முதல்முறையாக வயிறு

நன்றி : **இலக்கியப் பீடம்** (ஏப்ரல் 2002)

**எழுத்தாளர் ஜெயரதன் 17.04.02 அன்று காலமானார்.**

# காத்திருந்த கவிதை

வர்ஷா

"பிடி, பிடி... டேய் பரத்... அதைப் பிடிடா..." நாற்காலியைத் தள்ளி, மேஜை மேல் விழுந்து, புரண்டு, எழுந்து, தண்டால் எடுத்துக்கொண்டிருந்த பரத்தின் முதுகு மேல் ஒரு மிதி மிதித்து அவனைத் தாண்டி, சுவரோரம் இருந்த தண்ணீர் ஜாடியை உதைத்துத் தள்ளி, இரண்டு கைகளையும் விரித்தபடி ராக்கெட் வேகத்தில் ஜன்னலை நோக்கிப் பாய்ந்தான் சரவணன்.

கடைசியில் அவனை ஏமாற்றிவிட்டது அந்தத் துண்டுக் காகிதம். அவனின் பிரம்மப் பிரயத்தனங்களுக்குப் பயப்படாமல் ஜன்னல் கம்பிகளுக்கிடையில் நுழைந்து, பறந்து, ஒரேயடியாக மறைந்தே போனது.

அசந்து சோர்ந்து போனது மனசு. ஜன்னல் கம்பி மேலேயே தலையை முட்டிக் கொண்டான் சரவணன்.

"ரூபா நோட்டாடா?" பரத் கேட்டான்.

"ப்ச்ச்... இல்லைடா..."

"பின்னே?"

"ஒரு கவிதை..."

பற்றிக்கொண்டு வந்தது பரத்துக்கு.

"அந்த உதவாத கவிதை பேப்பருக்கா இந்த ரகளை? என் முதுகில் பள்ளமே தோண்டிட்டியேடா... பாவி உன்னை" அறையைச் சுற்றிலும் பார்வையைச் சுழலவிட்ட பரத்தின் கைகளில் சரவணனை அடிப்பதற்கு வாகாக எந்த ஒரு பொருளும் சிக்காததால் தப்பித்தான் சரவணன்.

"நல்ல கவிதைடா. எனக்கே ரொம்பப் பிடிச்சிருந்தது. எழுதி முடிச்சிட்டு திரும்ப ஒரு தடவைப் படிச்சிக் கூடப் பார்க்கலைடா... அதுக்குள்ளே பறந்துடுச்சு."

"பேப்பர், இங்க், கூடவே நேரம்... எல்லாத்தையும் வேஸ்ட் பண்ணிக் கண்டதைக் கிறுக்கிட்டு... அது தொலைஞ்சிடுச்சுன்னு ஒப்பாரி வேறேயா? ஏய் சரவணா, கவிதையை நீதானே எழுதினே? வேறே பேப்பர் எடுத்து மறுபடி எழுதித் தொலைச்சுக்க வேண்டியதுதானே?"

பரபரத்தான் சரவணன். பறந்து போன கவிதை மறந்து போவதற்கு முன்பாக அதை எழுத்தில் பதிவு செய்துவிட வேண்டும். தொலைந்து போன வரிகளை மீட்டெடுக்க முயற்சித்தது அவன் ஞாபகம்.

*கனவு தேசத்துத் தெருக்களில்*
*கைகோத்தபடி உன்னோடு*
*நான்.*
*இமைவிழி சரம் சிந்தி*
*விழிமூடிக் காத்திருக்கிறேன்*
*யுகம் யுகமாய்.*

இதற்குப் பிறகு என்ன? இன்னும் இரண்டு வரிகள் எழுதியதாக நினைவு. என்ன அவை? மூளையைக் கசக்கோ கசக்கு என்று கசக்கியும் கவிதையின் கடைசி வரிகள் சரவணனிடம் சிக்க மறுத்தன.

ச்சே... இந்தக் கவிதைகளுடன் இதுதான் தொல்லை. கத்தையாக பேப்பரை எடுத்து வைத்துக்கொண்டு, எவருமற்ற அமைதி தனிமைப் பிரதேசம் உருவாக்கி, அதிகாலை காற்றைப் போல இதமான ஒரு கவிதை எழுதியே தீர்வது என்று சங்கல்பித்துக்கொண்டு யோசித்தால், கவிதையென்ன, ஒரு எழுத்து கூட சிக்காது. எழுதுகிற ஆசை மட்டும் இதயம் முழுக்க வியாபித்துக் கிடக்கும். கிடைக்காத கவிதை மனசைக் கலங்கடிக்கும். உயிரை வலிக்க வைக்கும்.

"அஸ் பர் திஸ் மீட்டிங், தி கம்பெனி டிசைட்ஸ் டு இண்ட்ரொடியூஸ் தி ஃபாலோயிங் ப்ராக்டீசஸ்" - நிர்வாக அபிவிருத்தியை முன்னிட்டு, கம்பெனியின் அதி முக்கிய நடவடிக்கை மாற்றங்களை முனைப்போடு சேர்மேன் பேசிக் கொண்டிருக்கையில், அழையா விருந்தாளியாக



'என்னை எழுதுகிறாயா?' என்று கேட்டுக் கொண்டு நினைவில் உரசும் அழகான கவிதை.

'கொஞ்சம் பொறு, என் இனிய கவிதையே! சந்திப்புக் கூட்டம் முடியட்டும். உன்னைக் காகிதத்தில் பதிய வைக்கிறேன். அதுவரை அங்கேயே... என் நினைவிலேயே இரு. போய் விடாதே...!'

கெஞ்சுகிற கெஞ்சல்களை எல்லாம் சுத்தமாக அலட்சியப்படுத்திவிட்டு, கைதட்டல் ஒலியோடு கூட்டம் முடித்ததும், சட்டென காகிதமும் பேனாவும் தேடுகிற அந்தத் துரித கணத்தில்... ஒரு மந்தகாசப் புன்னகையை வீசிவிட்டு மறைந்தே போய்விடும் கவிதை. மறந்தே போய்விடும்.

ஸ்பரிச சுகம் தந்து, கைகளில் சிக்காமல் கரைந்துவிட்ட மெல்லிய தென்றலைப் போல ஆகிப் போகும், எட்டிப் பார்த்துவிட்டு, விட்டு விட்டு ஓடிப் போன கவிதையின் கதை.

இப்போதும் அப்படித்தான் ஆகிப் போனது. கடைசி இரண்டு வரிகள் இல்லாத கவிதை மூளியாகத் தெரிந்தது. ஒற்றைக் கொலுசு மாதிரி முழுமையாகாமல் தவித்த மிச்சக் கவிதையைப் பத்திரப்படுத்தினான் சரவணன்.

சரத் தலையைத் துவட்டியபடி வந்தான் பரத். "சினிமாவுக்குப் போறேன். வர்றியா?"

"ம்ஹூம்."

"உன்னைக் கேட்டதே வேஸ்ட். எப்ப நீ சினிமா, ஹோட்டல்னு சுத்தியிருக்கே? ஒண்ணு ரூமுக்குள்ளே இருந்து இண்டோர்ல கனவு காணுவே. இல்லே, பீச்சில் கிடந்து அவுட்

டோரில் கனவு காணுவே. ஒன்னு சொல் றேன், கேட்டுக்க நண்பா. கனவு மட்டுமே வாழ்க்கையில்லை. கண்ணைத் திறந்து நினை வுலகத்தையும் பார்க்க கத்துக்க, வரட்டா?"

பரத் போய்விட்டான்.

முகம் திருப்பி பார்வையை எதிர்ப் பக்க ஜன்னலை நோக்கி வீசினான் சரவணன்.

அருகாமை குடியிருப்பின் பால்கனி தெரிந்தது.

மஞ்சள் நிறப் பந்து. அதைக் கை கொள் ளாமல் பற்றியபடி ஒரு சிறுமி. நழுவுகிறப் பந்தைப் பிடிப்பதும், பிடித்ததை மறுபடி நழுவ விடுவதுமாக இருந்த சிறுமியின் விளையாட்டுக் காட்சியை ரசனையோடு கவனித்தான் சரவணன். அந்தப் பொழுதில் அங்கே பிரசன்னமானாள் அந்தப் பெண். இருபது இருபத்திரண்டு வயதிருக்கலாம். பந்து, சிறுமி, அந்த இளம் பெண் என, விழுவதும், எழு வதும், எட்டிப் பிடிப்பதுமான உற்சாக விளை யாட்டு.

கொஞ்ச நேரத்தில் சிறுமியைத் தூக்கிக் கொண்டு உள்ளே போய்விட்டாள் அந்தப் பெண். பால்கனி சட்டென்று வெறிச்சோடிப் போனது. பார்வையை அறையின் உள்ளே திருப்பினான் சரவணன்.

கண்களில் விழுந்த கடிகார முட்கள், பசித்த வயிறை நினைவுபடுத்தின. உணவகம் நோக்கிப் படியிறங்கினான். பறந்து போய்விட்ட அந்தக் கவிதையின் கடைசி இரண்டு வரிகள் என்ன? கேள்வி ஆயிரம் வண்டுகளாகி சரவணனைத் துளைத்தது. குடைச்சலில் உள்ளம் வலித்தது.

எங்கே பார்த்தாலும் காதல் நடக்கிறது. காதலனோ, காதலியோ அனைவருக்கும் இருப்பது மாதிரிதான் தெரிகிறது. என்னவளே, நீ மாத்திரம் எங்கே போனாய்? எனக்கான தேவதையே, என் உள்ளே வானம் காத்துக் கிடக்கிறது. உன் வெள்ளைச் சிறகுகள் விரிய வேண்டி... கனவுகளில் என்னோடு சேர்ந்து என் கவிதைகளைப் படிக்கிறப் பெண்ணே! எப்போது வரப் போகிறாய் நேரில்?

லாட்ஜுக்கு வெளியே புல் தரையில் நடந்து கொண்டிருந்த சரவணனின் மனத்தில் ஆயிரம் கேள்விகள் கால் முளைத்துக் கொண்டிருந் தன.

சரவணனின் ஏக்க சிந்தனைகளை நிறுத் தியது அவன் காலில் இடறிய ஒன்று. மஞ்சள் நிறப் பந்து... எங்கேயோ பார்த்திருக்கிறோமே இந்தப் பந்தை. விழிகள் சுற்றுப் புறத்தைத் துழா வின.

அருகாமையில் தென்பட்டார்கள் அந்தப் பெண்ணும் சிறுமியும். ஓ! பக்கத்து வீட்டுப் பால்கனி...

அந்தப் பெண் சரவணனை நெருங்கினாள்.

"பால்..."

கொடுத்தான். வாங்கிக்கொண்டு புறப் பட்டவள் இரண்டடி நடந்த பிறகு சட்டென்று திரும்பினாள். "நீங்க பாரதி லாட்ஜில்தானே இருக்கீங்க?"

"ஆமாம்."

"நான் உங்களுக்குப் பக்கத்து வீடுதான்..."

"தெரியும். பார்த்திருக்கேன்."

"உங்ககிட்டப் பேசணும்..."

என்ன பேசப் போகிறாள்?

'பாட்டை ஏன் இப்படி அலற விடுறீங்க?' - கோபமாகக் கத்தப் போகிறாளோ?

'ஜன்னல் வழியாகக் கண்டதைப் போடாதீங்க. வீடெல்லாம் குப்பையாயிடுது' - காரமாகத் திட்டப் போகிறாளோ?

'அர்த்த ராத்திரியில் ஏன் அவ்வளவு நேரம் கூச்சலும், சப்தமும்...?' ஆவேசப்படப் போகிறாளோ?

பரத்தின் மனத்தில் எழுந்தக் கேள்வி களுக்கு அந்தப் பெண் பதில் பேசும் முன்...

"ஆர்த்தி..." தூரத்திலிருந்து ஒரு பெண் குரல் அழைத்தது.

"அக்காதான் கூப்பிடுறா. இது அவ பொண்ணுதான். என் பேர்... அதான் கேட் டீங்களே... ஆர்த்தி..." அவசரம் அவசரமாகப் பேசினாள் அந்தப் பெண்.

"ஆர்த்தி..." மறுமுறை குரல் ஒலிக்க,

"வந்துட்டேன்க்கா..."

சரவணனின் விழிகள் திரும்பவும் ஆகாயத்தையும் அலைகடலையும் வெறிக்கத் தொடங்கின. அவன் மனசு மறுபடியும் கனவு தேவதையுடனான தன் உரையாடலைத் தொடர்ந்தது.

அந்தப் பெண்... பெயர்கூட சொன்



"எல்.கே.ஜி பசங்க கூட சினிமா மோகத்துலே அலையுதுங்க..."
"எதனாலே சொல்றீங்க...?"
"A போடு, B போடு, O போடு, Z போடுன்னு பாடினாத்தான் ஒழுங்கா எழுதுதுங்க!"
- வந்தவாசி பா. ஜெயக்குமார்

னாளே...ம்...ஆர்த்தி... இப்போதெல்லாம் பால்கனி அருகில் அடிக்கடி தென்படு கிறாளே...

சரவணனின் எண்ணத்தை எதிரொலித் தான் பரத்.

''என்ன சரவணா, பக்கத்து வீட்டுப் பச்சைக்கிளி உன்னைச் சுத்தியே பறக்கற மாதிரி தெரியுது?''

"எல்லாம் உன் நினைப்பு."

"நீ வெளியே புறப்படற நேரம், திரும்பி வர்ற நேரம் அவளும் கரெக்டா தெருவில் ஆஜர். ஃபெவிகால் போட்டு ஒட்டின மாதிரி பால்கனியையே ஒட்டிக்கிட்டிருக்கா. அந்தப் பொண்ணு உன்னைப் பார்க்கிறப் பார்வை இருக்கே. இலட்சம் வோல்டேஜ் மின்னல் இல்லே தெறிக்குது? ஒண்ணுமே இருக்காதுங் கிற? உனக்குத் தயக்கமா இருந்தா சொல்லு. நான் பேசிப் பார்க்கிறேன்."

"சும்மா இருடா. நீ வேறே..."

"சும்மா இருக்கிறதா? அதெல்லாம் அறுபது வயதில். இப்ப உன் வயசு காதலிக்க வேண்டிய வயசு. உண்மையைச் சொல்லு சரவணா. உனக்கு அந்தப் பொண்ணு மேல ஒரு ஃபீலிங் குமா இல்லை?

"ப்ச்ச்... இல்லைடா."

"ரதி மாதிரி இருக்கா அந்தப் பொண்ணு. அவ கண்ணே சொல்லுது அவ உனக்காக உருகுறதை. இன்னும் என்னடா வேணும்? சட்டுனு சைட் அடிக்க ஆரம்பிச்சுடு. பேசிப் பாரு. பிடிச்சிருந்தா சடக்குன்னு ஐ லவ் யூ சொல்லி லைஃபை ஸ்டார்ட் பண்றா..."

"வெள்ளைத் தோலைப் பார்த்துட்டு என் னால காதலிக்க முடியாதுடா. என் கனவில் ஒருத்தி வர்றா. என் கவிதையை என்னோட சேர்ந்து ரசிக்கிறா. உருகுறா. அவளுக்காகத்தான் நான் காத்துக்கிட்டிருக்கேன். என் கவிதைக் காதலி... என் கனவுக் காதலி கண்டிப்பாக ஒரு நாள் என்னைத் தேடி வருவா..."

பரத்திடம் மறுப்பான பதிலைச் சொல்லி விட்டிருந்தாலும் ஆர்த்தியும் அவளின் நேசப் பார்வையும் சரவணனைப் பாதிக்காமலில்லை.

ஒன்றன் மேல் ஒன்றாக அடுக்கி வைக்கப் பட்டிருப்பவற்றில் இடையில் ஒன்றை மட்டும் உருவி எடுத்தது மாதிரி உள்ளம் சரிந்தது.

'எனக்கான என் தேவதை... என் ரசிகை நீயில்லை...'

சரிந்த உள்ளத்தை நிமிர்த்தி ஜன்னல் கதவைச் சாத்தினான் சரவணன்.

ஆனால் எதுவும் கலபத்தில் விடுவதாக இல்லை அவனை.

"சரவணா, பக்கத்து வீட்டுப் பொண்ணு இதை உங்கிட்ட கொடுக்க சொன்னா..."



''டீவி சீரியல் பார்த்து ஸின்ஸியரா அழறதுலே என் மனைவிக்கு இணையா யாருமே இருக்க முடியாது...''

''எப்படி அவ்வளவு உறுதியாச் சொல் றீங்க...?''

''டீவி ரிப்பேரானாக்கூட, கரெக்டா அந்த டயத்துக்கு அவளுக்கு அழுகை வந்துடும்!''

– அம்பை தேவா

---

ஒரு கடிதத்தை நீட்டினான் பரத். திகைத்த சரவணனிடம், "உலகம் ரொம்ப ஃபாஸ்ட் நண்பனே. பார்த்தியா, அவளே லெட்டர் கொடுத்துட்டா..."

சரவணன் சலிப்பானான். ''ஏண்டா லெட்டரை வாங்கினே?'' அசுவாரஸ்யமாக அந்தக் கடிதத்தை மேஜை மேல் விசிறினான்.

"என்னதான் எழுதியிருக்கான்னு படிச்சுப் பாரேன்..."

வேண்டா வெறுப்பாகக் கடிதத்தைப் பிரித்தான் சரவணன். மின்னலைத் தொட நேர்ந்தவன் மாதிரி ஆகிப் போனான். முகம் உடனடிப் பிரகாசத்துக்குப் போனது. தொடர்பின்றி கண்கள் ஈரத்தை வாங்கிக் கொண்டன.

"நா... நான் அவளைப் பாக்கணுண்டா..."

"முடியாது நண்பனே. அவங்க இன்னைக்கு வீடு காலி பண்ணிட்டு பாம்பேக்குப் போறாங் களாம்..."

புயல் பாய்ச்சலில் வெளியே தாவினான் சரவணன்.

''தாதர் எக்ஸ்பிரஸ் எந்த பிளாட் பாரத்தில் நிற்கும்?''

"இப்பதான் புறப்பட்டுப் போச்சு நைனா. காலாகாலத்துல வர வேணாம்? கோட்டை விட்டுட்டியே? லேட் பண்ணிட்டியே?''

உடைந்து போன சரவணனின் கைகளில் படபடத்தது அந்தக் காகிதம். அவன் எழுதிய கவிதைக் காகிதம். அவனை விட்டுப் பறந்து போன அந்தக் கடைசி இரண்டுவரிகளோடு.

*கண் திறந்தேன் கனவழிந்தது*
*காத்திருத்தல் மட்டும் என்னோடு.*

ரயிலின் 'பாம்' ஓசை வெகு தூரத்தில் சோகமாக ஒலித்தது. ○

# தேவையில்லை பார்மஸி!

அதிகம் அலட்டிக் கொள்ளாமல், ஓவர் ஆல் ஆரோக்கியத்தைக் கைவசப்படுத்திக் கொள்ள வேண்டும் என்று நீங்கள் நினைத்தால் அதற்கு ஓர் எளிய வழி இருக்கிறது. வீட்டைச் சுற்றி வேப்பமரம் வளர்ப்பதுதான்.

வேம்பின் அளப்பரிய பயன்களை உணர்ந்தேதான் கிராமப்புற வீடுகளில் செல்லப்பிள்ளையாக வேப்ப மரத்தை வளர்க்கிறார்கள். மாரியம்மன், வேம்புலியம்மன், காளியாத்தா என ஆயிரத்தெட்டு கோயில் இருந்தாலும், ஸ்தல விருட்சமாக வேம்பு நிற்கும். வேப்பமரமிருக்கும் பகுதியில் கிருமி தொற்றாது. பிராண வாயுவிலிருக்கும் மாசு குறையும். வேம்பு தரும் குளிர் காற்று, நோய் எதிர்ப்பு சக்தி கொண்டது.

அம்மை நோய் கண்டால், வேப்பிலை வைத்தியம் தவிர வேறொன்றை நாடுவதில் பயனில்லை என்பது நீங்களும் அறிந்தது தான். வேப்பிலையைப் பாயில் விரித்து படுக்க வைப்பார்கள். வேப்பிலையை அரைத்து உள்ளுக்குக் கொடுப்பார்கள். நோய் தணிந்ததும் வேப்பிலை, மஞ்சள் அரைத்துப் பூசி நீர் விடுவார்கள். அம்மை வந்த வடுவே தெரியாமல் குணமாகிவிடும்.

அம்மைப் புண்கள் என்றில்லாமல், சொறி, சிரங்கு, கரப்பான், சிலந்தி போன்ற சரும நோய்களுக்குக் கை கொடுப்பது வேப்பிலையும் மஞ்சளும்தான்.

நாம் சாப்பிடும் உணவு நன்றாக செரிமானம் ஆக வேண்டும். இல்லை என்றால் பிரச்னைதான். நாக்கில் வெள்ளை படிந்திருந்தாலே, அஜீரணம், மலச்சிக்கல் என்று தெரிந்து கொள்ளலாம். கைப்பிடி வேப்பங் கொழுந்து, சிறிது அதிமதுரத்தைத் தட்டி, ஒரு தம்ளர் நீரிலிட்டு, அரைத் தம்ளராகச் சுண்டக் காய்ச்சி, ஒரு ஸ்பூன் தேன் விட்டுக் கலந்து குடியுங்கள். ஜீரண சுரப்பிகள் உற்சாகமாக வேலை செய்ய, நல்ல பசி எடுக்கும். போனஸ் வேலையாக, குடலும் சுத்தமாகும்.

வயிற்றில் பூச்சி இருக்கும் குழந்தைகள் அடிக்கடி நோய்வாய்ப்படும். அந்தக் குழந்தைகளின் கன்னங்களில் வெள்ளையாய் தேமல் வட்டம் காணப்படும். உடனே மருத்துவர், 'டீ – வர்ம் செய்யணும்' என்று சொல்லி மருந்து கொடுப்பார். ஆனால் அந்த மருந்துக்கெல்லாம் பூச்சிகள் பயந்து விடுமா என்ன? கொஞ்ச நாள் அமைதி பாவ்லா காட்டிவிட்டு, மறுபடி தொல்லை கொடுக்கும். குடல் பூச்சியை ஒழிக்க ஒரே வழி, வேப்

# மூலிகை கேலரி - 16

ராஜம் முரளி



யாராவது காமெண்ட் அடித்தால், மனசு வேதனைபடும்தான்! வேப்பம்பிசின் என கடைகளில் கிடைக்கும். இதை வெந்நீரில் குழைத்து, பித்த வெடிப்புகள் மீது தடவினால், இலவம் பஞ்சு பாதம்... அட... மெத்துன்னு, இவ்வளவு அழகா?

வேப்ப இலைகளைப் பறித்து, நிழலில் உலர்த்தி பொடி செய்து வைத்துக் கொள்ளுங்கள். மூல நோய்க்காரர்கள் பனை வெல்லத்துடன் சாப்பிடணும். நீரிழிவுக்காரர்கள் வெந்நீரில் சாப்பிடணும். இரத்த அழுத்த நோய் இருப்பவர்கள், வெண்ணெயில் குழைத்துச் சாப்பிடணும். எதையும் செய்ய முடியாதவர்கள் கொழுந்தாகவே நான்கைந்து இலைகளைப் பறித்துச் சாப்பிட்டுவர, இரத்த சுத்தி, பித்த சாந்தி, தேக சாந்தி கிடைக்கும்.

சில பெண்களுக்கு அரும்புமீசையும் உடம்பெங்கும் புசுபுசுவென்று முடியுமிருக்கும். குப்பைமேனி, வேப்பிலை, வசம்பு, கஸ்தூரிமஞ்சள் நான்கையும் மிஷினில் கொடுத்து மாவாக அரைத்துக் கொண்டு, தினமும் பூசி குளித்துவர, வேண்டாத முடியெல்லாம் உதிர்ந்து, மேனி பட்டுப் போலாகி விடும்.



பங்கொழுந்து வாழைப்பழ முறைதான்! வேப்பங்கொழுந்தை நைசாக அரைத்து, பட்டாணி பருப்பளவு உருட்டி, வாழைப்பழத்துண்டில் வைத்து குழந்தைக்குக் கொடுங்கள். நான்கே நாளில் குடல் பூச்சிகள் அனைத்தும் பந்து மித்ரர்களோடு 'படாபட்' ஆகியிருக்கும்.

நான்பட்ட தலைவலி, முதுகுவலி, இடுப்புவலி என என்னென்ன வலிகள் உபத்திரவம் தந்து கொண்டிருக்கிறதோ... அனுபவிப்பவர்களுக்குத் தானே அருமை தெரியும்? வேப்பம் புண்ணாக்கை வெறும் வாணலியிலிட்டு, சூடு செய்து, பொறுக்கக் கூடிய வெப்பத்தில் ஒத்தடம் தந்தால், உடனடி குணம் தெரியும். 'பக்க விளைவுகள் இல்லாத சிறந்த முறையா இருக்கே' என நீங்களே சிபாரிசு செய்ய ஆரம்பித்து விடுவீர்கள்.

"ஆளும் தோலும் அழகுதான். ஆனால் குதிகாலைப் பாரேன்... நீர் காணாத பூமியாட்டம் பாளம் பாளமாய் வெடிச்சு" என்று

ரசம், பச்சடி, குழம்பு, துவையல் என வாரம் ஒரு முறையாவது வேப்பம் பூவை உணவில் சேர்த்துக் கொள்ளுங்கள். உடல் உரம் பெறும். நோய்கள் அண்டாது.

வேப்பம்பூவை இலேசாகத் தணலில் காண்பித்து பொறுக்கக் கூடிய சூட்டுடன், உச்சந்தலையில் தேய்த்துக் குளிக்க, கூந்தல் செழித்து வளரும்.

வேப்பமர நிழலில் உலவுவது, வேப்பங் கொழுந்து, பூ, பழம் என ஒன்றிரண்டு சாப்பிடுவது, வேப்பங் குச்சியால் பல் துலக்குவது என எதைச் செய்தாலும் சுகமே தரும் வேம்பினை நினைத்தாலே இனிக்குதா!

படங்கள்: ஸ்ரீஹரி

# புக் பேங்க்










**என் வாழ்வே பேரானந்தம் - யோகா**

பல நாடுகளுக்குச் சென்று தமது காமிராவால் காட்சிகளைப் படம் பிடித்த புகைப்படக் கலைஞர் யோகா, தமது அனுபவங்களைக் கட்டுரைகளாகத் தொகுத்துள்ளார்.

யோகா - சாவித் பப்ளிகேஷன்ஸ், 15/90, பாண்டிபஜார், தி.நகர், சென்னை-17. விலை ரூ.50/-

**ராஜ்யம் - சுப்ராஜா**

நாவல். பல்வேறு பத்திரிகைகளில் எழுதி வரும் சுப்ராஜா விஞ்ஞான புனை கதையை முயற்சித்துள்ளார். சுவாரஸ்யமாகப் பாத்திரங்களைப் படைத்துள்ளார்.

சின்னக் கண்ணன் பதிப்பகம், 12/6, மஸ்தான் அலி கார்டன், எஸ்வி.லிங்கம் சாலை, வடபழனி, சென்னை - 26. ரூ.50.

**ஔவை மண்ணில் பெண் எழுத்தாளர்கள்**

பெண் எழுத்தாளர்கள் சந்திப்புக் கருத்தரங்கில் வாசிக்கப்பட்டக் கட்டுரைகளை, பிரம்மராஜனும் ஆர்.சிவகுமாரும் தொகுத்திருக்கிறார்கள்.

மருதா பதிப்பகம், கடை எண்.3, அடித்தளம், ரியல் ரீஜென்ஸி, 102, பாரதி சாலை, சென்னை - 14. விலை ரூ.70

**வாழும் மரபுகள்**

நாட்டுப்புறவியலுக்கென்றே முழு மூச்சுடன் செயல்பட்டு வரும் தன்னனானே பதிப்பகம் இந்நூலை வெளியிட்டிருக்கிறது. கலை இலக்கியம், வாழ்க்கை வட்டச் சடங்குகள், வழிபாடுகள் ஆகியவற்றில் நமது மரபுகளை ஆராய்ந்து கட்டுரைகள் எழுதப்பட்டிருக்கின்றன.

தன்னனானே பதிப்பகம், 14, முதல் குறுக்குத் தெரு, ட்ரஸ்ட்புரம், கோடம்பாக்கம், சென்னை - 24. விலை ரூ.75/-

**சங்க காலக் கொங்கு நாடு - இரா. வடிவேலன்**

சங்க காலம் தொட்டு கொங்கு நாட்டின் வரலாற்றை விளக்கும் புத்தகம்.

அருணோதயம், 5/3, கௌடியாமடம் சாலை, ராயப்பேட்டை, சென்னை - 14. விலை ரூ.80/-



# எல்லாவித சர்க்கரை வியாதிகளுக்கும் உடல் ரீதியாக முன்னேற்றமடைய தெய்விக மூலிகை மருத்துவம்!



பல் வருட ஆராய்ச்சியின் மூலம், வேதங்களும், ஞானிகளும் போற்றியதும், கடவுளுக்கு சமமாகவும், நம் நாட்டின் பல பொக்கிஷங்களில் ஒன்றாகவும் கருதக் கூடிய பல தெய்விக மூலிகைகளைக் கொண்டு பக்க விளைவுகள் இல்லாதவகையில், தாமே தயார் செய்த தெய்விக மூலிகை மருந்துகள் மூலம் அடிக்கடி இரவில் சிறுநீர் கழித்தல், தேவையில்லாத போதும் அதிக அளவில் தண்ணீர் தாகம், சிறு வேலைகள் செய்தாலும் களைப்பு, பலஹீனம், சரியான உணவு உட் கொண்டும் எடை குறைவு, உடல் மெலிவு, அதிகமான பசி, அதிக அளவு தண்ணீர் குடித்தும் நாவறட்சி, தோல் வறட்சி, பரிசோதனையின் போது இரத்தத்திலும், சிறுநீரிலும் சர்க்கரையில் அளவு அதிகம் இருத்தல், உடலில் காயம் ஏற்பட்டால் விரைவில் ஆறாமை, ஆண்மைக் குறைவு கால் பாதம் எரிச்சல், குத்தல், மரத்துப் போகுதல், வீக்கம், மயக்கம், BP. கண்பார்வை குறைவு, மூட்டுவலி போன்ற குறைகளை உடைய நாட்பட்ட சர்க்கரை நோயாளிகளுக்கும் எந்த விதமான அறிகுறிகளும் இல்லாத ஆரம்ப நிலை சர்க்கரை நோயாளிகளுக்கும், குழந்தை சர்க்கரை நோயாளி களுக்கும் (Juvenile Diabetics) சிறந்த முறையில் ஆலோசனைகளும் & சிகிச்சைகளும் அளிக்கப்படுகின்றது.

மற்றும் சிறுநீரகக் கோளாறு, எல்லாவிதமான இதயநோய், பல வகையான புற்று நோய் ஆண்மைக்குறைவு, குழந்தையில்லாத குறை, அல்சர், மூட்டுவலி, ஆஸ்துமா, சொரியாசிஸ் எனப்படும் எல்லாரக சர்ம நோய்களுக்கும் தரமான மூலிகை சிகிச்சைப் பெறலாம். அணுக வேண்டிய முகவரி



*தெய்விக மூலிகை வைத்தியர்கள்*

தலைமை முகவரி : Dr.M.குருபரன் & Dr.M.சபாபதி, Dr.M.சிவசக்தி, S/o Dr.C.K.மாணிக்கவாசகம்

P.B.No:30, No.3, திருநாத முதலி நகர், (காலேஜ் எதிரில்), திருப்பத்தூர், வேலூர் Dt. - 635 601 ✆ 04179-20469, 22769

சென்னை கிளை : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, (பிரின்ஸ் மேனர் பக்கத்தில்) கெல்லீஸ், சென்னை - 10

இரு முகவரிகளின் ஆலோசனை நேரம் தினமும் காலை 10 to 1, மாலை 5 to 7 ✆ 6424285, 6427638

## ஒவ்வொரு மாதமும் வெளியூர்களில் டாக்டரை நேரில் சந்திக்க

| | | | | |
|---|---|---|---|---|
| **வேலூர்**<br>2ந் தேதி - 12 pm to 2 pm<br>(N.S.R.லாட்ஜ்) 26/A, ஆரணி ரோடு,<br>(கண் ஆஸ்பத்திரி அருகில்)<br>✆ : 0416 - 213159 | **காஞ்சிபுரம்**<br>2ந் தேதி - 5 pm to 6 pm<br>ராஜம் லாட்ஜ், (பஸ் நிலையம் அருகில்) காமராஜர் தெரு.<br>✆ : 04112 - 22519 | **கடலூர் (S.A.DL)**<br>4ந் தேதி - 9 am to 11 am<br>ஆர்காடு உட்லண்ட்ஸ் ஹோட்டல்,<br>✆ : 04142 - 30707, 30717 | **விழுப்புரம்**<br>4ந் தேதி - 2 pm to 3 pm<br>ஹோட்டல் ஆனந்த,<br>பஸ் நிலையம் எதிரில்,<br>✆ : 04146 - 22962, 24960 | **திருவண்ணாமலை**<br>4ந் தேதி - 5 pm to 6 pm<br>ராதா லாட்ஜ்,<br>(பஸ் நிலையம் எதிரில்)<br>✆ : 04175 - 22536 |
| **மும்பை**<br>7 & 8ந் தேதி - 10 am to 8 pm<br>The South Indian Concerns Ltd,<br>401, Telang Road, Matunga (CR).<br>✆ : 022 - 4011589 | **பெங்களூர்**<br>9ந் தேதி - 11 am to 1 pm<br>ஹோட்டல் பிரட்வே, (கல்பனா தியேட்டர் அருகில்) கெம்பகவுடா ரோடு. ✆ : 080-2266374,2873013 | **ஓசூர்**<br>9ந் தேதி - 4 pm to 5 pm<br>சீனிவாசா லாட்ஜ்,<br>பாகலூர் ரோட்,<br>✆ : 04344 - 42899, 43321 | **சேலம்**<br>12ந் தேதி - 11 am to 1 pm<br>ஹோட்டல் செல்வம்,<br>புதிய பஸ் நிலையம் எதிரில்,<br>✆ : 0427 - 449333, 449332 | **ஈரோடு**<br>12ந் தேதி - 4 pm to 6 pm<br>ஹோட்டல் ஆக்ஸ்போர்டு,<br>பஸ் நிலையம் எதிரில்,<br>✆ : 0424 - 226611/12/13/14 |
| **கோயம்புத்தூர்**<br>13ந் தேதி - 9 am to 1 pm<br>சேரன் பேலஸ் லாட்ஜ்<br>(சாந்தி தியேட்டர் பின்புறம்)<br>✆ : 0422 - 302211, 302220 | **மதுரை**<br>14ந் தேதி - 9 am to 11 am<br>ஹோட்டல் கிராண்ட் செண்ட்ரல்,<br>மேலப் பெருமாள் மேஸ்திரி தெரு.<br>✆ : 0452 - 743941 | **தஞ்சாவூர்**<br>14ந் தேதி - 5 pm to 7 pm<br>அசோகா லாட்ஜ்,<br>தஞ்சாவூர்.<br>✆ : 04362 - 30021, 30022 | **திருச்சி**<br>15ந் தேதி - 9 am to 11 am<br>ஹோட்டல் ஆனந்த், (சென்ட்ரல் பஸ் நிலையம் அருகில்)<br>✆ : 0431 - 415545 | **நாமக்கல்**<br>15ந் தேதி - 2 pm to 4 pm<br>ஹோட்டல் தேவி அன்னபூர்ணா,<br>நாமக்கல்.<br>✆ : 04286 - 20433, 21336 |
| **நியூடெல்லி**<br>18 & 19ந் தேதி - 10 am to 8 pm<br>South Indian Hotel, 10211, Padam Singh Road, Ajmal Khan Road, Karol Bagh. ✆ : 011-5717126,5723651 | **தர்மபுரி**<br>22ந் தேதி - 8 am to 10 am<br>ஸ்ரீ மாதேஸ்வரா லாட்ஜ், 103,<br>அதியமான் பைபாஸ் ரோடு,<br>✆ : 04342 - 60226, 61472 | **திருப்பூர்**<br>22ந் தேதி - 2 pm to 3 pm<br>ராமகிருஷ்ணா லாட்ஜ்,<br>கல்யாண கோயில் தெரு,<br>✆ : 0421 - 740418 | **உடுமலைப்பேட்டை**<br>22ந் தேதி - 6 pm to 7 pm<br>ஹோட்டல் குறிஞ்சி,<br>(பஸ் நிலையம் எதிரில்)<br>✆ : 04252 - 24353 | **திண்டுக்கல்**<br>23ந் தேதி - 9 am to 11 am<br>ஹோட்டல் குறிஞ்சி,<br>பஸ் நிலையம் பின்புறம்.<br>✆ : 0451 - 421056, 427017 |
| **தூத்துக்குடி**<br>23ந் தேதி - 5 pm to 6 pm<br>ஹோட்டல் ஆல்வின்,<br>தேவர்புரம் ரோடு.<br>✆ : 0461 - 327780 | **திருநெல்வேலி**<br>24ந் தேதி - 8 am to 11 am<br>ஹோட்டல் ஸ்ரீ சீத்தாபதி,<br>மதுரை ரோடு.<br>✆ : 0462 - 333312 | **நாகர்கோவில்**<br>24ந் தேதி - 2 pm to 3 pm<br>ஹோட்டல் சரவணா,<br>மீனாட்சிபுரம்<br>✆ : 04652 - 36078 | **விருதுநகர்**<br>25ந் தேதி - 8 am to 10 am<br>அண்டன் லாட்ஜ்,<br>மதுரை ரோடு,<br>✆ : 04562 - 45537 | **கரூர்**<br>25ந் தேதி - 2 pm to 4 pm<br>அரசி லாட்ஜ்,<br>ஜவகர் பஜார்<br>✆ : 04324 - 63763, 62663 |

**தகவல் :** SUN, RAJ, VIJAY, DD T.V. களில் எமது பேட்டியை காணத் தவறியவர்கள். டாக்டரின் மூலிகைகள் பற்றிய 28 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய **"எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்"** இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய **"என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்"** என்ற இரு புத்தகத்தையும் பதிவுத் தபாலில் பெற ரூ.200/- மேற்கண்ட முகவரிக்கு D.D. அல்லது M.O. அனுப்பவும்.

**உ**ப்புக் காற்றை உள்ளிழுத்தபடி ஒரு சுறுசுறுப்பான நீண்ட நடை நடந்தால், புதுவை கடற்கரை சாலை நெடுக நம்மை எதிர்கொள்கின்றன சிலைகள்!

முதலில் பார்வையில் பதிகிறார் டூப்ளே. ஒரு சிறிய அழகிய பூங்காவின் நடுவில் உயரமான பீடத்தில் கம்பீரமாக நிற்கிறார். நெருங்கினால்தான் தெரிகிறது - முகத்தில் ஒருவித சோகம் கப்பி உறைந்து கிடப்பது!

காலனியாதிக்க புதுவையின் முதல் பிரெஞ்சு ஆளுனர் டூப்ளே. 26 வயதிலேயே அப்பதவியை ஏற்றார். ஆங்கிலேயர் உள்ளிட்ட ஐரோப்பியர்களின் தாக்குதலில் சிதைந்துபோன புதுச்சேரியை புனர்நிர்மாணம் செய்தவர் இந்த பிரான்சுவா ஜோசெப் டூப்ளே. பின்னாளில் இவரது அரசே இவரை வஞ்சித்ததாக ஒரு சோக வரலாறு சொல்லப்படுகிறது. ''எனது இளமைப் பருவத்தை நாட்டுக்காகவே தியாகம் செய்தேன். அது வீணாகிவிட்டது. என் சொத்துக்களையும் அரசு பறித்துக் கொண்டுவிட்ட நிலையில் மிகக் கேவலமாக நடத்தப்பட்டு வறுமையில் வாடுகிறேன்'' என்று எழுதிச் சென்றுள்ளார் டூப்ளே.

பிரான்ஸில் புரட்சி வெடித்து, மக்களாட்சி மலர்ந்த பிறகு ஒரு மாணவன் மேற்கொண்ட ஆராய்ச்சிப் படிப்பின் விளைவாகத்தான் அங்கே டூப்ளேயின் பெருமை அறியப்பட்டது. அதன் பின்னர், 1888ல் அவருக்கு அங்கே சிலை வைத்தார்கள். புதுவையிலோ, 1870யிலேயே சிலை நிறுவப்பட்டுவிட்டது.

# பயண தேவதை!




• ஜோன் ஆஃப் ஆர்க்



• காந்தி

• டூப்ளே சிலை

## இங்கும் வாஸ்து?

டூப்ளே சிலையை அடுத்து நாம் பார்ப்பது வீராங்கனை ஜோான் ஆஃப் ஆர்க்கின் சிலை. பிரெஞ்சு மொழியில் 'ழான் த ஆர்க்' என்று கொஞ்சம் குதப்பி உச்சரிக்க வேண்டும்!

பதினைந்தாம் நூற்றாண்டில் பிரெஞ்சு மன்னன் ஏழாம் சார்ல்ஸ் ஆட்சியின்போது, ஆங்கிலேயர் கைப்பற்றிய பகுதியை மீட்க ஆண் உடை அணிந்து போர்க்கவசம் அணிந்துபோன பிரெஞ்சு நாட்டு 'ஜான்ஸி ராணி'! அவளது வீரம் கண்டு குமைந்த மதவாதிகள், பிற்போக்குவாதிகள், அவளைச் சூனியக்காரி என்று 'முத்திரை' குத்தி உயிருடன் எரித்தார்கள். மக்களாட்சி மலர்ந்த பின் 1909ல் ஒரு வழக்கு தொடரப்பட்டு,

• போர் நினைவுச் சின்னம்



*1920ல் ஜோன் நிரபராதி என்று தீர்ப்பாயிற்று.*

முதலில் கிழக்கைப் பார்த்து இருந்த ஜோன் ஆஃப் ஆர்க் சிலை இப்போது மேற்கு நோக்கித் திருப்பி வைக்கப் பட்டுள்ளது. காரணம் வாஸ்துவோ...?

## மௌன அஞ்சலி!

**வீ**ராங்கனைக்கு அருகிலேயே வீரர்! துப்பாக்கியின் வாய் முனையை மூடியபடி குனிந்து மௌன அஞ்சலி செலுத்தும் போர் வீரர் சிலை, முதல் உலகப் போரில் உயிர் நீத்த பிரெஞ்சு, இந்திய வீரர்களுக்கு அஞ்சலி செலுத்த அமைக்கப்பட்டது. சிலையின் பின்னே வானுயர நிற்கும் நான்கு தூண்களில் அவ்வீரர்களின் பெயர்கள் பொறிக்கப்பட்டுள்ளன.

## காந்திக்கு காவல்!

**இ**ங்கேயும் காந்திஜிக்கு சிலை உண்டு. கையில் ஊன்றுகோலுடன் தண்டி யாத்திரை செல்லும் கோலத்தில் இருக்கிறார். மண்டபமும் பீடமும் அழகாய் இருக்கின்றன. சுற்றிலும் உள்ள நாயக்கர் காலத்துத் தூண்களை, டூப்ளே செஞ்சிக் கோட்டையிலிருந்து பெயர்த்து புதுவைக்குக் கொண்டு வந்ததாகச் சொல்கிறார்கள். புதுவை அரசு அவற்றைக் காந்திக்குக் காவலாக நிறுத்தி வைத்துவிட்டது!

---

"இந்தப் பொய்யை நீ பத்து வருஷமா சொல்லிட்டு வர்றே போல இருக்கே?"

"ஆமாம். இதுக்கெல்லாம் எக்ஸ்பயரி டேட் கிடையாது."

- *பர்வதவர்த்தினி*



**நே**ரு இல்லாமலா....! இருக்கிறார். காந்திக்கு நேர் எதிரே, பாரதி பூங்காவில். அருகில் பழைய கலங்கரை விளக்கம். தற்போது இது உபயோகத்தில் இல்லை.

## முன்னாள் புதுவை முதல்வர்

**எ**ட்வர்ட் குபேர், பாரதி, பாரதிதாசன், புதுவை வரலாறோடு பின்னிப் பிணைந்த ஆனந்தரங்கம் பிள்ளை, செல்வராஜ் செட்டியார் என்று சிலைகளின் லிஸ்ட் நீள்கிறது.

அண்ணா சிலை அமைப்பில் ஒரு தனித்தன்மை. உலோகக்கூரை வேயப்பட்டு, கோவில் போல் கலசம் பொருந்திய மண்டபத்திலிருக்கிறார் அண்ணா. ஆசியாவிலேயே இப்படிப்பட்ட அமைப்பு வேறெங்கும் கிடையாது.

## வள்ளுவன் தன்னை பஸ் ஸ்டாண்டில் நிறுவி...

**செ**ன்னையின் மாநகர பேருந்துகளில் குறள் என்றால், புதுவை பேருந்து நிலையத்தில் வள்ளுவர் சுவடியில் எழுத்தாணி கொண்டு எழுதும் தோற்றம். '93ல் இதை நிறுவ அதிக முயற்சி எடுத்துக்கொண்டவர் அப்போதைய வேளாண் அமைச்சர் ந. ரங்கசாமி. அப்போதும் இப்போது முதல்வரானபோதும், வள்ளுவருக்கு மாலை அணிக்கும் ஒரே அரசியல்வாதி.

## பயண தேவதை!

**ப**யண தேவதைக்குச் சிலை நிறுவப் பட்ட இடம் உலகில் புதுவை மட்டும்தானா என்று ஆராய்ந்து கின்னஸுக்கு எழுதிப் போடலாம். *1863ல்* நிறுவப்பட்ட இந்த தேவதை சிலையின் அடிப்பாகத்தில் நான்கு சிங்க முகங்கள். அவற்றினிடையே குடிநீர்க் குழாய்கள். குடிநீர் வசதிக்காக நிறுவிய இந்த அமைப்பின் நடுவே விளக்கு ஏந்தி நின்ற பெண் சிலைதான் ரயில் நிலையம் அமைக்கப்பட்ட பிறகு *(1879)* பயண தேவதையாகப் பரிணாம வளர்ச்சியுற்று விட்டது!

# மழை நிகழ்ந்த போது!

பிரணா

உயிர் முழுதும்
பரவும்
இதமான குளிர்

பூக்கள் ஒலிபரப்பும்
வாச(க்) கவிதையை
ஏந்தி வரும்
மெல்லிய காற்று

நேற்று முழுவதும்
மெதுவாய்
பேசியது மழை
தூறல் வார்த்தையால்

தூறல் மொட்டு
நெகிழ்ந்து அவிழ

மரங்களின் தலையில்
மழை செய்தது
முதற் பதிவை

புல்வெளியெங்கும்
ஈரமுலாம்
ஜில்லிட்ட
சுவரும் தரையும்

மனதிலெங்கும்
பரவசமோடும்
உன்னத சிலிர்ப்பை

தடுத்து நிறுத்தினான்

சற்றே தொலைவில்
சட்டையில்லாமல்
நடுங்கிய சிறுவன்!



### இருபத்தைந்து ரூபாய்க்கு டூர்!

கடற்கரைச் சாலையில் உள்ள புதுவை அரசின் சுற்றுலா மற்றும் போக்குவரத்து வளர்ச்சிக் கழகத்தின் சொகுசுப் பேருந்துகள் காலை எட்டு மணிக்குப் புறப்படுகின்றன. ரூபாய் இருபத்தைந்து கொடுத்து ஏறி அமர்ந்து கொண்டால் போதும், ஸ்ரீ அரவிந்தாஸ்ரமம், அருங்காட்சியகம், தாவரவியல் பூங்கா, சுண்ணாம்பாறு படகுத் துறை, ஆரோவில் நகரம் என்று சுற்றிவிட்டு மதியம் ஒரு மணிக்கு வந்து சேர்ந்து விடும்.








# பலே படகுச் சவாரி!

### சிவப்புத் தொப்பி போலீஸ்!

பிரெஞ்சுக் கலாசாரத்தின் சுவடுகளை இன்னும் விட்டுவிடாத புதுவையில் பளிச்சென்று கண்ணில் படுவது, புதுவை காவலர்கள் அணிந்திருக்கும் 'கெப்பீஸ்' எனப்படும் சிவப்பு நிறத் தொப்பிதான். போலீஸ் கான்ஸ்டெபிள்களுக்கு மட்டுமே இந்தச் சிவப்பு நிறத் தொப்பி. ஏட்டய்யா என்றால் சிவப்புத் தொப்பியில் மஞ்சள் கோடு இருக்கும். உதவி ஆய்வாளரில் ஆரம்பித்து உயர் அதிகாரிகள் வரையிலானோருக்கு, மற்ற மாநிலங்களில் உள்ளது போன்ற போலீஸ் தொப்பி. புதுவை சட்டசபை போலீசாரோ பரே எனப்படும் நீல நிறத் தொப்பியும், வெள்ளை உடுப்பும் அணிகிறார்கள்.



### மலர் நகரம்!

பூக்களுக்கு முக்கியத்துவம் தரும் அரவிந்தாஸ்ரமம் இருப்பதாலோ என்னவோ புதுவை வேளாண்மைத்துறை மலர்ச்செடிகள் வளர்ப்பில் தூள் கிளப்பிக் கொண்டிருக்கிறது. இத்துறைக்குச் சொந்தமான மலர்ச் செடிகள் மற்றும் அலங்காரச் செடிகள் உற்பத்தி செய்யும் நர்சரி, புதுவை அசோக் நகரில் உள்ளது. வெளிமார்க்கெட்டில் இருநூற்று நாற்பது ரூபாய்க்கு விற்கும் ஆர்க்கிட் மலர் செடிகளை இங்கே வெறும் நாற்பது ரூபாய்க்கு விற்கிறார்கள். மற்ற எல்லா



பூச்செடிகளும் மிகக் குறைந்த விலைக்குக் கிடைப்பதால் சுற்றுலாவரும் வெளியூர்க் காரர்கள் அள்ளிப் போகிறார்கள். "ஒவ்வொரு முறை புதுவை வரும் போதும் மலர்ச்செடிகள் வாங்குவதற்கென்றே இங்கே வருகிறோம்" என்றார் குடும்பத்தோடு ஆர்கிட் வாங்க வந்திருந்த திருச்சிவாசியான ஜெய்சங்கர். உதகமண்டலத்திற்கு இணையாக, மலர் கண்காட்சியிலும் வெளுத்து வாங்குகிறது புதுவை.

## ரிக்ஷா மாமா!

தஞ்சை மாவட்டத்திலிருந்து பசி மயக்கத்தோடு பிழைப்புத் தேடி புதுவை வந்து, கடற்கரை சாலையில் மயங்கி விழுந்திருக்கிறார் சவரிநாதன். அங்கிருந்த ரிக்ஷா தோழர்கள் அவருக்கு ரிக்ஷா ஓட்டக்கற்றுக் கொடுத்து பள்ளிப் பிள்ளைகளை அழைத்துச் செல்லவும் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். முப்பது வருடமாய் ரிக்ஷா தொழிலை உள்ளன்போடு காதலித்துக் கொண்டிருக்கும் சவரிநாதன், தமது ரிக்ஷாவில் பள்ளிக்குக் கூட்டிச் செல்லும் குழந்தைகளின் பிறந்த நாளை கோலாகலமாகக் கொண்டாடுகிறார். இப்படி இதுவரை ஐந்நூறு குழந்தைகளைக் கொண்டாடிய இவருக்கு, புதுவை கழற் சங்கம் மனித நேயர் விருது வழங்கியுள்ளது.




## பலே, படகுச் சவாரி

புதுவை சுற்றுலாப் பயணிகளை, சட்டென்று கவர்ந்து வருவது சுண்ணாம்பாறு படகுச் சவாரி. புதுவை சுற்றுலாத் துறை அங்கே மூங்கில் காட்டேஜ் உள்ளிட்ட சூப்பர் ரிசார்டுகளைக் கட்டி வைத்திருப்பதால், படகுச் சவாரி ஜமாய்க்கிறது. மிதி படகில் தொடங்கி ராட்சத விசிறியால் உந்துப்பட்டு பாய்ந்து செல்லும் செல்ப் டிரைவ். - ஹைட்ரோபிளேன் படகு வரை சவாரிகள் பலவிதம். அங்கே வரும் பிரெஞ்சுக்காரர்கள் விரும்பிக் கேட்கும் கட்டு மரங்களை வாடகைக்கும் கொடுக்கிறார்கள். வெளிநாட்டு சுற்றுலாப் பயணிகளுக்கு என்றே பிரத்யேக உணவகங்கள் உண்டு. பௌர்ணமி நாட்களில் நிலாச் சோறு திருவிழா களை கட்டுகிறது. சுண்ணாம்பாறு கடலில் கலக்கும் இடத்தில் உள்ள 'பேரடைஸ் ஜல கண்ட்' குட்டித் தீவில் ரிசார்ட் குடிசைகளைக் கட்டி அங்கேயும் அழைத்துப் போய் விட்டு விடுகிறார்கள். இந்தத் தீவில் காலையில் போய் இறங்கிக் கொண்டால் இஷ்டம் போல் அங்கே டேரா போட்டு கடல் அலைகளோடு கதைத்து விட்டு மாலை திரும்பி வரலாம். குறைந்த கட்டணம். உணவு விடுதியும் செயல்படுகிறது. அப்புறம் என்னங்க, குளுகுளு சுண்ணாம்பாறு படகுச் சவாரி போக வேண்டியதுதானே?

## சுறுசுறுப்பு!

பழைமையும் புதுமையும் பின்னிப் பிணைந்து கிடக்கும் புதுவை மாநிலத்தின் வரலாறு மூவாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டது. சுற்றுலாத் துறையில் புதுவை சமீப காலமாக சூப்பர் சுறுசுறுப்பு காட்ட ஆரம்பித்துள்ளதால், அருகிலிருக்கும் கேரளத்திற்குக் கொஞ்சமல்ல — நிறையவே கிலி!




## உருண்டும் செல்லலாம்!

புதுச்சேரியை சென்னையிலிருந்து இரண்டு வழிகளில் அடையலாம்! ஒன்று தேசிய நெடுஞ்சாலைத்துறை புதிதாய் உருவாக்கியிருக்கும் கிழக்குக் கடற்கரைச் சாலை. இது சாலையா இல்லை சலவைக் கல் நதியா என்று வியக்கும் வண்ணம் தென்னகத்திலேயே ஒரு முன் மாதிரி சுங்கவரிச்சாலை. விரும்பும் வாசகர்கள் படுத்து உருண்டபடியே புதுவைக்குப் புதுமைப் பயணம் செய்யலாம்! அப்படியொரு பராமரிப்பு. நமது பயணமோ திண்டிவனம் வழியே புதுவையை அடையும் புறவழிச் சாலை பயணம். மூன்று மணி நேரத்தில் கோரிமேடு வந்து விடுகிறது.

## ஏழைகளுக்கு ஏ.சி.!

புதுச்சேரி என்ற பெயரைத் தாங்கிய பிரெஞ்சுபாணி நுழைவாயில் பனீர் வெள்ளை போர்டு நம்மை வரவேற்கிறது. நுழைவாயிலின் முன்னே நடுசாலையில் பூங்காவும் நீரூற்றும், அங்கே கைகூப்பி வரவேற்கும் தமிழ்ப்பெண் சிலையும் சிந்தையைக் கொள்ளை கொள்கின்றன. நுழைவாயிலையொட்டி இடது புறம் ஜிப்மர் மருத்துவமனை. வேலூர் சி.எம்.சி. மருத்துவமனைக்கு இணையாக ஒரு மருத்துவமனை வேண்டும் என்ற புதுவை மக்களின் விருப்பத்திற்கிணங்க 1955ல் அடிக்கல் நாட்டி நேரு தொடங்கி வைத்த மருத்துவமனை. ஏழை எளிய மக்கள் கூட ஏசி அறையில் சிகிச்சை பெறும் அதிசயத்தை இங்கே பார்க்கலாம்.

## பெரிய்ய்ய விஷயம்!

ஜிப்மருக்கு எதிர்ப்புறம் வானொலி மற்றும் தொலைக்காட்சி



நிலையங்கள் — குறிப்பாக புதுவை வானொலிக்கு, தொலைக்காட்சியை விட அதிக நேயர்களாம். இப்போதைக்கு 'சின்ன விஷயம்' என்ற மகளிர் நிகழ்ச்சியில் தொலைபேசி வழியே உரையாடி மகிழ்பவர்கள்



பிரெஞ்சுபாணி கட்டடக் கலை அமைப்பில் கண்களைக் கவர்கிறது. உயிரின் மதிப்பறிந்தவர்கள் அந்த நடை பாலத்தைப் பயன்படுத்துகிறார்கள். நிறையபேர் சாலையின் குறுக்கே ஓடி கனரக வாகன ஓட்டிகளைக் குழப்புகிறார்கள்.

ஏராளம். "ஏய் நான் 'சின்ன விஷயத்துலே' பேசிட்டேன்" என்று சாதனையாகச் சொல்லும் அளவுக்குப் பிரபலமான நிகழ்ச்சி அது.

### உயிரின் மதிப்பறிந்து...

அங்கிருந்து ராஜீவ்காந்தி புதிய பேருந்து நிலையத்திற்கு வருகிறோம். மருந்துக்கும் நெருக்கடி இல்லாத நிலையம். பேருந்து நிலையத்திற்கு எதிரே புதிதாய்க் கட்டப்பட்ட நடைபாலம். புதிதென்றாலும்

### ஏறுது டெம்போ!

பேருந்து நிலையத்தின் வெளியே வரிசையாய் அணிவகுத்து நிற்கும் டெம் போக்கள், புதுவையின் புத்தம் புதிய அடையாளம். இந்தியாவிலேயே முதன் முறையாக, பத்தாண்டுகளுக்கு முன் அறி முகப்படுத்தப்பட்ட இந்த ஷேர் ஆட்டோக்கள், இப்போது புதுடெல்லிவரை பரவி விட்டதில் புதுவைக்காரர்கள்

# சுற்றி வந்தபோது...

## சுத்தி சுத்தி வந்தோங்கோ...

புதுவை கல்வி மற்றும் சுற்றுலாத் துறை அமைச்சர் பேட்டி

'புதுவை அமைச்சரவையில் நம்பிக்கை நட்சத்திரம், நலத்திட்டங்களை விரைவாக மக்களுக்குச் சென்று சேர்க்க சுறுசுறுப்பாக ஓடிக்கொண்டிருக்கிறார், எந்த நேரமும் மக்களைச் சந்திக்கிறார்' என்று பொதுமக்களே சான்றிதழ் தரும் லட்சுமிநாராயணன் புதுவையின் கல்வி மற்றும் சுற்றுலாத் துறை அமைச்சர். புதுவை சுற்றுலாத் துறையின் தற்போதைய நிலை, எதிர்கால திட்டங்கள் குறித்து நமக்கு நறுக்கென்று பேட்டியளித்தார்.

"பத்தாவது ஐந்தாண்டு திட்டத்தில் சுற்றுலாவுக்கு ரூபாய் அறுபத்தைந்து கோடி ஒதுக்கியிருக்கிறோம். இதிலிருந்து ஆண்டுக்கு பதினோரு கோடி வீதம் செலவழிக்க இருக்கிறோம். சுற்றுலா தொடர்பாக தொழில் தொடங்க தனியார் துறையினர் முன் வந்தால் அவர்களுக்கு நில வங்கியிலிருந்து இலவச நிலம் தந்து உதவ எங்கள் அரசு தயார். புதுவை மாநிலத்தின் வரைபடத்தை, யுனெஸ்கோ வெளியிடும் 'உலக ஹெரிட்டேஜ் மேப்பில்' இடம்பெற முழு முயற்சி எடுத்திருக்கிறோம். இது சாத்தியமானதும் இந்தியாவிலேயே அதிக சுற்றுலாப் பயணிகளை ஈர்க்கும் மாநிலமாக புதுவை மாறிவிடும்" என்கிறார்.



• லட்சுமி நாராயணன்

காலரைத் தூக்கிவிட்டுக் கொள்கிறார்கள். நகரப் பேருந்தில் படிக்கட்டில் தொங்கும் இளைஞர்களை இங்கே பார்க்க முடியாது. ஆனால் டெம்போக்களில் பயணம் செய்பவர்கள் படிகளில் தொங்குவதைக் கண்டு உள்ளத்தில் ஒவ்வொரு நொடியும் திக் திக் என டெம்போ எகிறுகிறது.

176 வருடங்களுக்கு முன்னால், பிரெஞ்சு அரசால் நகரின் மையப்பகுதியில் அமைக்கப்பட்டது தாவரவியல் பூங்கா. புதுச்சேரியில் கூடுதல் ஆக்ஸிஜன் வளைய வருகிறது. பூங்காவின் அருகிலேயே மீன் காட்சியகம்.

இங்கே நீந்திக் கொண்டிருக்கும் வண்ண வண்ண மீன்களை நேரம் போவது தெரியாமல் ரசித்துக் கொண்டிருக்கலாம். தாவரவியல் பூங்காவை ஒட்டியுள்ள புதுவை ரயில் நிலையத்திலிருந்து வடக்கு நோக்கி, நீளும் காந்தி வீதியில் சன்டே மார்க்கெட். அம்மாடியோவ்! இத்தனை பெரிய ஒரு நாள் சந்தையை வேறெங்கும் பார்த்திருக்கிறீர்களா? ஒரு கிலோ மீட்டர் நீளமுள்ள காந்தி வீதியின் இரு மருங்கிலும் கடைகள்... கடைகள்... கடைகள்... மின்னணுப் பொருட்களில் தொடங்கி, மிளகு – மஞ்சள் வரை எல்லாம் இங்கே மலிவு விலையில் "போனா வராது! பொழுதுபட்டா கிடைக்காது! அள்ளு! அள்ளு! அஞ்சு ரூபாய்க்கு ஒண்ணு" என்று வியாபாரிகள் சப்தம்.

### தியாகி!

'ஆயி மண்டபம்' புதுவை – முத்தரையர் பாளையத்தில் வாழ்ந்த தேவதாசிப் பெண் ஆயி, தனது ஆடம்பர மாளிகையை இடித்துவிட்டு அந்த இடத்தில் குடிநீர் குளம் ஒன்றை வெட்டியதன் நினைவாக, பிரெஞ்சு அரசு கட்டிய இந்த மண்டபம் பாரதி பூங்காவின் மையத்தில் இருக்கிறது. இதன் எதிரே சட்டசபை!

### நோ லஞ்ச் டைம்!

சட்டசபை பிரெஞ்சு அழகோடு மெருகு குலையாமல் அப்படியே இருக்கிறது. வடக்கே அடக்கமான ஆளுநர் மாளிகை. அருகிலேயே ரோமென் ரோலண்டு நூலகம். நூற்று ஐம்பதாண்டு பழமையான இந்த நூலகத்தில் இரண்டு லட்சம் புத்தகங்கள். காலை ஏழரை மணிக்குத் தொடங்கி இரவு எட்டரைமணி வரை உணவு இடைவேளை இன்றி இயங்கும் இந்த நூலகத்தில் குழந்தைகளுக்கென்று தனிப்பிரிவு இருப்பது தனிப்பெரும் சிறப்புதானே!




# புதுவை நொறுக்ஸ்!

### பான்காமாயா!

புதுச்சேரியிலிருந்து பல தமிழ், ஆங்கிலம் மற்றும் பிரெஞ்சு மொழி இதழ்கள் வந்து கொண்டிருக்கின்றன. புதுச்சேரியின் அரசு எல்லைகள் பாண்டிச்சேரி, காரைக்கால், மாஹே, யாணம் என்ற நாலு நகரங்களைக் கொண்டது. இதைக் குறிப்பிடுகின்ற வகை




யில் வெளிவரும் ஒரு பத்திரிகையின் பெயர்தான் ஆங்கிலத்தில் Ponkamaya. அதாவது தமிழில் அதன் பெயர் பாண்காமாயா. தமிழ் மற்றும் ஆங்கிலத்தில் வெளிவரும் இந்த இதழின் குறிக்கோள் வாசகமும் வித்தியாசமாக இருக்கும். Think Global but act local. அதாவது 'உலகத்தைப் பற்றி சிந்தனை செய். ஆனால் உள்ளூர் பிரச்னைகளுக்காகச் செயல்படு' என்பதுதான்.

– கடல் நாகராசன்

### யோகமும் பார்வையும்!

அரவிந்தர் துவக்கிய யோகா பள்ளியில், அகில உலக யோகா விழா ஒவ்வொரு வருடமும் ஜனவரி 4 முதல் 7ம் தேதி வரை நடைபெறுகிறது. கர்மயோகா ஞானயோகா, பக்தியோகா, ராஜயோகா என்ற நான்கு




பிரிவில் ஆசனங்கள் கற்பிக்கப்படுகின்றன. இந்த விழாவில் இசை, நடனம், நாடகம் போன்ற நிகழ்ச்சிகள் விவாதங்கள், உணவு முறை, யோகாசனம் பற்றிய பயிற்சி வகுப்புகள் இடம் பெறுகின்றன.

கண் நோய் அல்லாத பிற கண் குறைபாடுகளை எளிய உடற் பயிற்சி மூலம் சரி செய்யும் ஸ்கூல் ஃபார் பர்ஃபெக்ட் ஐ சைட் என்ற பள்ளியும் புதுவையில் பிரசித்தம். இங்கே மருத்துவ சிகிச்சை இல்லாமலேயே மாணவர்கள் முதல், முதியோர் வரை பயன்பெறுகிறார்கள்.

– கே.ஏ. மகாலிங்கம்

### சொல்தாக்கள்!

புதுவையில் பிரெஞ்சுக்காரர்கள் வசிக்கும் பகுதி white town என்று அழைக்கப்படுகிறது. பிரெஞ்சு அரசில் பணிபுரிந்தவர்களை 'சொல்தா' (soldier, பெரும்பாலும் இராணுவத்தார்கள்) என்று அழைப்பார்கள். இவர்கள் ரெத்திரித் (retirement) ஆனபிறகு, ஒப்பிசம் (பென்ஷன்) வாங்கிக் கொண்டு சுகமாக வாழ்கிறார்கள். இவர்கள் வாங்கும் தொகையைக் கணக்கில் எடுத்துக் கொண்டால் மட்டுமே புதுவையின் தனி நபர் வருமானம்தான் இந்தியாவிலேயே மிக அதிகமானது.

'லெஸி பிரான்ஸே' இங்குள்ள பிரெஞ்சு குடி மக்கள் பயிலும் பள்ளிக் கூடம்.

படித்துப் பெரியவர்களானால் பெரும்பாலும் பிரான்ஸைப் பார்க்கப் போய்விடுவார்கள். கலப்புத் திருமணம் இங்கே சகஜம். உள்ளூர்ப் பெயர் ஒன்றும் பிரெஞ்சுக்காரன் வாயில் நுழைவதற்கு ஏற்றாற்போல மற்றொரு பெயரும் வைத்துக் கொள்வார்கள். சொல்தாக்கள் வாழும் வீடுகள் பூட்டிக் கிடப்பதை நிறைய இடங்களில் பார்க்கலாம்.

ரியல் எஸ்டேட், வீட்டு வாடகை உயர்வுக்கெல்லாம் இவர்கள் பணம்தான் காரணம் என்று மற்றவர்கள் குறிப்பிடுவது வழக்கம். பிரான்ஸுக்கும், பாண்டிக்குமான போக்குவரத்து ஏராளம். சிவாஜி கணேசனுக்கு செவாலியே விருதுக் கிடைக்கக் காரணமானவர்கள் புதுவைக்காரர்கள்தான். பெண்களை 'மதாம்' என்றும் ஆண்களை 'மிஸ்ஸியூ' என்றும் சகஜமாகக் குறிப்பிடுவார்கள்.

இங்குள்ள பிரெஞ்சு சொல்தாக்கள் சிலர், சதா சர்வ காலமும் 'பூல்' குண்டு என்றழைக்கப்படும் இரும்பு குண்டு விளையாட்டை விளையாடுவார்கள்.

– ஜெ.ஹரிப்ரியா




## வோட்டுப் போடாவிட்டால் தண்டனை!

பிரெஞ்சு தேச குடியுரிமைப் பெற்ற அனைவருக்கும் (பதினெட்டு வயது நிரம்பிய) தனித்தனியே தபாலில் வோட்டுச் சீட்டு புதுவைக்கு வந்துவிடும். அதை நேரடியாக உரியவரே ஓட்டளித்து தபாலில் சேர்க்கலாம் அல்லது தன்னால் ஓட்டளிக்க இயலாத - முடியாத சூழ்நிலையாயின் தனது வாக்களிப்பை வேறு ஒருவருக்குப் பரிந்துரை செய்யலாம். குடியுரிமை பெற்றவர் ஓட்டளிப்பைப் பயன்படுத்தவில்லை எனில் உடனே அவர்களின் குடியுரிமை ரத்து செய்யப்பட்டுவிடும்.

பிரெஞ்சு பாராளுமன்றத்தில் இடம் பெற, புதுவையிலிருந்து ஒரு பிரதிநிதி தேர்ந்தெடுக்கப்படுகிறார். 'திலகி' என்ற பட்டத்துடன் அழைக்கப்படும் அந்தப் பிரதிநிதி இந்தியாவில் வசிக்கும் பிரெஞ்சு குடியுரிமை பெற்ற மக்களின் நலனுக்காகப் பாடுபடுகிறார்.

– ஆர்.தமிழ் விரும்பி ராஜேஷ்

## இரண்டுக்கும் வாழை உண்டு!

திருமணம், மரணம் இரண்டுக்குமான சடங்குகளும் மிக ஆடம்பரமாக நடக்கும் புதுவையில். சாவு வீட்டில் பக்கத்திற்கு ஒரு வாழை மரம் கட்டியிருக்கும். திருமண வீட்டிலோ, பக்கத்திற்கு இரண்டு என இரட்டைப் படையில் பதினாறு வாழை மரங்கள் வரை கட்டுவது வழக்கம்.

– தில்லைக் கூத்தரசன்



# அப்பா வேலைக்குப் போகிறார்...

# மகன் ரிட்டயராகி விட்டார்!

இப்படி எங்கேயாவது கேள்விப் பட்டிருக்கிறீர்களா? மகனுக்கு 60 வயதாகி விட்டதால் ஓய்வு பெறுகிறார். அப்பாவுக்கு 79 வயதாகியும் வேலைக்குப் போகிறார். பணி செய்யும் இடம் : இந்திய ரெயில்வே.

1934ல், அப்போதைய கிரேட் இன்டியன் பெனின்சுலர் ரெயில்வேயில், இன்ஸ்பெக்டர் ஆஃப் ஒர்க்ஸின் கீழ் ஓர் ஊழியராகச் சேர்ந்தார் ஷியாமாராவ் பி. சார்வே. அப்போது அவருக்கு வயது 11தான். இப்போது 79 வயது.

இவர் மகன் கிருஷ்ணா ஷியாமாராவ் சார்வே, மத்திய ரெயில்வேயில் முதன்மை அலுவலகக் கண்காணிப்பாளராக 42 வருடங்கள் வேலை பார்த்து விட்டு, ஏப்ரல் 30 ஆம் தேதி ஓய்வு பெறுகிறார்.

அன்றைக்கு இருந்த பிரிட்டிஷ் ரெயில்வே அதிகாரி, ஷியாமாராவை வேலைக்கு அமர்த்தும்போது, அவர் ஆரோக்கியமாக உள்ள காலம் வரை வேலைக்கு வரலாம் என்றும், ஆனால் ஒவ்வொரு ஆறு மாதம் முடிந்ததும் மருத்துவ சோதனைக்கு உட்பட வேண்டும் என்றும் ஒப்பந்தத்தில எழுதிக் கொடுத்திருக்கிறார்! முழு உடல் நலத்துடன், எல்லா மருத்துவ பரிசோதனைகளிலும் அவ்வப்போது தேறி, ஷியாமாராவ் இத்தனை காலம் பணிக்கு வருவார் என்று அந்த பிரிட்டிஷ் அதிகாரி நினைத்துக்கூடப் பார்த்திருக்க மாட்டார்.

"68 வருடமாக ரெயில் வேயில் பணிபுரிகிறேன் என்ற



நினைப்பே எனக்குப் பெருமையாக இருக்கிறது. "இத்தனை வருடங்களில், ஒரு குற்றச்சாட்டு 'மெமோ'வோ, சிறு தண்டனையோகூட அதிகாரிகளிடமிருந்து நான் பெற்றதில்லை!" என்று சொல்லுகிறார் ஷியாமாராவ் சார்வே.

தமது 80 ஆவது வயதில், வேலையைத் தாமாக முன்வந்து, ராஜினாமா செய்து விட்டு அக்கடா என்று ஓய்வெடுக்கப் போகிறாராம். (இப்போது அவரது அடிப்படைச் சம்பளம் மட்டும் 4100 ரூபாய்.)

அப்பாவைப் பற்றி கிருஷ்ணா சார்வேக்கு ஏகப் பெருமை. "இந்திய ரெயில்வேயின் சரித்திரத்திலேயே முதல் தடவையாக, மகன் 42 வருடம் வேலை பார்த்து ஓய்வு எடுக்க, அப்பா தொடர்ந்து வேலைக்குப் போகிறார் என்பது அபூர்வமான செய்தி இல்லையா?"

ஆனால் பெரியவர் ஷியாமாராவ் சார்வேக்கு ஒரு வருத்தம். ஏப்ரல் 16 அன்று நடைபெற்ற இந்திய ரெயில்வேயின் 150 ஆவது ஆண்டு விழாவில், 68 வருடங்கள் உழைத்த மூத்த ஊழியரான இவரைப் பார்வையாளராகக் கூட அழைக்கவில்லையாம்!

**- எஸ்.வி.என்.**

நன்றி : 'ஹிதவாதா'
தகவல் : நியூடெல்லி
இ.வி. கிருஷ்ணமூர்த்தி

# KALKI SHOPPING PAGE

சுத்தமான தங்க நகைகள்
வெள்ளி கொலுசுகள்
வெள்ளி பாத்திரங்கள்
வாங்க
சிறந்த கைராசி நிறுவனம்







பொன் வாணிபத்தில்
பொன் விழாகண்ட நிறுவனம்

## ஸ்ரீ வாசவி
ஜுவல்லரி மார்ட் A/c

208, பாரதி வீதி, பாண்டிச்சேரி - 1.
போன் : 334473
P.G.R. சீல் உத்திரவாதமுள்ளது

---

*For Buying, Selling*
*old / new cars*

## KALKI
## Cars

(Consultant - Comm. Agent)

**Genuine dealing on True Value of vehicle**

**Buyers - Sellers direct Deal**

**Quick Finance Arrangement**

109, Kamaraj Salai, (Near Balaji Theatre), Pondicherry - 605 011.
Phone : (0413) 331897, 330431

---

## PALMISTRY



- Accurate Prediction of Health, Wealth, Career, Business, Foreign Travel, Marriage & Child's Future through Scientific study of hand by 17 yrs. experienced Palmist.
- Has addressed Lion/Rotary club meetings.
- Clients in 22 countries
- Has done programmes in Sun TV, Jaya TV, European and Canadian channel.
- Combined the best in palmistry of 8 countries.



Cont.: Vijayakumar @ Ph : 4940162

Old 58, New 12, Nadu Street, 1st floor,
Mylapore, Chennai - 4.
By appointment

---

## புனித மற்றும் உல்லாச பயணம்

வட இந்தியச் சுற்றுலாக்கள்: டில்லி, புதுடில்லி, ஆக்ரா, ஜெய்பூர், சிம்லா, குலுமனாலி, சண்டிகர், ஹரித்வார், ரிஷிகேஷ், பத்ரி, கேதார்நாத், வைஷ்ணோதேவி, அம்ரிஸ்சர் முதலிய இடங்கள்.
தினமும் & வாரந்தோறும்

**கேரள சுற்றுலா**

முன்னார், தேக்கடி, கோவளம், திருவனந்தபுரம், ஆலப்புழா, கொச்சி, குருவாயூர்.
*தினமும் மற்றும் வாரந்தோறும்.*

தொடர்பு கொள்ளவும்:




**Panicker's Travel** (Regd).
(Leading Tour Operators in India)

Recognized by Govt. of India
Ministry. of Tourism
No.22, IInd Floor, "Prince Plaza",
46 Pantheon Road, Egmore,
Chennai-600 008. Ph: 8553010 / 4921 / 2028
Fax:044-8551123.
Email:Panickerschennai@vsnl.net.
Visit us at www.panickerstravel.com
H.O.Gurudwara Road, Karol Bagh. N.Delhi-5

All types of vehicles available for Sabarimala Devotees

**தொ**லைபேசி அழைத்தது.

முன்னறையில் 'ஹிண்டு'வை புரட்டிக் கொண்டிருந்த சிவக்குமார் எட்டிப் பார்த்தார். சரோஜி ஃபோனை எடுத்தாள்.

"ஜீவாவா... யாரது...?"

"........"

"அடடே... சாரி... சாரிப்பா. மறந்துட்டேன். எப்படியிருக்கே...?"

"........"

"ஓஹ்.... அதுக்காகத்தான் வந்தியா...! கேக்கறதுக்கே சந்தோஷமா இருக்கு. இன்னைக்குச் சாயங்காலமே வந்துடு... எதிர் பார்த்துக்கிட்டேயிருப்பேன்..."

ஃபோனை வைத்த சரோஜி, காதுக்குள் நுழைந்த மகிழ்ச்சியை மனசுக்குள் பூட்டி வைப்பது போல் தன்னை மறந்து நின்றாள்.

பிறகு... கணவன் எதிரே போய் அமர்ந்தாள். முகத்தில் மகிழ்ச்சியின் மினுமினுப்பு.

சிவக்குமாரோ அவளை ஆச்சரியமாய்ப் பார்த்தார்.

"கிராமத்திலே ஏழாம் கிளாஸ் வரைக்கும் ஜீவான்னு ஒருத்தன் என்னோட படிச்சான். அவங்கப்பா வாத்தியாரா இருந்து மாற்றலாகிப் போயிட்டார். அதுக்குப் பிறகு அந்த ஜீவா எங்கே போனான் என்ன ஆனான்னு தெரியலே..."

"........"



# கன்னுக்குட்டி பிரியம்

"இப்போ... ஃபோன்ல அவன்தான் பேசினான்..."

"எப்படி...?"

"ஒரு வாரப் பத்திரிகையிலே 'பார்த்த ஞாபகம் இல்லையோ..!'ன்னு ஒரு பகுதி வந்துச்சு. அதுலே இது மாதிரி ரொம்ப அந்நியோன்யமா இருந்து பின்னாடி தொடர்பே இல்லாம போச்சுன்னா அவங்களைப் பத்தி நாலைஞ்சு வரிகள்லே குறிப்பு எழுதி நம்ப முகவரியும் கொடுத்துட்டா பிரசுரம் பண்றாங்க. அதுக்குத்தான் எழுதினேன். ரொம்ப நாள் கழிச்சு, யார் வீட்லேயோ யதேச்சையா இதைப் பார்த்த ஜீவா உடனே புறப்பட்டு வந்துட்டான்."

"ஆச்சரியமா இருக்கே...!"

"உங்ககிட்டே சொல்ல மறந்துட்டேன். இப்பக் கூட உங்கக்கிட்டே கேக்காம அவனை வரச் சொல்லிட்டேன்... படபடப்பிலே..."

"என்ன இது... புதுசு புதுசா ஏதோ பேசிக்கிட்டு... யாருகிட்டே யாரு பர்மிஷன் கேக்கணும்? பைத்தியம்..."

அவளுக்கு நிம்மதியாயிற்று.

"சரி... ஏதாவது வாங்கணுமா... கடைத் தெருவுக்குப் போயிட்டு வரட்டுமா..."

கண்களைச் சுருக்கி யோசித்தாள்.

"கடலைப் பருப்பு சுழியன்னா... பரங்கிப் பிஞ்சு உரப்படைன்னா... அவனுக்கு உயிரு. எங்க வீட்லே அடிக்கடி செய்வாங்க. 'நல்லாயிருக்கும்மா.. இன்னொன்னு கொடுங்கம்மா'ன்னு வாங்கித் தின்பான்..."

கண்கள் பளபளக்க அவள் விவரித்த விதத்தை அவர் வெகுவாக ரசித்தார்.

"இப்பவும்... அதையே செஞ்சு கொடுப்போம். வெல்லம் வேணும். பரங்கிப் பிஞ்சு இப்போ கிடைக்காது. பதிலா காரட் வாங்கிக்குங்க. நல்ல வெண்ணெயா கொஞ்சம் வாங்கிக்குங்க. பொங்கல்னா



உத்தமசோழன்

அவனுக்கு ரொம்
பப் பிடிக்கும்."

**அ**ந்திப் பொழுது நெருங்கிக் கொண்டிருந்தது.

வெளிர் மஞ்சள் காட்டன் புடைவையில் இருந்த சரோஜினி இதுவரை பார்த்திராத அழகில் தெரிந்தாள்.

"இந்தப் புடைவை உனக்கு ரொம்ப நல்லா இருக்கே... எப்போ வாங்கியது...?"

அவள் சிரித்தாள்.

"அது பத்து வருஷம் ஆச்சு... இப்ப வரப் போறானே ஜீவா, அவனுக்கு இளமஞ்சள்னா ரொம்பப் பிடிக்கும்..."

"பரவாயில்லையே... அவரோட ரசனை நல்லாத்தான் இருக்கு"

ஒரு நிமிஷம் கூட உள்ளே உட்கார முடிய வில்லை சரோஜியால். வாசலுக்குப் போவதும் தெருவின் கடைக்கோடி வரை பார்ப்பதும் பின் உள்ளே வருவதும் என விசேஷ பரபரப்பில் இருந்தாள்.

**ஆ**று மணி இருக்கும்.

இரண்டு வீடு தள்ளி ஒரு கார் வந்து நின்றது. இறங்கி ஏதோ விசாரித்தார்கள்.

சரோஜி பரபரப்பானாள்.

"வணக்கம்,... ஜீவா..." கைகூப்பியபடி இறங்கினார் ஜீவா.

காரிலிருந்து இறங்கியவனைக் கண்கள் படபடக்க பார்த்தாள் சரோஜி. சிவக்குமாரும்தான்.

வெடவெடவென்று நல்ல உயரம். மெலிந்த சிவந்த திரேகம். வெள்ளை வெளேரென்று கதர் வேட்டி ஜிப்பா. நெற்றியில் மெல்லிய சந்தனக் கீற்று. சிறிய குங்குமப் பொட்டு, கழுத்தில் சிறிய பவழமாலை. முக்கால் வழுக்கை. மொத்தத்தில் அந்த வயதுக்கு ஏற்றபடி ஆள் அம்சமாக இருந்தார்.

"வா... வா... வாங்க... வாங்க..."

சரோஜி தடுமாறினாள்.

"வா'ன்னே கூப்பிடு... அப்போதான் சந்தோஷமா இருக்கும். 'வாங்கன்னு' சொன்னா நான் எங்கோ தூரத்திலே போய் நிக்கிற மாதிரி தோணும்..."

சரோஜி ரொம்பவே உணர்ச்சிவசப் பட்டுப் போயிருந்தாள்.

"வணக்கம் சார். நான் ஜீவானந்தம்...



''என் பையன் நடிகனாக வருவான்னு எதை வைச்சு சொல்றீங்க?''

''பெரியவன் ஆனதும் கல்யாண மண்டபம் கட்டுவேன்'னு சொல்றானே!''

— மங்கை

---

சரோஜியின் சின்ன வயது சிநேகிதன்..."

"வணக்கம். நான்தான் சிவக்குமார்னு எப்படிக் கண்டுபிடிச்சீங்க...?"

"ஒரு பெண்ணுக்குப் பக்கத்திலே பவ்யமா ஒருத்தன் நின்னா, ஒண்ணு காதலன். இல்லே புருஷன்... இந்த வயசிலே, புருஷனாத்தானே இருக்க முடியும்!"

மகிழ்ச்சியோடு கைகுலுக்கினார் சிவக்குமார்.

சரோஜியின் நடையில் கொஞ்சம் துள்ளல் இருப்பதாகப் பட்டது சிவகுமாருக்கு. சிரித்துக் கொண்டார்.

"உட்கார்... காப்பிதானே...!"

"காப்பியேதான்...! ஆனா... மைனஸ் ஜீனி..."

கையோடு கொண்டு வந்திருந்த பழக் கூடையை டீப்பாய் மீது வைத்தார் ஜீவா.

எதிரில் உட்காரப் போன சிவக்குமாரை தன்னருகே உட்கார வைத்துக் கொண்டார்.

காப்பித் தம்ளரை ஜீவாவிடமும் சிவக்குமாரிடமும் கொடுத்து விட்டு எதிரே உட்கார்ந்து கொண்டாள் சரோஜி.

"உன்னோட பேச்சு மட்டும்தான் மாறவே இல்லே ஜீவா!"

ஜீவாவின் முகத்தில் ஒரு வசீகரப் புன்னகை.

"என்ன செய்ய...? உருவம், உடம்பு எல்லாத்தையும் காலம் தன் கையிலே எடுத்துக்கிடிச்சே. அதோட... எதுவுமே மாறாம இருந்தா அலுத்துப் போகும். இல்லையா...! அதனாலதான் இப்படி... சின்னப் பையன்... வாலிபப் பையன்... நடுத்தர மனுஷன்... இப்ப வயசானவன். இன்னும் கொஞ்ச நாள்லே குடுகுடு தாத்தா. அப்புறம் போய்ட்டு வாரேன்னு இந்த பூமிக்கே டாட்டா. சரியா...?"

''இந்த மனுஷன் இருக்குமிடத்தில் சுவாரசியத்துக்குப் பஞ்சமிருக்காது' என்று நினைத்துக் கொண்டார் சிவக்குமார்.

"உங்க கலகலப்பாலே யாரையும் சடாருன்னு கட்டிப் போட்டுடுவீங்க... சார்..."

''சொல்ல முடியாது. இப்பத்தானே பார்க்கறீங்க. ரெண்டு மூணு நாளு சேர்ந்த மாதிரி பேசினேன்னா... 'என்ன இந்த மனுஷன் இப்படி அறுக்கிறான்னு' தோணும்..."

சிரிப்பதைத் தவிர வேறு பதில் தெரியவில்லை அவருக்கு.

"சரி, சரோஜி... என்னைச் சொல்றியே... நீ தினம் தினம் பாக்குற கண்ணாடி இப்போ... நீ எப்படியிருக்கேன்னு உங்கிட்டே சொல்றதில்லையா...?"

முகத்தில் சுருக்கம் விழுந்து, முடியில் முக்கால் பங்கு வெளுத்துப் போய், கொட்டைப்பாக்குக் கொண்டையில், தங்க ஃப்பிரேம் மூக்குக் கண்ணாடி வழியே கீழ்ப் பார்வை பார்த்தபடி... சரோஜி அசடு வழிந்தாள்.

ஜீவாவும் சரோஜியும் பல்லாங்குழி ஆடியது, பச்சைக்குதிரை தாண்டியது, கோவில் குளத்தில் அவளுக்காகத் தாமரைப் பூ பறிக்கப் போய் கொடியில் சிக்கித் தவித்தது, பள்ளிக் கூடம் விட்டு வரும் வழியில், தாடி மீசையோடு வாட்டசாட்டமாய் வந்த பைத்தியக்காரனைப் பார்த்து ஜீவாவின் கையைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டு, 'பிள்ளை பிடிக்கிறவண்டா...' என்று பயந்து நடுங்கியது என்று ஒவ்வொன்றாய் ஞாபக முத்துக் குளித்து விட்டு... சொன்னாள்:

"இருந்தாலும் ஜீவா நீ ரொம்ப மோசம். உன் மேல எனக்கு ரொம்பக் கோபம். ஊரை விட்டுப் போனீங்க... ஒரு தடவை கூட எட்டிப் பார்க்கலே... ஒரு லெட்டர் கூட போடலே. இத்தனை வருஷத்திலே ஒரே ஒரு தடவை கூட என் நினைப்பு வந்ததில்லையா ஜீவா..."

அவளது ஆதங்கத்தைக் கேட்டு ஜீவாவுக்கு மிகவும் வருத்தமாகி விட்டது. பதில் சொல்ல சிரமப்பட்டார்.

"அப்படியெல்லாம்... இல்லே! அப்பைக்கப்போ நினைப்பு வரும். அப்புறம் ஏதோ கவனம் மாறி மறந்து போகும்... சாரி..."

அப்படிச் சொன்ன ஜீவாவை உற்றுப் பார்த்தாள் சரோஜி.

"நான் என்ன செய்வேன் தெரியுமா...? எங்காவது வெளியூருக்குப் போறப்போ... கல்யாணங்களுக்குப் போறப்போ... எதிர்பாராம நீ கண்ணிலே பட மாட்டியான்னு பார்ப்பேன். சரி... விடு. இப்பத்தான் பார்த்தாச்சே...!"

தானே சமாதானம் செய்து கொண்டாள்.

"உன் குடும்பத்தைப் பற்றி சொல்லு ஜீவா...!"

"பையன் யுஎஸ்லே இருக்கான். குடும்பத்தோட. பேத்தி அங்கேயே யுனிவர்சிட்டியிலே படிச்சுக்கிட்டிருக்கா. மகள் திருச்சியிலே. மாப்பிள்ளை 'பெல்லிலே' என்ஜினியர். மகளோட மகளுக்கே இப்போ குழந்தை பொறந்திருக்கு. அடையாறிலே எனக்கு ஒரு வசந்த மாளிகை இருக்கு. அதிலே நானும், என்னோட வீட்டுக்காரிங்கிற அறுபத்தஞ்சு வயசு காதலியும் ஜாலியா நாட்களைப் பிடிச்சு விரட்டிக்கிட்டிருக்கோம்...!"

கடகடவென்று சொல்லி விட்டு ஓய்ந்த ஜீவாவைச் சந்தோஷமாகப் பார்த்தார் சிவக்குமார்.

"நிஜமாச் சொல்றேன்... ரொம்ப அருமையான மனுஷன் சார்... நீங்க...! உங்களைப் பார்த்ததிலே சரோஜியை விட எனக்குத்தான் சந்தோஷம்..."

'தேங்க்ஸ் சார்...' என்ற ஜீவா, சரோஜியின் பக்கம் திரும்பினார்.

"உன் குடும்பத்தைப் பத்தி சொல்லலையே...!"

"இரண்டே பையன்கள். ஒருத்தன் குவைத்திலே. இன்னொருத்தன் கொச்சியிலே மரைன் இன்ஜினியர். அவனவன் குடும்பத்தோட... எப்பவாவது போயி பார்த்துட்டு வருவோம். அவனுங்க இங்கே வருவாங்க. மற்றபடி உன் பாணியிலே சொல்லணும்னா சரோஜிங்கிற இந்த அறுபத்தைஞ்சு வயசு சின்னப் பொண்ணு, இதோ இந்த எழுபது வயசுக் காதலரோட இந்த மாளிகையிலே வாழ்க்கையோட அந்திப் பொழுதை உல்லாசமா அனுபவிச்சுக்கிட்டிருக்கேன்..." சொல்லி விட்டுச் சிரித்தாள். சிரித்தவளின் பற்களில் ஒன்றிரண்டைக் காணவில்லை. ஆனாலும் ஜீவாவின் கண்களுக்கு அது தெரியவில்லை.

"கேட்க சந்தோஷமா இருக்கு சரோஜி...!"

அப்புறம் நெடுநேரம்... பேச்சு எங்கெங்கோ சென்றது

ஜீவா புறப்பட, இரவு பத்து மணியைத் தாண்டி விட்டது.

சரோஜியின் 'ஐம்பது ஆண்டு கால ஆதங்கம்' தீர்ந்து போன திருப்தி. ஜீவா வந்து போனதைப் பற்றி கணவரோடு பேசி மகிழ வேண்டும் என்ற ஆவலில் எல்லாவற்றையும் பரபரவென்று ஒழித்து விட்டு வந்த போது சிவக்குமார் கண் மூடி படுத்திருந்தார்.

பக்கத்தில் உட்கார்ந்தாள்.

அவர் ஏதாவது சொல்வார் என்று எதிர்பார்த்தாள். எதுவும் பேசவே இல்லை. மனசு துணுக்குற்றது.

"என்னங்க..."

பதிலில்லை.

மெல்ல அவர் முகத்தைத் திருப்பினாள். மங்கலான வெளிச்சத்தில் அவரது மூடிய கண்களின் ஓரத்தில் கண்ணீர் வடிந்திருந்தது.

"என்னங்க.... என்னாச்சு..."

பதற்றப்பட்ட சரோஜியை இலேசாக கண் மலர்த்திப் பார்த்தார் அவர்.

"நாப்பத்தஞ்சு வருஷமா உன்கூடத்தான் இருக்கேன். இந்தளவுக்கு நீ சந்தோஷமா இருந்து நான் பார்த்ததேயில்லை...!"

சரோஜி விக்கித்துப் போனாள். ○








### இருபத்து ஆறாம் அத்தியாயம்

## இருளில் ஒரு குரல்

கணநேரம் ஜொலித்து உலகை ஜோதி வெள்ளத்தில் மூழ்குவித்த மின்னலின் ஒளியிலே, புத்த பிக்ஷு ஏரிக்கரையில் நின்று கைகளைத் தூக்கிப் பேய்ச் சிரிப்பு சிரித்த காட்சியைக் கண்டதும், சற்று நேரம் குண்டோதரன் பீதியினால் கை கால்களை அசைக்க முடியாதவனாய் மரத்தோடு மரமாக நின்றான். பிறகு மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு சேற்றில் தட்டுத் தடுமாறிக் கரை மேல் நடந்தான். கரையைப் பிளந்து கொண்டு தண்ணீர் ஓடிய இடத்தை நோக்கி உத்தேசமாக அவன் நடந்தபோது மறுபடியும் கண்ணைப் பறிக்கும் மின்னல் ஒன்று மின்னியது. அதன் ஒளியில், வெட்டப்பட்டிருந்த கால்வாய், முன்னால் பார்த்ததைக் காட்டிலும் அகன்றிருப்பதையும், தண்ணீர் முன்னைவிட வேகமாய்க் கரையைப் பிளந்துகொண்டு போவதையும் பார்த்தான். புத்த பிக்ஷு நின்ற இடத்தில் அவரைக் காணவில்லை. ஆனால், மண்வெட்டி மட்டும் கிடந்த இடத்திலேயே கிடந்தது.

உடனே குண்டோதரனுடைய மனத்தில் சிறிது தைரியம் உண்டாயிற்று. கால்வாயை ஒரே தாண்டாகத் தாண்டி அப்பால் குதித்தான். அக்கரையில்

**அமரர் கல்கி**

கிடந்த மண்வெட்டியைக் கையினால் தடவி எடுத்துக்கொண்டு அவசர அவசரமாக மண்ணைச் சரித்து வாய்க்காலில் தள்ளத் தொடங்கினான். அப்படித் தள்ளிக் கொண்டிருக்கும்போதே, 'ஆஹா! இது வீண் பிரயத்தனம் போலிருக்கிறதே?' என்ற எண்ணம் அவன் மனத்தில் தோன்றியது.

அதேசமயத்தில் அவன் கழுத்தண்டை ஏதோ ஸ்பரிச உணர்ச்சி ஏற்படவே, சட்டென்று மண்வெட்டியைக் கீழே போட்டுவிட்டு நிமிர்ந்தான். அவன் எதிரே கும்மிருட்டில் ஆஜானுபாகுவான ஒரு கரிய உருவம் நின்றது. அது புத்த பிக்ஷுவின் உருவந்தான் என்பதையும், அவர் தமது இரும்புக் கைகளால் தன்னுடைய கழுத்தைப் பிடித்து நெறிக்க முயல்கிறார் என்பதையும் ஒரு கணத்தில் தெரிந்துகொண்டான் குண்டோதரனுடைய வஜ்ரக் கைகள் புத்த பிக்ஷுவின் கை மணிக்கட்டுகளைப் பிடித்துக்கொண்டன.

மறுகணத்தில் குண்டோதரனுடைய தலைக்கு மேலே நாகநந்தி பிக்ஷுவின் பேய்ச் சிரிப்பு மீண்டும் ஒலித்தது.

இடையிடையே வானத்தைக் கிழித்துக்கொண்டு தோன்றி மறைந்த மின்னல் வெளிச்சத்தினால் இன்னும் கன்னங்கரியதாகத் தோன்றிய காரிருளில், விளிம்பு வரை தண்ணீர் ததும்பி அலை மோதிக் கொண்டிருந்த ஏரிக்கரையில், கணத்துக்குக் கணம் அகன்று வந்த உடைப்புக்கு அருகில், குள்ள உருவமுடைய குண்டோதரனுக்கும் நெடிதுயர்ந்து நின்ற புத்த பிக்ஷுவுக்குமிடையே பிடிவாதமான மல்யுத்தம் ஆரம்பமாயிற்று.

அந்த விசித்திரமான துவந்த யுத்தம் கால் நாழிகை நேரம் நடந்திருக்கலாம். அப்போது, கரையில் மோதிய ஏரி அலைகளின் 'ஓ' என்ற சப்தம், கரையைப் பிளந்துகொண்டு அப்பால் விழுந்த பிரவாகத்தின் 'ஹோ' என்ற சப்தம், வரவர வலுத்துக்கொண்டிருந்த 'சோ' என்ற மழைச் சப்தம், 'விர்' என்று அடித்த புயற்காற்றில் மரங்கள் பிசாசுகளைப் போல் ஆடிய மர்மர சப்தம் ஆகிய இந்த நானாவிதப் பேரொலிகளையும் அடக்கிக்கொண்டு, ''குண்டோதரா! குண்டோதரா!'' என்ற கம்பீரமான குரல் கேட்டது.

துவந்த யுத்தம் செய்த இருவரும் ஒருகணம் ஸ்தம்பித்து நின்றார்கள். ஆனால், அவர்களுடைய கைப்பிடி மட்டும் நழுவவில்லை.

அது யாருடைய குரல் என்று குண்டோதரன் சிந்தித்தான். அசோகபுரத்திலிருந்து வரும்போது, தனக்குப் பின்னாலும் குதிரையடிச் சப்தம் கேட்டது அவனுக்கு நினைவு வந்தது.

''குண்டோதரா! சண்டையை நிறுத்து! உடைப்பை அடைக்க முயலாதே! வீண்வேலை! ஓடிப் போய் ஆயனரையும் சிவகாமியையும் காப்பாற்று! நான் சொல்வது காதில் விழுகிறதா?''

அந்தக் குரல் தன் எஜமானருக்கும் எஜமானரின் குரல் என்று குண்டோதரன் அறிந்துகொண்டான்.

"விழுந்தது, பிரபு! ஆக்ஞை!" என்று கூவினான்.



ண்டோதரன் மறு குரல் கொடுத்தானோ இல்லையோ, இன்னொரு பெரிய மின்னல் - ஆயிரம் சூரியன் ஒளியை ஒத்துக் கண்களைக் குருடாக்கிய மின்னல் மின்னியது! அடுத்தாற்போல் ஒரு பேரிடி இடிக்கப் போகிறதென்பதைக் குண்டோதரன் உணர்ந்தான். "இடி முழக்கம் கேட்ட நாகம் போல்" என்னும் பழமொழி அச்சமயம் அவனுக்கு ஞாபகம் வந்தது. பிக்ஷுவின் கை மணிக்கட்டுகளை அவன் இன்னும் கெட்டியாகப் பிடித்துக்கொண்டான்.

அவன் எதிர்ப்பார்த்தது போலவே இடி இடித்தது. அண்ட பகிரண்டங்கள் எல்லாம் இடிந்து தடதடவென்று தலையிலே விழுவதுபோல இடித்தது. இடி இடித்து நின்றதும் குண்டோதரனுடைய காதில் அதற்கு முன்னால் கேட்டுக் கொண்டிருந்த அலைச் சப்தம், மழைச்

சப்தம் எல்லாம் ஓய்ந்து 'ஙொய்' என்ற சப்தம் மட்டும் ஒலித்துக்கொண்டிருந்தது. "ஐயோ! காது செவிடாகி விட்டதா, என்ன?" என்று குண்டோதரன் ஒரு கணம் எண்ணமிட்டான். ஆனால், அதே இடிச் சப்தம் காரணமாக நாகநந்தியின் பிடி தளர்ந்திருக்கிறது என்பதை அவன் தேக உணர்ச்சி சொல்லிற்று. அவ்வளவுதான்! தன்னுடைய வஜ்ரசரீரத்தின் முழுப் பலத்தையும் பிரயோகித்துப் பிக்ஷுவை ஒரு தள்ளு தள்ளினான்.

ஏரிக்கரையின் அப்புறத்தில் பிக்ஷு உருண்டு உருண்டு போய்க் கீழே உடைப்புத் தண்ணீர் பாய்ந்துகொண்டிருந்த பள்ளத்தில் தொப்பென்று விழுந்ததைக் குண்டோதரன் கண்டான்.

உடனே, ஒரு பெரிய அதிசயம் அவனைப் பற்றிக்கொண்டது. மின்னல் இல்லாதபோது புத்த பிக்ஷு கரையிலிருந்து உருண்டு பள்ளத்திலே விழுந்தது அவனுக்கு எப்படித் தெரிந்தது? ஆஹா! இதென்ன வெளிச்சம்? குண்டோதரன் சுற்று முற்றும் பார்த்தான். சற்றுத் தூரத்தில் ஒரு பனை மரம் உச்சியில் பற்றி எரிவதைக் கண்டான். ஆ! அந்த மரத்தின் மேல் இடி விழுந்து தீப்பிடித்துக்கொண்டிருக்கிறது. வெளிச்சத்திற்குக் காரணம் அதுதான்!

பற்றி எரிந்த பனை மரத்தின் வெளிச்சத்தில் குண்டோதரன் இன்னும் சில காட்சிகளைக் கண்டான். அந்தப் பனைமரத்தைத் தாண்டி ஒரு குதிரை அதிவேகமாய்ப் போய்க்கொண்டிருந்தது. அந்தக் குதிரை மேலிருந்தவர்தான் சற்று முன்னால் தனக்குக் குரல் கொடுத்தவர் என்பதை உணர்ந்தான். ஏரியின் ஓரமாக இன்னொரு மரத்தில் நாகநந்தி பிக்ஷு வந்த குதிரை கட்டப்பட்டிருப்பதையும் கண்டான். அதற்கு மேல் வேறொன்றையும் பார்க்க குண்டோதரன் விரும்பவில்லை. அந்தக் குதிரை இருந்த இடத்தை நோக்கிப் பாய்ந்து சென்றான். நடுவில் கால் சறுக்கிக் கீழே விழுந்ததைக்கூட அவன் பொருட்படுத்தவில்லை.

## அருள்வாக்கு

பணமும் வசதியும் எந்தத் தொழில்காரருக்கும் அதிகம் இருக்கக்கூடாது. இவற்றைவிட முக்கியமானது இவை எவற்றை உத்தேசித்து ஏற்பட்டனவோ, ஆனால் இவற்றால் எதை உண்மையில் பெற முடியவில்லையோ, அந்த ஆத்ம திருப்திதான் - மனநிறைவுதான் - மனிதனுக்கு வேண்டியது. திருப்தனாக இருந்தால்தான் ஆனந்தமாக பகவத் தியானம் பண்ண முடியும். அப்படிப்பட்ட மனசில்தான் பரம ஸத்தியமான வஸ்து எதுவோ அது தெரியும். அதனால்தான் நம் சாஸ்

மரத்திலிருந்து குதிரையை அவிழ்த்து விட்டு, அதன் மேல் குண்டோதரன் ஏறினானோ இல்லையோ, பனைமரத்து வெளிச்சமும் அணைந்துவிட்டது. அதுவரையில் சிறு தூறலாக இருந்தது. அப்போது பெருமழையாக மாறியது. எத்தனையோ பெருமழையைக் குண்டோதரன் பார்த்ததுண்டு. ஆனால் அன்றைய இரவு பெய்த மழை மாதிரி அவன் பார்த்ததேயில்லை. வானம் பொத்துக்கொண்டு, அதற்கு மேலே தங்கியிருந்த தண்ணீர் தொட தொடவென்று கொட்டுவதுபோல் மழை கொட்டிற்று.

"ஆஹா! ஏரி உடைப்புக்கும் இந்தப் பெரு மழைக்கும் பொருத்தந்தான். நல்ல நாள் பார்த்துத்தான் நாகநந்தி திருப்பாற்கடலை வெட்டி விட்டார்!" என்று குண்டோதரன் எண்ணிக்கொண்டான்.

"எப்படியும் இந்த ஏரி வெள்ளம் அசோகபுரம் போய்ச் சேர்வதற்கு முன்னால் நாம் போய்ச் சேர வேண்டும்" என்று தீர்மானித்தான்.

ஆனால், அந்தத் தீர்மானத்தை அவனால் நிறைவேற்ற முடியவில்லை. அந்த இருளிலும், மழையிலும் குண்டோதரன் வழி கண்டுபிடித்துக் குதிரையை நடத்திக்கொண்டு அசோகபுரம் போய்ச் சேர்வதற்கு வெகு நேரம் முன்னாலேயே ஏரிக்கரை நெடுந் தூரத்துக்கு நெடுந்தூரம் உடைத்துக்கொண்டு வெள்ளம் பிரளயமாக ஓடத் தொடங்கி அசோகபுரத்தையும் அடைந்துவிட்டது.

திரப்படி ரொம்பவும் எளிய வாழ்க்கையே விதித்திருக்கிறது. ஓரளவுக்கு மேல் ஸௌகர்யங்கள் அதிகமாகிவிட்டால் அப்புறம் இந்திரிய ஸுகத்துக்கு மேலான விஷயங்களுக்குப் போகவே முடியாது. அதேமாதிரி, உழைப்பு இல்லாமல், சிரமமே படாமல் ஸுக ஜீவியாக இருந்தாலும் புத்தி கண்டதை நினைத்துக் கெட்டுத்தான் போகும். ஆகையினால் ஆத்மிகமாக உயர வேண்டுமானால் அஸௌகர்யமும் சிரமமும் கடும் உழைப்பும் பேணத்தான் வேண்டும். இவற்றையும் சௌகர்யம் என்றே பாவிக்கிற மனப்பான்மை அப்போது தானே வரும்?



- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்

## இருபத்து ஏழாம் அத்தியாயம்

# "மாமல்லர் எங்கே?"

குண்டோதரனுக்கு எச்சரிக்கை செய்துவிட்டுக் குதிரை மேல் விரைந்து சென்ற மனிதர் யார் என்பதை நேயர்கள் ஊகித்துத் தெரிந்துகொண்டிருப்பார்கள். சிற்பம், சித்திரம், சங்கீதம் முதலான லளித கலைகளில் வல்லவராயிருந்தது போலவே யுத்த தந்திரக் கலையிலும் தேர்ச்சி பெற்றவரும், மாறுவேடம் பூணுவதில் நிகரற்ற சாமர்த்தியம் வாய்ந்தவரும், வாதாபியின் சமுத்திரம் போன்ற சைனியத்தை வடபெண்ணைக் கரையில் எட்டுமாதம் நிறுத்தி வைத்தவருமான மகேந்திர பல்லவ சக்கரவர்த்திதான்.

காஞ்சிக் கோட்டையிலிருந்து வட திசையை நோக்கிக் கிளம்பியது முதல் மகேந்திர பல்லவர் கையாண்ட யுத்த தந்திரங்கள் இதைப் போல் பல சரித்திரங்கள் எழுதுவதற்குப் போதுமானவையாகும். நாகநந்தி என்னும் புத்த பிக்ஷுவின் வேஷம் பூண்டிருந்தவர் புலிகேசியின் அந்தரங்க நம்பிக்கைக்குப் பாத்திரமான ஒற்றர் என்று அவர் ஊகித்திருந்தார். அதைப் பரஞ்சோதி கொண்டு போன ஓலையிலிருந்து உறுதிப்படுத்திக் கொண்டார். நாகநந்தியின் கையெழுத்தையும் இலச்சினையையும் மேற்படி ஓலையிலிருந்து தெரிந்துகொண்டது அவருக்குப் பலவிதங்களிலும் உபயோகமாக இருந்தது. அந்த உபயோகங்களில் ஒன்றுதான், பல்லவ ராஜ்யத்தின் எல்லைப் புறத்தில் காத்திருந்த கங்கநாட்டுத் துர்விநீதனை அவசரமாக காஞ்சி மாநகரை நோக்கி முன்னேறச் செய்தது.

புலிகேசியின் மாபெருஞ் சைனியத்திற்குப் பின்வாங்கிக் காஞ்சிக் கோட்டைக்குத் திரும்பி வந்து கொண்டிருந்த மகேந்திர பல்லவர் தாம் கோட்டைக்குள் புகுந்து கொள்வதற்கு முன்னால் ஒரு பெரு வெற்றியடைந்து பல்லவ வீரர்களுக்கும் பல்லவ சாம்ராஜ்யத்துக்கும் மக்களுக்கும் உற்சாகம் ஊட்ட வேண்டுமென்று தீர்மானித்தார். போருக்குத் துடிதுடித்துக் கொண்டிருந்த குமார சக்கரவர்த்தியின் ஆத்திரத்துக்கு ஒருபோக்குக் காட்டவும் இந்தச் சந்தர்ப்பத்தைச் சக்கரவர்த்தி பயன்படுத்திக் கொள்ள விரும்பினார்.

எனவே, நாகநந்தி எழுதியது போல் துர்விநீதனுக்கு உடனே காஞ்சியை நோக்கி முன்னேறும்படி ஓலை எழுதி அனுப்பினார். அதைப் பார்த்துவிட்டே துர்விநீதன் தன் சிறிய சைனியத்துடன்

காஞ்சியை நோக்கி விரைந்து வந்தான்.

குண்டோதரன் கொடுத்த ஓலையைப் படித்ததும் நாகநந்திக்கு ஏற்பட்ட அளவில்லாத வியப்பையும் நேயர்கள் கவனித்திருப்பார்கள். அவருடைய ஓலையின்படி முன்னேறி வருவதாகத் துர்விநீதன் அதில் எழுதியிருந்தபடியால், தாம் அத்தகைய ஓலை ஒன்றும் அனுப்பவில்லை. இதில் ஏதோ சூழ்ச்சி நடந்திருக்கிறதென்று தீர்மானித்துக்கொண்டு நாகநந்தி குண்டோதரன் கொண்டு வந்த குதிரையில் ஏறிச் சென்று புள்ளலூர்ப் போர்க்களத்தை அடைந்தார். அதற்குள்ளாக, கங்க நாட்டுச் சைனியம் தோல்வியடைந்து சேனா வீரர்கள் சிதறி ஓட ஆரம்பித்து விட்டார்கள். அந்த நிலைமையில், துர்விநீதனுடைய உயிரைக் காப்பாற்றுவது ஒன்றுதான் தாம் செய்யக்கூடியது என்பதை உணர்ந்த நாகநந்தி, அவனைத் தம்முடன் அழைத்துக் கொண்டு தெற்குத் திசையை நோக்கி விரைந்து ஓடினார்.

இந்தப் புள்ளலூர் யுத்தத்தை மாமல்லரையும் பரஞ்சோதியையுமே முழுதும் நம்பி மகேந்திர பல்லவர் விட்டுவிடவில்லை. பொறுக்கி எடுத்த ஆயிரம் குதிரை வீரர்களுடன் புள்ளலூர்ப் போர்க்களத்துக்கு வந்து சேர்ந்தார். எதிர்பாராத இடத்தில் எதிர்பாராத சமயத்தில் வந்து தாக்கியபடியால், கங்கர் படை பீதியடைந்து ஓடலாயிற்று. புதிதாக வந்த குதிரைப் படைத் தலைவர் வஜ்ரபாகுவை மாமல்லர் சந்தித்தபோது, அந்த வீரன்தான் தம் தந்தையென்றும் அறிந்தார். அதனால் அவருடைய ஆத்திரம் அதிகமாயிற்று. இந்த ஒரு போரிலாவது தம்மை முழுதும் நம்பி விட்டுவிடக் கூடாதா என்று தந்தையிடம் சண்டை பிடித்த பிறகு, சிதறி ஓடும் கங்கர் படையைத் துரத்திச் சென்று நிர்மூலமாக்க அனுமதி கேட்டார். ஒரு நிபந்தனையுடன் சக்கரவர்த்தி அதற்கு அனுமதி கொடுத்தார். அந்த நிபந்தனை என்னவென்றால், 'தென்பெண்ணை நதி வரையில் எதிரிகளைத் துரத்திச் செல்லலாம்; நதியைக் கடந்து அப்பால் போகக் கூடாது' என்பதுதான்.

எதிரிகளைத் துரத்திச் செல்லும்படி மாமல்லரைத் தென்திசைக்கு அனுப்பி விட்டு மகேந்திரர் திரும்பிப் போய் விடவில்லையென்பதைச் சென்ற அத்தியாத்தில் பார்த்தோம். நாகநந்தியின் கொடூரச் சூழ்ச்சிகளை எதிர்ப்பதற்குக் கள்ளங்கபடமற்ற இளம் பிள்ளையான மாமல்லரையே நம்பி விட்டு விட முடியுமா?


ண்டோதரனுக்கு எச்சரிக்கை செய்து விட்டுக் கிளம்பிய மகேந்திர பல்லவர், இருட்டையும் புயலையும் பெரு மழையையும் பொருட்படுத்தாமல் தென்கிழக்குத் திசையை நோக்கிச் சென்றார். உதயமாவதற்கு ஒரு ஜாமம் இருக்கும்போது, தென்பெண்ணை நதிக் கரையை அடைந்தார். அப்போது மழையின் வேகம் குறைந்து வானத்தில் மேகங்கள் கலைந்து நட்சத்திரங்கள் கூடத் தெரிந்தன. அந்த இலேசான வெளிச்சத்தில் நதியும் நதிக்கரையும் அப்போது அளித்த காட்சியை வர்ணிப்பது இயலாத காரியம். நதியின் இரு கரையையும் தொட்டுக்கொண்டு 'ஹோ' என்ற இரைச்சலுடன் நொங்கும் நுரையுமாகப் பிரவாகம் போய்க்கொண்டிருந்தது. நேற்று அல்லது முந்தைய தினமாயிருந்தால் அத்தகைய பெரும் பிரவாகம் கூடச் சற்றுத் தூரத்திலிருந்த பார்வைக்குத் தெரிந்திராது. அடர்ந்த தோப்புகளினால் அது மறைக்கப்பட்டிருக்கும். ஆனால் இப்போது நதிக்கரையில் நெருங்கி வளர்ந்திருந்த அவ்வளவு விருட்சங்களும் முறிந்து விழுந்து கிடந்தன.

மகேந்திரர் நதிக்கரையை நெருங்கியதும் முறிந்து விழுந்து கிடந்த மரங்களுக்கு மத்தியிலிருந்து குதிரை ஒன்று வெளியே வந்தது. அதன் மேல் இருந்தவன் சத்ருக்னன்.

"பிரபு! இன்றிரவு நான் பட்ட கவலை என்றைக்கும் பட்டதில்லை. தங்களைத் தனியே அனுப்பிய என்னுடைய அறிவீனத்தை நினைத்து நினைத்து வருந்

தப்பட்டுக்கொண்டிருந்தேன். இந்தப் புயலிலும் மழையிலும் தாங்கள் எப்படி வழி கண்டுபிடித்து வந்து சேர்ந்தீர்கள்?'' என்றான் சத்ருக்னன்.

"நானும் எத்தனையோ இரவுகளைப் பார்த்திருக்கிறேன், சத்ருக்னா! ஆனால் இன்றைய இரவைப் போன்ற பயங்கரத்தைக் கண்டதில்லை. போகட்டும். நீ இங்கே காத்திருந்ததில் பயன் உண்டா?'' என்று மகேந்திர பல்லவர் கேட்டார்.

"ஆம், பிரபு! இங்கேதான் அவர்கள் நதியைக் கடந்து சென்றார்கள்" என்றான் சத்ருக்னன்.

''துர்விநீதன் இருந்தானா? பார்த்தாயா?''

"வெகு சமீபத்தில் நின்று பார்த்தேன். துர்விநீதன் யானை மீதிருந்தான். மற்றவர்கள் ஏழெட்டுப் படகுகளில் சென்றார்கள். அப்போது புயல் ஆரம்பிக்கவில்லை. கிட்டத்தட்ட அவர்கள் அக்கரையை அடைந்தபோதுதான் காற்று ஆரம்பித்தது. கரை ஓரம் போய்விட்டபடியால் தட்டுத் தடுமாறிக் கரையேறி விட்டார்கள். அப்போது நதியில் பிரவாகமும் இவ்வளவு இல்லை."

'நீ சொன்ன இடத்துக்குத்தான் அவர்கள் போயிருக்க வேண்டும். பின்னால் படகு ஒன்றும் விட்டு விட்டுப் போகவில்லையா?''

"ஒரு படகை விட்டுப் போனார்கள். அதை நீங்களும் நானும் எடுத்துக் கொண்டு போய்ப் பிக்ஷுவைத் திண்டாடச் செய்யலாமென்று நினைத்தேன். ஆனால் புயல் நம்மையும் திண்டாட விட்டுப் படகை அடித்துக்கொண்டு போய் விட்டது!''

"நல்லதாய்ப் போயிற்று, சத்ருக்னா! துர்விநீதனைத் தொடர இப்போது அவகாசமில்லை. அதைவிட முக்கியமான வேலை இருக்கிறது. மாமல்லனும் பரஞ்சோதியும் எங்கே இறங்கியிருக்கிறார்கள் என்று தெரிந்துகொண்டாயல்லவா?''

"இந்த நதிக்கரையில்தான் கிழக்கே அரை காத தூரத்தில் இருக்கிறார்கள். ஆ! இந்தப் பெரும் புயலில் அவர்கள் என்ன பாடுபட்டார்களோ; தெரியவில்லை!''

''உடனே அவர்கள் இருக்குமிடம் போக வேண்டும். பொழுது விடிவதற்குள் அவர்கள் தென்பெண்ணையைக் கடந்து விட வேண்டும். உன் குதிரையின் உடம்பில் சக்தி இன்னும் இருக்கிறதா, சத்ருக்னா? என் குதிரை ரொம்பவும் தளர்ந்து விட்டது."

"என் குதிரை இன்னும் போகும் பிரபு! இதன் மேல் ஏறிப் போங்கள். நான் இங்கேயே இருக்கிறேன்."

"இல்லை. இரண்டு பேருந்தான் போக வேண்டும்..."

"பிக்ஷு இங்கு வந்தால்...?''

''பிக்ஷு இங்கு வர மாட்டார், சத்ருக்னா! நிச்சயமாக இன்னும் சில நாளைக்கு வர மாட்டார்."

"ஏன் பிரபு?''

"உன் சீடன் குண்டோதரன் அவரைத் தூக்கித் திருப்பாற்கடல் உடைப்பிலே போட்டுவிட்டான்!''

''என்ன? என்ன?''

"அதோ அந்தச் சப்தம் உன் காதில் விழுகிறதா, சத்ருக்னா?''

சத்ருக்னன் உற்றுக் கேட்டுவிட்டு, "ஆம் பிரபு! சமுத்திர கோஷம் மாதிரி இருக்கிறது! மறுபடியும் மழையா?'' என்றான்.

''மழைச் சப்தம் அப்படியிராது. திருப்பாற்கடல் உடைத்துக்கொண்டு விட்டது. நாளைப் பொழுது போவதற்குள் வராக நதியிலிருந்து தென்பெண்ணை வரையில் ஒரே பிரளயந்தான்!''

''ஐயையோ! மாமல்லர்...?'' என்று அலறினான் சத்ருக்னன்.

''வா! போகலாம்! மாமல்லனையும் பரஞ்சோதியையும் எச்சரித்துக் காப்பாற்றலாம்!'' என்றார் மகேந்திரர்.

"சுவாமி, குண்டோதரன்?''

''குண்டோதரன் திருப்பாற்கடல் உடைப்பை அடைக்க முயற்சி செய்தான். அது முடியாத காரியம். 'ஓடிப் போய் ஆயனரையும் சிவகாமியையும் காப்பாற்று' என்று எச்சரிக்கை செய்துவிட்டு வந்தேன். என்ன செய்தானோ?''

"ஆஹா! அவர்கள் வேறு அகப்பட்டுக் கொண்டார்களா? இன்றைக்கு உண்மையிலேயே மிகப் பயங்கரமான இரவுதான்!'' என்று சத்ருக்னன் கூறிக் குதிரையைப் போகும்படி முடுக்கினான்.

"இது பயங்கரமான இரவானாலும் ஒரு பயன் கிடைத்தது சத்ருக்னா! புலிகேசியை வெல்வதற்கு இன்னொரு ஆயுதத்தைக் கண்டுபிடித்தேன்!" என்றார் சக்கரவர்த்தி.

"பிரபு தாங்கள் உண்மையிலேயே விசித்திர சித்தர்தான்!" என்று சத்ருக்னன் வியப்புடன் கூறினான்.



ரு குதிரைகளும் நதிக்கரையோரமாகக் கிழக்குத் திசையை நோக்கிச் சென்றன. வழியெல்லாம் முறிந்து கிடந்த மரங்களைத் தாண்டிப் போவதில் அவர்களுக்கு எவ்வளவோ சிரமம் ஏற்பட்டது. எனினும், பொழுது புலரும் சமயத்தில், அவர்கள் பல்லவ சைனியத்தின் பாசறையை வந்தடைந்தார்கள். அல்லோலகல்லோலமாய்க் கிடந்த அந்தப் பாசறையில் நுழைந்ததும், பல்லவ வீரர்களுக்கெல்லாம் வந்திருப்பவர் மகேந்திர சக்கரவர்த்தி என்பது தெரிந்துவிடவே, பலமான ஜயகோஷம் எழுந்தது.

மகேந்திரர், தளபதி பரஞ்சோதியைப் பார்த்தவுடனே, அவருக்குப் பேச இடங்கொடாமல், "தளபதி! உடனே புறப்பட வேண்டும். இன்னும் ஒரு நாழிகைக்குள் தென்பெண்ணையைக் கடந்து அக்கரை போக வேண்டும். நீந்தத் தெரிந்தவர்கள் நீந்தட்டும். நீந்தத் தெரியாதவர்கள் மரம் மட்டை எதையாவது பிடித்துக் கொள்ளட்டும்! குதிரைகள், யானைகள் எல்லாவற்றையும் ஆற்றில் அடித்து விடுங்கள். ஆயுதங்கள், சாமக்கிரியைகள் எது போனாலும் போகட்டும்; மனிதர்கள் பிழைத்தால் போதும்!" என்றார்.

இந்த விசித்திரமான கட்டளையைக் கேட்டுத் திகைத்து நின்ற பரஞ்சோதியைப் பார்த்து, "ஓஹோ! காரணம் தெரிய வேண்டுமா? திருப்பாற்கடல் உடைத்துக் கொண்டுவிட்டது! அதோ வினாடிக்கு வினாடி அதிகமாகும் கோஷத்தைக் கேளும்; இன்னும் ஒரு ஜாமத்திற்குள்ளே வெள்ளம் இங்கே வந்துவிடும்!" என்றார்.

பரஞ்சோதியின் முகத்தில் அப்போது சொல்ல முடியாத பீதி தோன்றியது. "பிரபு... பிரபு...!" என்று மேலே பேச முடியாமல் அவர் தயங்கி நிற்பதைக் கண்டு, "என்ன விசேஷம், தளபதி! மாமல்லன் எங்கே?" என்று சக்கரவர்த்தி கேட்டார்.

"நேற்று இருட்டிய பிறகு அசோக புரத்துக்குப் புறப்பட்டுப் போனார் பிரபு! அங்கே... அங்கே..." என்று மேலும் சொல்வதற்குப் பரஞ்சோதி தயங்கினார்.

"தெரிந்துகொண்டேன், தளபதி! அசோகபுரத்திலே ஆயனர் இருக்கிறார்; அந்தச் சிற்ப சக்கரவர்த்தியைப் பார்ப்பதற்காகக் குமார சக்கரவர்த்தி புறப்பட்டுப்போனார்! நல்லது, மாமல்லனைக் காப்பாற்றும் பொறுப்பு இனி நமக்கு இல்லை; அது ஏகாம்பரநாதனுடைய பொறுப்பு! இங்குள்ள மற்றப் போர் வீரர்களை நாம் காப்பாற்ற முயல்வோம்!" என்றார் மகேந்திரர்.



மல்லரைப் பற்றிய அநாவசியமான கவலை நமது வாசகர்களையும் பீடிக்காமலிருக்கும் பொருட்டு, அச்சமயம் அவர் எங்கே இருந்தார் என்பதைச் சொல்லி விட விரும்புகிறோம்.

கிழக்கு வெளுத்துப் பொழுது புலரத் தொடங்கியிருந்த அந்த நேரத்தில் அசோக புரத்துப் புத்த விஹாரத்தின் அருகில், மாமல்லர் ஏறியிருந்த குதிரையானது பெருகி வந்த எதிர் வெள்ளத்திலே நீந்தித் திணறிக்கொண்டிருந்தது.

விஹாரத்தின் மேல் தளத்திலே ஆயனரும், சிவகாமியும் சிவகாமியின் அத்தையும் நின்று ஆவலுடனும் கவலையுடனும் அவருடைய வருகையை நோக்கிக் கொண்டிருந்தனர். ரதியும் சுகப் பிரம்ம ரிஷியும் கூட அங்கே காணப்பட்டனர்.

அதேசமயத்தில் நீர் சூழ்ந்த புத்த விஹாரத்தின் ஓரமாகப் பானைத் தெப்பத்தில் குண்டோதரன் வந்துகொண்டிருந்தான்.

வீதியிலும் மற்றும் சுற்றுப்புறமெங்கும் வெள்ளம் கழித்துக் கொம்மாளமிட்டு அதிவேகமாக ஓடிக் கொண்டிருந்ததுடன் கணத்துக்குக் கணம் பெருகிக் கொண்டுமிருந்தது.

(தொடரும்)

# உழுபவன் கணக்குப் பார்க்கலாம்!



த.மா.கா.வில் இருப்பவர்களின் அரசியல் காங்கிரஸில்தான் துவங்கியிருக்கும் என்பது ஒரு பொதுவான விஷயம். ஆனால் விவசாயத்துறை அமைச்சர் நமச்சிவாயம் வந்த பாதை வேறு. கல்லூரிப் படிக்கும் காலத்தில் வைகோ பேச்சால் கவரப்பட்டு மதி.மு.க.வில் இணைந்தவர் இவர். அந்தக் கட்சி சார்பாக 1996ல் உழவர்கரைத் தொகுதியில் போட்டியிட்டுத் தோற்றவர். பின்னர் த.மா.கா.வில் இணைந்து சென்ற தேர்தலில் அதே தொகுதியில் போட்டியிட்டு வென்றவர். குடம் தண்ணீருக்கு அலைகையில் ஒரு லாரித் தண்ணீர் கிடைத்தால் ஆனந்தக் கூத்தாடுவோம் அல்லவா? அதுபோல, த.மா.கா.வில் உட்கட்சி பிரச்னையால் தேனி ஜெயக்குமார் ஒதுக்கப்பட, அடித்தது அதிர்ஷ்டம் நமச்சிவாயத்துக்கு. ஆறு பேர் கொண்ட அமைச்சரவையில் இன்று இளையவர் இவர்தான். உழவர் கரையிலுள்ள இவரது வீட்டுக்குள் நுழையும் போதே ஏர்கலப்பைகள், பதநீர் பிரிக்கும் இயந்திரம், டயர் வண்டி, வைக்கோல் போர், பசுமாடுகள் என்று விவசாயத்தின் அடையாளங்கள் கண்ணில் படுகின்றன.

"மதி.மு.க.விலிருந்து விலகியதற்குக் காரணம் அந்தக் கட்சி புதுவை மாநிலத்தைப் பற்றிச் சிறிதும் கவலைப்படாமல் அரசியல் நடத்தியதுதான்" என்கிறார் நமச்சிவாயம். மூப்பனாரிடம் இருந்த எளிமையும், ஊழலற்ற அரசியலும் அவரை த.மா.க.வோடு இணைத்துவிட்டதாம்.

"உலக வர்த்தக நிறுவனத்தின் வழி காட்டுதலில், பல நாடுகளில் தொழில், வர்த்தகம், விவசாயம் ஆகியவற்றின் பழைமை முகங்கள் மாறி வருகின்றன. அந்த அடிப்படையில் நமது நாட்டு விவசாயிகளுக்குக் கடுமையான சவால்கள் காத்திருக்கின்றன. மாறிவரும் சூழல்களைக் கணக்கில் எடுத்துக் கொண்டு புதுவையில் நான்கு இடங்களில் உழவர் உதவியகம் துவங்கயிருக்கிறோம். பயிர்சுழற்சி, வீரிய விதைகள், சந்தைப் பொருளாதாரம் ஆகியவற்றைப் பற்றி தெளிவான அணுகுமுறையை இந்த உதவியகங்கள், விவசாயிகளுக்குச் சொல்லித் தரும். கிராக்கியாக இருக்கும் விவசாயப் பொருளைப் பயிர் செய்து லாபம் சம்பாதிக்கும் வழிகளைச் சொல்லித் தருவோம்.

இப்போது இயற்கையான உரம் போட்டு விளைவிக்கப்படும் பொருட்களுக்கு நல்ல விலை இருக்கிறது. அந்தப் பயிர் முறையை ஊக்கப்படுத்தவிருக்கிறோம். மருத்துவத் தாவரங்களுக்கு நல்ல ஏற்றுமதி வாய்ப்பிருக்கிறது. விவசாயிகள் மருத்துவ தாவரங்களைப் பயிரிட்டால் லாபம் கொழிக்கும். புதுவையைப் பொறுத்த வரை எந்த நிலையிலும் விவசாயிகளின் நலனைப் புறக்கணிக்க மாட்டோம்" என்று உறுதியாகக் கூறுகிறார் நமச்சிவாயம்.

கொசுறு நியூஸ்: முதல்வர் ரங்கசாமி இவருக்குச் சின்ன மாமனார்.




கல்கிக்கு யாரைக் கண்டும் பயம் இல்லை. முரசொலி மாறன் மறுப்பை கல்கி மறைக்கவும் இல்லை. தலையங்கத்தில் மட்டுமின்றி கார்ட்டூனிலும் அது தெளிவு படுத்தப்பட்டுள்ளது. இவ் விஷயத்தில் பிரதமரின் பொறுப்பு என்ன என்பதைச் சொல்வதே தலையங்கத்தின் நோக்கம்.

\- ஆர்

✉ 'உயிர்காத்த உதவி' படித்து முடித்தவுடன், அந்தத் தாய்மையை வணங்கத் தோன்றியது.

இராஜபாளையம், வே.ஈஸ்வரன்

✉ தகவல் தொடர்பு வளர்ச்சி அடைந்த நிலையில் வாசகர்களின் எண்ண வேகத்திற்கு ஈடு கொடுத்து, மறு இதழிலேயே கடிதங்களை வெளியிடுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

கோயம்பத்தூர், எஸ்.அஸ்வின் சுந்தரேசன்

✉ ஓ... போடு! பாடலில் பங்கேற்றவர்களின் ஓ போட்ட அனுபவங்கள் ஆஹா, ஓஹோ போட வைத்தன.

நெய்வேலி, சாந்தி சுந்தர்

# சுறுசுறுப்புத் திலகங்களே வருக!

வாசகர்கள் சுறுசுறுப்பாக கடிதம் எழுதினால் தாங்களும் சுறுசுறுப்பாகப் பிரசுரிக்கிறோம். இதோ, இந்த வாரம் சில கடிதங்கள் :

✉ 'சட்டசபை அளிக்கும் பாதுகாப்பில் உண்மையற்ற குற்றச்சாட்டுகளைக் கூறும் பொன்னையன் சட்டசபைக்கு வெளியே வந்து அதே குற்றச்சாட்டைக் கூறத் தயாரா?' என்றும், அப்படிச் செய்தால் அவரை நீதிமன்றத்திலே சந்திக்கத் தயார் என்றும் முரசொலி மாறன் கேட்டிருந்தாரே! யாரைக் கண்டு பயந்து கொண்டு இதையெல்லாம் தலையங்கத்திலே மறைத்தீர்கள்?

சென்னை, பேராசிரியர் வி.லோகநாதன்

✉ பணிந்து வந்திருப்பதாலே பிரபாகரனை கருணாமூர்த்தியாகச் சித்திரிக்காமல் அதே சமயம் முதல்வரின் 'வெட்டி' முழக்கத்தையும் கண்டித்து வந்த தலையங்கம் மிக நியாயமானது!

பொன்மலை, ஆர்.பிரகாஷ்

✉ ... பீலே போன்ற மெகாஸ்டார்கள் அடுத்த உலகக் கால்பந்துப் போட்டியில் கலந்து கொள்ள மாட்டார்கள் என்று எழுதியிருக்கிறீர்களே! பீலே எப்போதோ ஓய்வு பெற்றுவிட்டாரே!

வேலூர், எல்.கோபாலகிருஷ்ணன்

✉ 'மனமறிந்தும்' கவிதைக்கு ஆல்பர்ட் படம் அற்புதம். இளம்பிறை எழுதிய கவிதையில், 'வந்துபோகும் ஒரே ஆறுதல் இற்றுப்போன இற்றுகளினூடே ஈரங்கலந்த தென்றல்' என்ற வரிகள் அருமை!

சேத்துப்பட்டு, பா.அச்சுதன்

# பசு (கோமாதா) பராமரிப்புக்கு உங்கள் அன்பு காணிக்கையை வழங்குங்கள்!

இந்துக்களின் அனைத்து தெய்வங்களும் உள்ளடக்கிய கோ என்பது கோமாதாவாகிய பசுவாகும். அது தாயைப் போன்றது. இத்தகைய புனிதமான கோமாதாவை (திருவேற்காடு அருள்மிகு தேவி கருமாரியம்மன் திருக் கோவில் அருகில்) பெருமாளகரம், திருவேற்காடு (P.O) சென்னை - 77 என்ற விலாசத்தில் பசுமடம் ஒன்றை ஏற்படுத்தி, அதில் பசுக்களை அதிநவீன, விஞ்ஞான முறைப் படி பராமரித்து பாதுகாக்கின்றோம். மேலும், பசுக்களுக்கு தினமும் கோபூஜை செய்யப்படுகிறது. இறைசிந்தனையோடு தாய்க்கு இணையாக உள்ள பசுக்களை பாதுகாக்கும் எங்கள் பசுமடத்திற்கு

**ஒரு பசுவை ஒரு நாள் பராமரிக்க ஆகும் செலவு ரூ.60/-**

**ஒரு பசுவை ஒரு மாதம் பராமரிக்க ஆகும் செலவு ரூ.1800/-**

தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். மேலும் எங்கள் பசுமடத்திற்கு தங்களது பசுவைத் தானமாகத் தரலாம். அல்லது பசுக்களுக்குத் தேவையான தீவனத்தை தரலாம். பராமரிப்புத்தொகையை தானமாகக் கொடுப்பவரின் பிறந்தநாள், திருமண நாள், தாய், தந்தையரின் திதி நாள் போன்ற ஏதாவது ஒரு நாளில் கோபூஜை செய்து பிரசாதங்கள் அனுப்பி வைக்கப்படும்.

தாங்கள் அனுப்பும் நன்கொடையை ஸ்ரீ கோசாலா ஸேவா டிரஸ்ட் (Sri Ghosala Seva Trust) என்ற பெயரில் CHQ / D.D / M.O மூலம் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி கோமாதாவின் பேரருளைப் பெறலாம்.



## பசுமடம்

(பசுக்கள் பாதுகாப்பு இல்லம்)
பெருமாளகரம், திருவேற்காடு (P.O)
சென்னை - 600 077. ✆ : 4959302






# கல்கி வைரவிழா

## லேட்டஸ்ட்

# சிறுகதைப் போட்டி!

**முதல் பரிசு – ரூ.10,000**

**இரண்டாம் பரிசு – ரூ. 7,500**

**மூன்றாம் பரிசு – ரூ. 5000**

*அலுப்பையெல்லாம் விரட்டியடித்து பி - 12 இன்ஜெக்ஷன் போட்ட மாதிரி இருக்க வேண்டும் உங்கள் சிறுகதை!*

இவ்வாண்டு **அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி**க்கான

*முதல் நிபந்தனை இதுதான்!*
*மற்ற நிபந்தனைகள் வழக்கமானவை:*

- சரித்திரம், சமூகம், மர்மம், நகைச்சுவை என எப்படிப்பட்ட கதையாகவும் இருக்கலாம். கதை, உங்கள் சொந்தக் கற்பனையாக இருக்க வேண்டும்; அவ்வளவுதான்!
- கல்கியில் நான்கு பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
- சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதி மொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்பட மாட்டா.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும் போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதி மொழி தர வேண்டும்.
- முழு வெள்ளைத் தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
- தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- ஒருவரே எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- பரிசுக்குரிய கதைகளை நடுவர் குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே இறுதி.
- முடிவு வெளியாகும் வரை, எவ்வித கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.
- **'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2002'** என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி:

**ஆசிரியர், கல்கி**
**47, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல்,**
**சென்னை – 600 097.**

- கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : **ஜூன் 15.**
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 4, ஆண்டுமலரில் வெளியாகும்.



***பரிசுகள், கல்கி வைரவிழா நிகழ்ச்சி மேடையில், ஆகஸ்ட் 4, 2002 அன்று வழங்கப்படும்.***



• சரித்திரம் படைக்க வந்த சக்திகள்

ஸ்டேஷனிலும், பெண்கள் ஆரத்தி சுற்றி, திலகமிட்டு, மாலையிட, ஆண்கள் காமிராவுக்குள் அந்த நிமிடங்களைப் பதிவு செய்தனர். ஸ்டீம் இஞ்சினைப் பார்த்த குஷியில், கார்டுக்கு வேலை வைக்காமல், மழலைப் பட்டாளம் ஆட்டி

# கூட்டம் சேர்த்த கூ... கூ...

இந்த வாரம் மும்பைக்காரர்களைக் கலக்கிய விஷயம்... மத்தியில் வாஜ்பேயி அரசைக் காப்பாற்ற பவார் (என்.ஸி.பி) அவருக்குக் கை கொடுத்து விட்டால் இங்கே என்ன ஆவது என்று சிவ சேனை கலங்கியதல்ல... கல்யாண் கலவரங்களை ஒட்டி இக்பால் ஷேக் (என்.ஸி.பி தலைவர்) கைதானதல்ல.. கூ... குக் கு குக் தான்! அரசியல்வாதியோ சினிமா ஸ்டாரோ ஈர்க்க முடியாத பெருங் கூட்டத்தை ஒரு நீராவி ரயில், ஸ்டேஷனுக்கு ஸ்டேஷன் இழுத்ததென்றால் நம்புவீர்களா? 150 வருடங்களுக்கு முன்னால், போர்பந்தரிலிருந்து தானே புறப்பட்ட அந்த ஆதிகாலத்து ஹெரிடேஜ் ட்ரெயினைக் காண, சுட்டெரிக்கும் வெய்யில், திரளாக மக்கள், ஆங்காங்கே கொடிகள், தாரை தப்பட்டைகளுடன் குழுமிவிட்டனர். திருவனந்தபுரம் - தில்லி ராஜ்தானியின் ஓட்டுநர் ஏ.ஹெச்கான், 14 போகிகள், நிறைய ஸலூன்கள், ஏஸி செய்யப்பட்ட மர இருக்கைகள் கொண்ட அந்த ரயிலை, 70 நிமிடங்களில் தாணாவுக்கு ஓட்டிச் செல்ல, சரித்திர ஏடுகளைத் திரும்பப் புரட்டிய இந்நிகழ்ச்சி, சரித்திரத்தையே படைத்துவிட்டது. ஒவ்வொரு



• சரித்திரம் படைத்த ரயில்

யது கொடியை, அடித்தது விசிலை!

விசிலடிச்சான் குஞ்சுகளை விட்டு விட்டு விசிலடித்த வினோத குமரிக்கு வருவோமா? 'நாத அஞ்சலி'யின் ஆண்டு



• சரித்திரம் படைக்கும் குரு - சிஷ்யர்

விழாவில், கிட்டத்தட்ட இரண்டு மணி நேரம் விசிலடித்தே கர்நாடக இசைக் கச்சேரியை நிகழ்த்தி, ஆடியன்சை ஆச்சர்யத்திலாழ்த்தினார், முதல் முதலாக மும்பை விஜயம் செய்திருந்த விசில் க்வீன் நிவேதிதா ஷியாம் சுந்தர். அட... கொஞ்சம் கனமான சங்கதிகளை எடுக்கும்போது கொஞ்சம் கஷ்டப்படுத்தத்தான் செய்யும். அதனாலென்ன... வாய்ப்பாட்டுப் பாடும் வித்வான்களே முகத்தை அஷ்டகோணலாக்கிக் கொள்கையில், இந்தப் பதினைந்து வயதுப் பெண்ணின் சாதனை அலாதிதான்... ஒருநொடி கூட முகம் சுளிக்கவோ, சுழற்றவோ செய்யாதது கண்டு, பலர் இமைக்கவும் மறந்தனரே!



• சரித்திரம் படைத்த ஜோடி

கண் இமைக்க மறந்த மற்றொரு குடும்பம் லோயர் பரேலில் உள்ள கட்டங்கர் குடும்பம். 'க்வாலிடி - வால்ஸ்' ஐஸ்க்ரீம்காரர்களின் 'ஏக் தின் கா ராஜா' போட்டியில், முதல் பரிசான பத்து லட்சம் வென்றதுடன் அதை ஒரே நாளில் செலவழிக்கவும் வேண்டும் என்ற நிபந்தனையைக் கேட்டவுடன் ஆச்சர்யத்தில் விரிந்த கண்கள் விரிந்தபடியே உள்ளன. தூக்கம் வந்தால்தானே கண்ணை மூடுவதற்கு? எல்லோரையும் போல, 150 பாயிண்டுகள் சேரும் வரை, ஐஸ்க்ரீமைத் தின்று தீர்த்து, ஸ்க்ராட்ச் கார்டை வாங்கி, அதைக் கீறிப் பார்த்தால்... அடித்தது பத்து லட்சம்! வீட்டுக்கான சாமான்கள், கார், ஆடைகள், நகைகள் முதலியவற்றைக் குறிப்பிட்ட டீலர்களிடம் வாங்கலாம். மாதம் ரூ.5500 சம்பளம் வாங்கும் முனிசிபாலிடி ஊழியரான ரஜனீஷ் கட்டாங்கர், நீண்ட நாளைய கனவான 'காரை' வாங்கப் போகிறாராம். பெட்ரோல் செலவுக்கென்று வேறு ஏதாவது போட்டிகளைக் குறி வைத்திருக்கிறாரோ?

குறி வைத்தால் தப்பாதது விஜயனின் வில் மட்டுமல்ல; சச்சினின் 'பேட்' கூடத்தான். இந்த வயதிலேயே, ப்ராட்மேனின் சாதனையை (29 டெஸ்ட் செஞ்சுரிகள்) ஓவலில் எட்டிப் பிடித்துவிட்டாரே? குரு அச்ரேகருக்கு பெருமை தாங்கவில்லை. 11 வயதிலிருந்தே சச்சினை ட்ரெயின் பண்ணியவராயிற்றே? "இன்றைக்கு 200 ரன்கள் குவித்திருப்பார்; மறுநாள் தவறாமல் நெட்ப்ராக்டீசுக்கு வருவார்; நேற்று 50 ஓவர்களில் பந்து வீசியிருப்பார்; இன்றும் முணுமுணுக்காமல் தோள் வலியைப் பொருட்படுத்தாமல் பந்து வீச ஒப்புக் கொள்வார். இந்த அயராத உழைப்புடன், இயற்கையிலேயே அவரிடம் திறமை பொதிந்து கிடப்பதால், இன்னும் நிறைய சாதனைகள் புரிவார் பாருங்கள்" என்கிறார் ரமா காந்த் அச்ரேகர்; படுத்த படுக்கையாயிருந்தாலும், 'சச்சின்' என்ற உடன் நிமிர்ந்து உட்கார்ந்து விடுகிறாரே?

நிமிர்ந்து உட்கார்வதற்கென்று தொய்ந்து கிடக்கும் ஃபைன் ஆர்ட்ஸ் சபாக்களெல்லாம் இப்போது உதவிக்கழைப்பது 'மகளிர் அணி'களைத்தான். செம்பூர் மகளிர் அணியின் வெற்றிக்குப் பிறகு, சண்முகாநந்தா அடி பற்றியிருக்கிறது. காட்கோபர் 'ரசிக ரஞ்சனியை' உயிர்ப்பித்த கையுடன், அலைந்து திரிந்து ஸ்பான்சர்களைப் பிடித்து போட்டிகளெல்லாம் நடத்தி, பரிசுகளெல்லாம் அறிவித்து, பிற்பட்டோர்க்கு உதவிக்கரம் நீட்டி தடபுடல் படுத்துகிறது. சரோஜா ஸ்ரீநிவாசன் தலைமையில் இயங்கும் 'மகளிர் படை' அடுத்து முலுண்டு ஃபைன் ஆர்ட்ஸிலும் 'லேடீஸ் விங்' பிறந்துவிட்டது. தொட்டில் போட்ட வைபவமே ஆரவாரமாயிருந்தது. ஏனைய மகளிர் அணிகளெல்லாம் வந்திருந்து வாழ்த்தின. பெண்கள் நடத்திய புதுமையான ஹ(ரி)ரிகதாகாலட்சேபத்தைக் காண, உட்கார இடமில்லாமல் ஹவுஸ் ஃபுல் ஆடியன்ஸ்! நுண்கலைகளுக்கு 'சக்தி' கிடைத்து விட்டதே!

- ஜெயஸ்ரீ ராஜ்

# செங்கோட்டுவேலன்

குருஜி ஏ.எஸ். ராகவன்

இருபதாம் நூற்றாண்டில் காந்தி ஆசிரமம் அமைக்கப் பெற்றுப் பெயரெடுப்பதற்கு முன்பே முக்கியத்துவம் பெற்றுவிட்ட சிற்றூர் திருச்செங்கோடு. புராண காலத்து முக்கியத்துவம் ஒரு பக்கம், பதினைந்தாம் நூற்றாண்டில் அருணகிரிநாதர் விஜயம் செய்து, பாடி இத் தலத்தைத் திருப்புகழில் பதிவு செய்த பெருமை இன்னொரு பக்கம். இவற்றுக்கு இடைப்பட்ட பெருமைகளாக சிலப்பதிகாரத்திலும் ஞானசம்பந்தர் தேவாரத்திலும் பாடப் பெற்று சிறப்பெய்திய தலம் திருச்செங்கோடு.

'சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும் ஏரகமும் நீங்கா இறைவன்' என்று சிலப்பதிகாரம் முருகன் திருத்தலங்களை வரிசைப்படுத்துகிறது.

ஞானசம்பந்தர் இத்தலம் வந்து 'கொடிமாடச் செங்குன்றனார்' என்று தொடங்கி பதிகம் பாடியிருக்கிறார். அவரோடு வந்த அன்பர்கள், பனியினால் வெப்பு நோய்க்கு ஆளாகி அவதிப்பட, 'திருநீலகண்டர் பதிகம்' என்பதைப் பாடி அந் நோயை ஊரை விட்டே விரட்டினார் ஞானசம்பந்தர் என்பது வரலாறு.

நாமக்கல்லிலிருந்து ஈரோடு செல்லும் வழியில் இருக்கிறது திருச்செங்கோடு. சேலத்திலிருந்து சுமார் 28 மைல்.

ஊரின் மையத்தில் இருக்கிறது செங்கோட்டு மலை. குன்றுதோறாடும் குமரன் இம்மலையில் குடியேறியது எப்போது என்று ஆராயப் புகாமல் விடுவதே நல்லது!

புராணத்தை மட்டும் தெரிந்து வைத்துக் கொள்வோமே!

பாற்கடலைக் கடைய தேவாசுரர்கள் மந்தர மலையைத் தூக்கிப் போட்டார்கள் அல்லவா? அதற்குக் கயிறாக வாசுகி என்னும் பாம்பைச் சுற்றிப் பிணைத்தார்கள் அல்லவா...? அவ்வாறு சுற்றி வளைக்கையிலே வாசுகியினுடைய உடலின் ஒரு பகுதி இந்த மலையில் விழுந்ததாம். அதனால்தான் இதற்கு நாக கிரி என்றும் நாகர் மலை என்றும் கூட பெயர்.

பழங்காலத்தில் செம்பொன் நிறமாக இருந்ததால் இம் மலைக்குச் செம்மலை என்றும் பெயர் விளங்கியிருக்கிறது. செம்பொன் நிறத்தில் ஜொலித்த மலையைப் பெயர்த்துப் போக பேராசை கொண்ட அக்காலத்து மன்னர்கள், மலையைச் சுற்றி இரும்புச் சங்கிலிகளைப் பிணைத்து, யானைகளைக் கொண்டு அச் சங்கிலிகளை இழுக்கச் செய்தார்களாம்! மலை மேல் இருந்த முருகப் பெருமான் தனது வேலால் சங்கிலியைத் துண்டித்து விட்டானாம்! இரும்புச் சங்கிலி துண்டிக்கப்பட்ட இடம் இன்றும் பள்ளமாகக் காணப்படுகிறது. இந்



• அர்த்தநாரீஸ்வரர் உற்சவத் திருமேனி



நிகழ்ச்சியை ஞாபகப்படுத்தும்விதமாக இரண்டு யானை உருவங்கள் மலையடி வாரத்தில் செதுக்கி வைக்கப்பட்டுள்ளன!

பொன்னுக்கும் பொருளுக்கும் ஏங்கும் நமது அஞ்ஞானத்தைக் கண்டு சிரித்தபடி இன்றைக்கும் செங்கோட்டு மலை மேல் நிற்கிறான் வேலவன். இரண்டாயிரம் அடி உயரமுள்ள மலையின் உச்சியை அடைய 1300 படிகள் ஏற வேண்டும். சில படிகள் நேர் செங்குத்தாக இருக்கின்றன...

*மாடுமனை போனால் என்ன*
*மக்கள் சுற்றம் போனால் என்ன*



• செங்கோட்டு வேலன் - விமானம்

*கோடிச்செம்பொன் போனால் என்ன-*
*இனியே*
*குறுநகை போதுமடி - குமரன்*
*குறுநகை போதுமடி!*

என்று கிளிக்கண்ணியைப் பாடிக் கொண்டே ஏறி விட வேண்டியதுதான்!

ஏற ஆரம்பிப்பதற்கு முன், அடிவாரத்திலேயே இருக்கின்ற ஆறுமுகப் பெருமானை மறக்காமல் தரிசனம் செய்ய வேண்டும். வள்ளி - தேவயானை இருபுறங்களிலும் நிற்க பன்னிரு கையனாக மேற்கு நோக்கி இருக்கிறான் இந்த முருகன். மிகப் பழைமையான கோவில். மூலவர் திருவடிவத்தில் விசித்திர சித்ர வேலைப்பாடுகள் காணக் கிடைக்கின்றன. இங்கே இடும்பனுக்கும் சன்னிதி அமைக்கப்பட்டிருக்கிறது.

இந்த அடிவார ஆறுமுகனைக் கும்பிட்டு விட்டு ஏறினோமானால் வழிநெடுக நின்று, இளைப்பாறிச் செல்வதற்குச் சௌகரியமாக பதினொரு மண்டபங்கள் கட்டி விடப்பட்டுள்ளன. அவற்றுள் நான்காவது மண்டபத்தில் நந்திகேசுவரருக்கு ஒரு சன்னிதி! நினைத்த காரியம் நடக்க வேண்டுமானால் இந்த நந்திகேசுவரருக்கு வெண்ணெய் சார்த்தி வேண்டிக் கொள்ளலாம்.

அடுத்து வருவது நாகராஜனுக்கான கோயில். இங்கே அறுபது அடி நீளத்தில் ஐந்து தலை நாகர் உருவம் ஒன்று செதுக்கப்பட்டிருக்கிறது.

வடவரையை மத்தாக்கி வாசுகியை நாணாக்கி... பண்டொருநாள் கடல் வயிறு கலக்கிய கதையின் அடையாளம்!

ஒருவாறு உச்சியை அடைந்து விட்டோமானால் ஐந்து நிலை ராஜகோபுரவாயில் நம்மை வரவேற்கிறது. மூன்று பிராகாரங்களைக் கடந்து போனால் செங்கோட்டு வேலவன் சன்னிதி இருக்கிறது. கூடவே அர்த்தநாரீசுவரராக அரியும் மகாவிஷ்ணு ரூபத்தில் அயனும் தனித்தனி சன்னிதிகளில் இருக்கிறார்கள்.

வேலவன் சன்னதி கிழக்கு நோக்கி அமைந்திருக்கிறது. பால முருகனாக, ஒரு முகம், இரு கரங்களுடன் நிற்கிறான் செங்கோட்டு வேலவன். ஒரு கையில் வேல்; மறு கையில் சேவற்கொடி. வேல், கல்லிலேயே செதுக்கப்பட்டு அவன் கரத்தோடு கரமாக இருக்கிறது. நாகாசல் வேலவர், செங்கோட்டு வேலவர், செங்கோடன், செங்கோட்டையன் என்ற பெயர்களுடன் வழங்குகிறான் இந்த முருகன்.

இவனுக்குப் பின்புற சன்னிதியில் இருக்கிறார் அம்மையப்பன். மாதொரு பாகனான அவர் வடிவம் நவபாஷாணத்தால் ஆனது. திருவடிகளுக்கிடையே ஒரு சுனை ஊறி குளிர்வித்துக் கொண்டிருக்கிறது.

ஆதிகேசவ பெருமாள், துர்கை, பைரவர், நவக்கிரஹங்கள் ஆகியோருக்குத் தனித்தனி சன்னிதிகள்.

இன்னும் சில பல படிகளை ஏறிக் கடந்தால் உச்சியிலே ஒரு வினாயகர் காற்று வாங்கிக் கொண்டு சுற்றுப்பட்டியையெல்லாம் கண்காணித்துக் கொண்டிருக்கிறார். இக் கோயில் தீர்த்தங்களுள் முக்கியமான குமாரதீர்த்தம், இந்த உச்சி வினாயகரைப் போய்ப் பார்க்கும் வழியிலே இருக்கிறது. முருகன் தன் வேலினால் உண்டாக்கிய தீர்த்தம்.

**செ**ங்கோட்டு வேலனை, பல மன



• மேற்கு நுழைவாயில்.. தெற்கு கோபுரம்

நிலைகளில் பாடி மகிழ்ந்திருக்கிறார் அருண கிரிநாதர். திருப்புகழிலும் கந்தரலங்காரத்தி லும் கந்தரனுபூதியிலும் செங்கோடுக்குச் சிறப்பிடம் இருக்கிறது. 21 திருப்புகழ் பாக் கள். 9 அலங்காரப் பாக்கள்.

***மாலோன் மருகனை மன்றாடி***
***மைந்தனை வானவர்க்கு***
***மேலான தேவனை மெய்ஞ்ஞான***
***தெய்வத்தை மேதினியிற்***
***சேலார் வயற்பொழிற் செங்கோ***
***டனைச்சென்று கண்டுதொழ***
***நாலா யிரங்கண் படைத்தில னேஅந்த***
***நான்முகனே!***

*(கந்தரலங்காரம்)*

'செங்கோடனைக் காண நாலாயிரங் கண்கள் தாது போனானே பிரும்மா!' என்று ஒரு பாடலில் வியப்பு.



• திருச்செங்கோடு மலைத் தோற்றம்

***செங்கேழ் அடுத்த சின வடிவேலும்***
***திருமுகமும்***
***பங்கே நிரைத்த நல் பன்னிரு தோளும்-***
***பதுமமலர்க்***
***கொங்கே தரளம் சொரியும்***
***செங்கோடைக் குமரன் என***
***எங்கே நினைப்பினும் அங்கே என்முன்***
***வந்து எதிர் நிற்பானே***

என்று மற்றொரு பாடலில் உறுதியான நம்பிக்கை. நினைக்கும்போதெல்லாம் வந்து எதிர் நிற்பானாம் இந்த முருகன். அந்தத் தீர்மானத்தில் எத்தனை உறுதி இருந்தால், 'நான் யமனை எதிர்கொள்ளும் காலத்தில் நீ என்னை வந்து பார் முருகா!' என்று பாடி யிருப்பார் அருணகிரிநாதர்!

'சூரனை வென்றவனே! சடாமுடிதாரி யான நஞ்சை உண்ட நீலகண்டனின் புதல் வனே! தேவசேனை நாயகனே! பாம்பு மலை யாம் திருச்செங்கோட்டில் வாழும் செழுஞ் சுடரே! ஆறு முகங்களோடும் பன்னிருகரங் களோடும், கருணை விழிமலர் ஈராறினோ டும், கோழிக் கொடியுடனும், பச்சைக் குதிரை போன்ற மயிலேறி உலகை ஒரு நொடியில் வலம் வருபவனே! அடியேன் யமனுடன் செய்யும் போரினைக் காணவும், அடியேனை ஆட்கொள்ளவும் நீ வரவேண் டும். ஒருபுறம் அடியார் திருக்கூட்டம் தமிழ் பாடல்களை இசைக்க, மறுபுறம் தேவர்கள் வேதங்களைப் பேரொலியுடன் பாடிப் போற்ற நீ வந்து சேர வேண்டும்..' என்ற பொருள்படப் பாடுகிறார். *('கொடிய மறலியு மவனது கடகமும்(ம்)..' என்று தொடங்கும் திருப்புகழ்)*

கந்தர் அனுபூதியிலோ உலக நிலை களைக் கடந்து பாடுகிறார் அருணகிரிநாதர். அனுபூதிப் பாடல்கள், தத்துவங்கள், நுண் பொருள்கள் நிறைந்தவை. அவற்றுள் திருச் செங்கோடு பற்றிய பாடல்களில் வேறு தலங் களின் நினைவு வராமல் அத் தலத்தை மட்டும் சிறப்பிக்கிறார் :

*'கூகா' என என்கிளை கூடி அழப்*
*போகா வகை மெய்ப் பொருள்*
*பேசியவா!*
*நாகாசல வேலவ! நாலு கவித்*
*தியாகா! சுரலோகா சிகாமணியே!*

'கூகா' என்று சுற்றத்தார் கூடி அழுதிடச் செய்யும் மரண நிலைக்குப் போகாத வண் ணம் மெய்ப்பொருளை உபதேசித்தவனாம் நாகாசல வேலவன். தேவர் உலகத்து மாமணி யான அவன் நான்கு வித கவிபாடும் திறனை தனது அடியார்களுக்கு அளிக்கிறான் என்று அனுபூதி செங்கோட்டு வேலனைச் சிறப்பிக் கிறது.

***'வள்ளிக் கணவன் பேரை***
***வழிப்போக்கர் சொன்னாலும்***
***உள்ளம் குழையுதடி கிளியே; ஊனும்***
***உருகுதடி***

என்று அவன் பெயரைக் கேட்ட மாத்தி ரத்திலேயே ஊனையும் உயிரையும் அவனி டத்தில் கொடுத்து விட்டோமானால் அப்புறம் மரணம்தான் ஏது? மரண பயம் தான் ஏது!

அறிவிப்பு பலகைகூட இல்லாமல் அமைதியின் மொத்த உருவமாய் இருக்கிறது அரவிந்தாஸ்ரமம். ஆசிரம வாயிலின் எதிர்ப் புறம் சற்றுத் தள்ளி உறுத்தாத வாசனை களோடு விதவிதமான பூக்களை மலிவான விலையில் விற்றுக் கொண்டிருக்கிறார்கள் சில பெண்கள். ஒரு மலர்ந்த தாமரை, ஒரு நாகலிங்கப் பூங்கொத்து, கொஞ்சம் காகிதப்பூ, இலைகளுடன் ஒரு நாட்டு ரோஜா, மருக்கொழுந்து என எல்லாம் கலந்த பூங் கொத்தை கையில் பிடித்த படி ஆசிரமத்தின் உள்ளே நுழைகிறோம். குறுகலான பாதை, வலப்புறமுள்ள ஸ்ரீஅரவிந்தர் – அன்னை ஆகியோரின் வெள்ளைச் சல வைக்கல் சமாதி முன் நம்மை நிறுத்துகிறது. வாங்கி வந்த மலர்களைச் சமாதியின் பாதப்பகுதியில் மெல்லக் கிடத்தி விட்டு, கிழ்ப்புறம் சம்மணமிட்டு அமர்ந்து, தியானிக்கும் பக்தர்களோடு அமைதியாய் நாமும் ஐக்கியமாகிறோம்.




# ஆரோவில் தரும் விடுதலை!


• ஆரோவில் ஆன்மா மாத்ரி மந்திர்


• திறந்தவெளி அரங்கில் பன்னாட்டு மண்ணின் சங்கமம்.

கொல்கத்தாவில் ஒரு செல்வக் குடும் பத்தில் பிறந்து, இங்கிலாந்தில் பயின்று திரும்பிய அரவிந்தர், இந்திய மண்ணுக்குப் பூரண விடுதலை வேண்டும் என்று கோரிய முதல் தலை வராய் வங்க விடுதலை இயக்கத்தை வழி நடத்திய வர். 1908-ல் தேச விரோத சதி திட்டம் தீட்டினார் என்ற குற்றச்சாட்டுடன் ஓராண்டு சிறையில் அடைக் கப்பட்டார். அதுதான் அவரது வாழ்க்கை யின் திருப்பு முனையாக அமைந்து விட்டது. சிறை வாழ்க்கையில் யோக சாதனை செய்து, பொலிவுடன் திரும்பி வந்தவர், அரசியல், பத்திரி கைப் பணி இரண்டையும் சுதந்தி ரத்திற்கு மாபெரும் ஆயுதமாகப் பயன்படுத்தினார். ஆனால் விரைவிலேயே ஓர் அக அழைப்பு வந்தது. அரசியலிலிருந்து முற்றிலும் விலகி 1910-ஏப்ரல் 4-ல் புதுவையில் வந்து அவர் இறங்கியபோது பூமி சிலிர்த்துக் கொண்டது. வெறும் தப்பித்தலுக்காக அரவிந்தர் வர

வில்லை. புதுவையில் நான்காண்டு காலம் தீவிரயோக சாதனை செய்து முடித்தார். அதே சமயம் மீரா எனும் பிரெஞ்சு தேசப் பெண்மணி புதுவை வந்து சேர்ந்தார்.

இவர் சிறுமியாக இருந்தபோதே அக மாற்றங்களில் பல நுண்ணுலக அனுபவங் களைப் பெற்றவர். இலக்கியம், தத்துவம், இசை, ஓவியம் என எல்லாம் தேர்ந்தும், நிறைவடையாத இவரது மனம், இறைத்தன் மையை உடலில் வெளிப்படுத்தும் யோக சாதனைக்கு வழிகாட்டல் தேடினார்.

• பூ அலங்காரம் கண்களுக்குப் புண்ணியம்!

1914-ல், அரவிந்தரைச் சந்தித்தார் அன்னை. தாம் அகக் காட்சியில் பலமுறை கண்ட குரு அரவிந்தரே எனப் புரிந்தது. ஆனால் அரவிந்தரோ "எல்லோருக்கும் இவர் அன்னையாக விளங்குபவர்" என்று விளக்கினார். அன்னையுடன் இணைந்து 'ஆர்யா' என்ற தத்துவஞான மாத இதழைத் தொடங்கினார்.

அரவிந்தரின், 'தெய்வீக வாழ்க்கை', 'யோகங்களின் ஒருங்கிணைப்பு', 'கீதைக் கட்டுரைகள்', 'வேதத்தைப் பற்றி', 'மனித வளர்ச்சிச் சக்கரம்', 'மனித ஒருமைப் பாட்டின் இலட்சியம்' போன்றவை ஆர் யாவில் வெளி வந்தன.

1926-ல் புறத் தொடர்புகளிலிருந்து ஒதுங்கினார் அரவிந்தர். இந்தக் கால கட் டத்தில் 'அதிமனசக்தி' என்று குறிப்பிட்ட ஒரு புதிய சக்தி, பிரபஞ்ச வெளியின் தூலச் சூழலில் இருந்ததை அறிந்து, அதைக் கீழே கொண்டு வரும் ஆன்மிகப் பணியில் ஈடு பட்டார் அரவிந்தர். இந்தப் பணி 1950-ல் அவர் மகாசமாதி அடையும் வரை தொடர்ந்தது.



• ஸ்ரீ அரவிந்தர்

தாம் மேற்கொண்ட பணியைத் தொடர்ந்து செய்யும் பொறுப்பை அவர் அன்னையிடம் கொடுத்தார்.



• ஸ்ரீ அன்னை

1956– பிப்ரவரி இருபத்தொன்பதாம் நாள் ஸ்ரீ அரவிந்தர் குறிப்பிட்ட 'அதிமனசக்தி' தூலச் சூழலில் வெளிப்பட்டதாக நம்பப்படுகிறது. அந்தச் சக்தி பூமிக்கு இறங்கி வரும் என்றும், தூல உலகில் அது எவ்வாறு செயல்படும் என்றும் அரவிந்தர் ஏற்கெனவே அறிவித்திருந்தார்.

அதிமனசக்தி இறங்கி வந்த அடுத்த ஆண்டு அன்னை தமது சீடர்களுக்கு இவ் வாறு விளக்கமளித்தார்:

"ஒரு புதிய உலகம் பிறந்துள்ளது. முற்றிலும் புதியதோர் உலகம். அது பழைய உலகத்தைவிட சக்தி வாய்ந்தது. பெரும்பாலான மக்களுக்கு அது உணர்வில் கூட இன்னும்



• பூக்கள் விற்கும் பெண்கள்

புலப்படவில்லை.

இந்தப் புதிய உலகை அடையும் வழி, முற்றிலும் புதிது. இதுவரை யாரும் சென்றிராத பிரதேசத்தில் அதற்கென அடி அடியாகப் பாதை அமைக்க வேண்டியுள்ளது."

பதின்மூன்று ஆண்டுகளுக்குப் பின்னர், 1969ல் ஜனவரி முதல் நாள் மீண்டும் ஒரு புதிய உணர்வு பூமியில் இறங்கியுள்ளது என்றும் மனிதனால் அதைப் பெற முடியும் என்றும் அன்னை அறிவித்தார். இதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்பே 1954ல் 'ஒரு கனவு' என்ற தலைப்பிட்டு அன்னை எழுதியது ஆரோவில் நகர் பற்றித்தான். இந்த நகரில் வாழும் மனிதர்கள் அதிமன சக்தியை (Supermanhood), பெற்று நிறைவாக வாழ முடியும் என்று ஆத்ம இலட்சியம் கொண்டிருந்தார் அன்னை.

அவர் வாழ்ந்த காலத்திலேயே தொடங்கப்பட்டது ஆரோவில். மனித இனம் முழுவதற்கும் சொந்தமான ஒரு நகரம். நகர பூதத்தின் சந்தடி எதுவுமின்றி இருக்கிறது ஆரோவில்.

உள்நாட்டுச் சுற்றுலா பயணிகளை மட்டுமல்ல, உலக சுற்றுலாப் பயணிகளையும் உலகில் இப்படியும் ஒரு நகரம் இருக்கிறதா என விழி விரிய வைத்துக் கொண்டிருக்கிறது ஆரோவில். எல்லா நாடுகளையும் சேர்ந்த ஆண்களும் பெண்களும், மதக் கோட்பாடுகளையும், கலாசார வேறுபாடுகளையும் கடந்து முழு அமைதியோடு இயங்கச் செய்கிறது. இந்த நகரின் ஆன்மிக மையமான மாத்ரி மந்திர் தியானக் கூடம் உலக உருண்டை வடிவில் இருக்கிறது. இதனுள் இப்போதைக்கு ஒரு தியான அறை பொது மக்களுக்காகத் திறந்துவிடப்பட்டாலும், மேலும் பதினோரு தியான அறைகளைக் கட்டிக் கொண்டிருக்கிறார்கள். மாத்ரி மந்திரின் மற்றொரு அங்கம் தாமரை வடிவிலான திறந்தவெளி அரங்கு. இதன் நடுவே தாமரை மொட்டு வடிவத்திலிருக்கும் தாழியில் 124 நாடுகளின் மண் சங்கமமாகியிருக்கிறது என்று அறிகையில், உள்ளம் ஒரு கணம் சிலிர்க்கிறது.

ஆரோவில்லின் பண்பாட்டுப் பிரதேசத்தில் தேர்வுகளற்ற கல்வி, முழுமையான கலை கற்றுத் தரப்படுகின்றன. விளையாட்டுப் பயிற்சிக்கு முக்கியத்துவம் தருகிறார்கள்.

சர்வதேசப் பிரதேசத்தில் ஒவ்வொரு நாட்டிற்கும் உரிய அரங்கங்கள். ஒவ்வொரு நாடும் தனக்குரிய பண்பாட்டுக் கலைகளை இங்கே அனுசரிக்கின்றது.

தொழில் பிரதேசத்தில், ஆரோவில் தன்னிறைவு அடையத் தேவையான பணத்தைச் சம்பாதிக்கும் கேந்திரமாகவுமிருக்கிறது. இங்கே சூரிய சக்தியையும், காற்றாலைகளையும் கொண்டு மனித உழைப்போடு தேவையான பொருட்களைத் தயாரிக்கிறார்கள். போட்டியோ, லாப இலக்குகளோ கிடையாது.

குடியிருப்புப் பிரதேசத்தில் வசிக்கும் இவர்களுக்குச் சொத்துரிமை கிடையாது. தனக்கென எந்தப் பொருளையும் வைத்துக் கொள்ளாததனால் கிடைக்கக் கூடிய மகிழ்ச்சியும் விடுதலை உணர்வும் ஆரோவில் வாசத்தில் கிடைக்கிறது. சுற்றுச் சூழலுக்கு முதலிடம் கொடுக்கும் இந்நகர், சுற்றுவட்டார கிராமங்களின் தொடர்பில்லாமல் வளர முடியாது என்பதை உணர்ந்து, முப்பத்தைந்து கிராமங்களில் வளர்ச்சிக்குழு அமைத்துச் செயல்படுகிறது.

கிராமத்துப் பிள்ளைகளுக்கு மாலை நேரத்தில் தமிழ் சொல்லித் தரும் பிரெஞ்சு, வெள்ளை, ஜெர்மன் பெண்களை அங்கே பார்க்க முடிகிறது. கிராமம்தோறும் பொதுக் கழிவறைகள், பயிர் சாகுபடிக்கு இயற்கை நாற்றுகள் உதவி, இயற்கை சக்தியைப் பயன்படுத்த பயிற்சி என்று நிறைய பணிகள் நடைபெறுகின்றன.

அரவிந்தரும் அன்னையும் தேடிய அக முன்னேற்றம் அதை அடைந்ததோடு முடிந்து போகவில்லை; சமுதாயத்தின் முன்னேற்றமாக, சகல உயிர்களின் முன்னேற்றமாக அது மலர்ந்து விரிந்து மணம் பரப்பிக் கொண்டிருக்கிறது.



நாகை மாவட்டம், சீர்காழி தாலுக்கா, மேலமாத்தூர்

## ஸ்ரீ அங்காள பரமேஸ்வரி அம்மன் திருக்கோயில்

### திருப்பணி மகாகும்பாபிஷேகம்

நாகை மாவட்டம் சீர்காழியிலிருந்து சுமார் 20கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது மேலமாத்தூர் கிராமம். இங்கு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ அங்காள பரமேஸ்வரி ஆலயம் மிகவும் பழமை வாய்ந்ததும் பிரசித்தி பெற்றதும் ஆகும். பலருக்கு குலதெய்வமாகவும் கிராமத்து மக்களுக்கு ஊர் தெய்வமாகவும் இருந்து அருள் பாலிக்கும் ஸ்ரீ அங்காள பரமேஸ்வரி அம்மன் திருக்கோயிலை முழுவதுமாக புதுப்பிக்க திருப்பணி நிர்வாகக் குழு அமைக்கப்பட்டுள்ளது. திருப்பணிக்கு சுமார் பத்து லட்சம் ரூபாய் நிதி தேவைப்படும் என கணக்கிடப்பட்டுள்ளது. குலதெய்வ பக்தர்களும் கிராமத்தாரும், சுமார் ஐந்து லட்சம் வரை நிதி திரட்டி பூர்வாங்க திருப்பணி ஆரம்பிக்கப் பட்டுள்ளது. திருப்பணி முடிந்து மகா கும்பாபிஷேகம் நன்கு நடைபெறவும் பொது மக்களும் ஆன்மிக அன்பர்களும் தங்களால் இயன்ற நிதி உதவி அளித்து ஸ்ரீ அங்காள பரமேஸ்வரி அம்மனின் அருளை பெற வேண்டுகிறோம்.

மேற்படி கோயிலின் திருப்பணிக்கு நன்கொடை அளிப்பவர்கள் காசோலையாகவோ அல்லது டிராப்டாகவோ **"Sri Angala Parameswari Amman Thiru Koil Thiruppani Committee"** Payable at Tiruchy என்ற பெயரில் கீழ்கண்ட விலாசத்திற்கு அனுப்பும்படி மிகத் தாழ்டையுடன் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

**R. நாகராஜன்** (பொருளாளர்)
47, நாச்சியார்பாளையம், உறையூர், திருச்சி - 620 003.
போன்: 762115, 766656, 766357

ஊர் பரபரத்துக் கொண்டிருந்தது. காக்கிச் சட்டைகளையே கண்டிராத அந்தக் கிராமத்துத் தெருக்களில் போலீஸ்காரர்கள் லத்தியுடன் அலைந்து கொண்டிருந்தனர்.

ஆடுகளும், மாடுகளும் அவற்றின் சாணமும் ஆக்ரமித்த அந்தத் தெருக்கள் வெறிச்

"பாத்தியா போலீஸ்காரங்கிட்டேயே என்ன தெனாவட்டா பேசுதான்" என்று அந்தப் பெண்கள் நினைக்க வேண்டுமென்பதால் இந்த 'அளப்பு'.

கீழத் தெருக்காரர்களில் சிலர் கடனாநதி ஆற்று மண்டபத்தில் ஒளிந்திருந்தனர். இரண்டு நாட்களாய் இங்கேயே ஒளிந்திருந்து போரடித்துவிட, ரெடிமேட் தாயக்

# மேலத்தெரு மரகதம்

நான்கு வார மினி தொடர்

சோடிக் கிடந்தன. பிரச்னையை முன்னிட்டு அவை தொழுவத்தில் முடங்கிக் கிடந்தன. நாய்கள், பன்றிகள் கோழிகள் மட்டும் அங்கொன்றும் இங்கொன்றுமாக எதையோ தேடி அலைந்து கொண்டிருந்தன.

மேலத் தெருக்கார ஆண்களில் பலர் ஊரைவிட்டுப் பக்கத்து ஊர்களான ஆழ்வார்க்குறிச்சி, கருத்தப்பிள்ளையூர், காக்கநல்லூர் என்று ஓடி, தெரிந்தவர்கள் வீட்டில் ஒளிந்து கொண்டிருந்தனர்.

ஊரை இரண்டாகப் பிரிக்கும் தெருவில் இருந்த டீக்கடையில் மட்டும் பெரிய மனிதர்கள் என்று சொல்லிக் கொள்ளும் சிலர் மடித்துக் கட்டிய வேட்டியை அவிழ்த்துவிட்டுக் கொண்டு, போலீஸ்காரர்களுடன் பேசிக் கொண்டிருந்தனர். அவர்களைப் பொறுத்தவரை போலீஸாரிடம் பேசுவதே பெரிய 'மதப்பாக' இருந்தது.

"இதப் பாருங்க சாரு, இந்த ஒண்ணு மத்தப் பய ஊருல..." என்று ஆரம்பித்து கம்பீரமாக மீசையைத் தடவியபடியே, பக்கத்துவீட்டு வாசல்களில், ஜன்னல்களில் தெரியும் பெண்களின் முகங்களை நோட்டம் விட்டவாறு, அவர்கள் பண்ணிக் கொண்டிருந்த 'அலப்பறை' அலாதியானது.



ஏக்நாத்

கட்டைகளோடு தாயம் விளையாடிக் கொண்டிருந்தனர் கும்பல் கும்பலாக.

அவர்களின் தாயக் கட்டையென்பது புளியங்கொட்டை. அதன் ஒரு பகுதியைக் கருந்தோல் நீக்கி, வெள்ளை நிறம் வரும்வரை தரையில் தேய்த்துக் கட்டைக்குப் பதில் பயன்படுத்தி வந்தனர்.

சிலரின் வீடுகளிலிருந்து பெரிய பெரிய தூக்குச் சட்டிகளில் போலீஸுக்கு டிமிக்கிக் கொடுத்துவிட்டு, உச்சி வெயிலில் சோறும் குழம்பும் வந்து சேரும். பக்கத்துத் தோப்பில் நின்றிருந்த தேக்குமரத்தின் இலைகளைப் பறித்து, சோறை எல்லோருமாகப் பிரித்துச் சாப்பிட்டு வந்தனர்.

இந்தத் 'தலைமறைவு'ப் பிரச்னையில்





''ஏம்பா! ஜோக் சொன்னா சிரிக்கிறது இயல்புதானே! இதுக்குப் போய் உங்கப்பாவை ட்ரீட்மெண்ட்டுக்கு அழைச்சிட்டு வந்திருக்கியே!''

''புரியாம பேசாதீங்க டாக்டர்! போன மாசம் சொன்ன ஜோக்! இன்னமும் நிறுத்தாம சிரிச்சுக்கிட்டே இருக்கார்!''

— வெ. ஆனந்தி வேங்கடேசன்

மூக்குப்பொடி, பீடி குடிப்பவர்களின் பாடு தான் திண்டாட்டமாக இருந்தது. ஊரில் இருந்த நான்கு கடைகளில் (இரண்டு பல சரக்குக் கடை, ஒரு டீக்கடை, ஒரு பெட்டிக் கடை) மூன்று கடைகள் மூடப்பட்டுவிட்ட நிலையில் டீக்கடையை மாத்திரம், அவர் வேறு ஜாதிக்காரர் என்பதால் திறந்து வைத்திருந்தார்.

இந்தக் கடையில் பீடி இருந்தால் யாராவது பொடியனை அனுப்பி, திருட்டுத்தனமாக வாங்கி வரச் சொல்லலாம். 'பொச முட்டி'க் கொண்டு வந்தது அவர்களுக்கு. ஏற்கெனவே குடித்துப் போட்ட கட்டைப் பீடிகளைத் தேடிப் பிடித்துச் சுண்டச் சுண்ட, உதட்டில் நெருப்புச் சுடும் வரை இழுத்து ஆசுவாசப்படுத்திக் கொண்டிருந்தனர்.

அவர்களில் குறிச்சியா மகன் இசக்கிதான் ஆரம்பித்தான்.

''இப்படி வீண்பழி வந்து விழுந்து போச்சே மாடக்கண்ணு, நம்ம நேரத்தைப் பாத்தியா?''

"யார்ல இவன்? ஊரே ரெண்டுபட்டுக் கெடக்கு; பழிவந்து விழுந்துட்டுங்கதுதான் இப்ப பெரிசா போச்சு."

"நான் அதச் சொல்லல... சுப்பையா பயச் செத்துப் போனதச் சொன்னேன்."

இதைக் கேட்டதும் எல்லோரும் மௌனமானார்கள்.

**ஊ**ரில் எல்லோரும் ஒரே சாதிசனம் தான் மூன்று வீடுகளைத் தவிர. இரண்டாகப் பிரிக்கும் தெருவுக்கு மேல்புறம் வசிப்பவர்கள் இந்தச் சாதியிலேயே வேறொரு பிரிவினர். எப்போதாவது ஆட்டுக் கிடைப் போடுவதில், தண்ணீர்ப் பாய்ச்சுவதில், வயலில் ஆடுமாடு விழுவதில் என்று சின்னச் சின்னப் பிரச்னைகளில், "இந்தக் கிளைக்காரன் தானல நீ; உன் புத்தி எங்க போவும்?" என்று கிளை குறித்த பேச்சு வந்துவிட்டுப் போகும். ஆனால் இப்போது வேறு விதமாகிவிட்டது.

கலவரத்துக்கு முன்புவரை சுப்பையா எல்லோருக்கும் வேண்டியவர்தான். அதைத் தொடர்ந்து வந்த சண்டையில் கீழத் தெருக்காரர்களை வெட்ட வேண்டுமென்று நினைத்து, அரிவாளோடு மண்சுவரை ஏறிக் குதித்தார். அது தொழுவம். தண்ணீர் குடிக்க மாடுகளை அவிழ்த்துவிடாததால் சிலுப்பிக் கொண்டு நின்ற வொட்டாங்காளை ஒன்று பக்கத்தில் நின்ற அவரை, தமது ஊசிக் கொம்பால் குத்தித் தள்ள, குடல் சரிந்து விழுந்தார் சுப்பையா.

சப்தம் கேட்டு வந்த வேலு, அவரைத் தூக்கிப் பக்கத்தூர் ஆஸ்பத்திரிக்குக் கொண்டு செல்ல முயல்கையில், "ஏலேய்... நம்ம சுப்பையாவ, வேலு வெட்டிட்டாம்ல" என்று செய்தி பரவி, திடும் திடுமென ஆட்கள் ஓடிவர, வேலு வைக்கோல் படப்புக்குள் விழுந்து புரண்டு ஆழ்வார்க்குறிச்சிக்கு ஓடிவிட்டான்.

இது கொலைப் பழியாகிவிட்டதில் கலவரம் மேலும் தீவிரமடைந்தது. கீழத் தெருவில் நான்கு வீடுகளும், மேலத் தெருவில் ஐந்தாறு வைக்கோற் படப்புகளும் தீ வைத்துக் கொளுத்தப்பட்டன.

கண்ணில் பட்டவர்களையெல்லாம் வெட்ட, இரு தெருக்காரர்களும் அரிவாள், கத்தி போன்ற ஆயுதங்களோடு முண்ட, போர்க்களம் போலானது ஊர்.

இதற்கிடையே அதன் இஷ்டப்படி ஊருக்கு வந்து போகும் டவுன் பஸ்ஸின் முன்பக்க கண்ணாடிகளை ஒரு கும்பல் அடித்து நொறுக்கிய பிறகுதான் அம்பாசமுத்திரம் போலீஸுக்கு விஷயம் தெரிந்து பட்டாளத்தோடு இறங்கிவிட்டனர்.

ஏழு பேர் கைது.

மேலும் கலவரம் பரவாமல் தடுக்க, போலீஸார் ஊர் முழுவதும் லத்தியுடன் அலைந்து கொண்டிருந்தனர்.

**வ**யல்களுக்கு நடுவில் இருந்த வடக்குவா செல்வி அம்மன் கோவிலுக்கு எதிரில் அந்த வாய்க்கால் ஓடிக் கொண்டிருந்தது. கரும்பச்சை நிறத்தில் தண்ணீர் சுழன்று சுழன்று வேகமெடுத்துக் கொண்டிருந்தது. இரண்டு மூன்று தண்ணீர்ப் பாம்புகள் மேற்

கும் கிழக்குமாய்த் தண்ணீருக்குள் அலைந்து கொண்டிருந்தன.

கோயிலைச் சுற்றிப் பெரிதாக வளர்ந்து குலை தள்ளி நின்ற வாழைகள் இந்தப் பகுதியை முழுவதுமாக ஊரிலிருந்து மறைத்திருந்தன.

வாய்க்காலின் கரையில் துணிகள் துவைக்கவென்று போடப்பட்டிருந்த பெரிய பாறாங்கல்லில் பாதி கால்களைத் தண்ணீரில் நனைத்தபடி, அமர்ந்திருந்தான் குட்டி என்கிற ராமகிருஷ்ணன்.

பெரும்பாலும் இந்த நேரங்களில், பகலில் வீட்டுக்குள் அடைபட்டுக் கிடக்கும் தாவணிப் பெண்கள் கும்பலாகத் தண்ணீர் எடுக்க வருவது வழக்கம். இன்று மரகதம் மட்டும் வந்திருந்தாள். அவளை எதிர்பார்த்து தான் ஆற்று மண்டபத்தில் ஒளிந்திருந்த அவன் யாருக்கும் தெரியாமல் வந்திருந்தான்.

அவள், குடத்தை அருகில் வைத்துவிட்டு, அவனுக்கருகில் புல்தரையில் அமர்ந்தவாறு சிறு குச்சியால் கோடு கிழித்துக் கொண்டிருந்தாள்.

அவன், அவளின் மஞ்சள் தேய்த்த முகத்தைப் பார்ப்பதும் பிறகு திரும்பி வேறு பக்கம் பார்ப்பதுமாய் இருந்தான். நேரம் ஓடிக் கொண்டிருக்க, "இப்படி ஊர்ச் சண்டைக்கு நான் காரணமாயிட்டேன்னு நெனச்சா வருத்தமா இருக்கு'' என்று ஆரம்பித்தான் குட்டி.

'நீங்க மட்டுமா? நானுந்தான் காரணம்" என்றாள் மரகதம்.

காதல் கடித விவகாரம் இந்தளவுக்குப் பிரச்னையைக் கொண்டு வருமென்று அவன் நினைக்கவில்லை.

தாமும் முட்டாள்தனமாக நடந்து கொண்டோமோ என்று தோன்றிற்று அவனுக்கு.

"தெனமும் உனக்கு லெட்டர் போட்டிருக்கக் கூடாது. உங்க பக்கத்து வீட்டுக்காரி இப்படி செய்வான்னு யார் கண்டா?"

"அவ என்ன செய்வா? 'தெனமும் லெட்டரு வருது. மரகதத்துக்கிட்ட கேட்டா, கூட படிச்ச புள்ளங்கா. இத கொஞ்சம் படிச்சுக் காட்டு தாயீ'ன்னு அவகிட்ட கொடுத்திட்டாரு எங்கப்பா. அவ படிச்சுட்டுச் சொல்லிட்டா. சரி, அதுல பேர் இல்லனு எங்கிட்ட வந்து திரும்பவும் கேட்டாரு. தெரியாதுன்னு சொல்லிட்டேன். நம்மூர்ல இருக்க ஒரே தபால்பெட்டில போயா தெனமும் நீங்க லட்டரைப் போடணும்? பக்கத்தூர்ல போயாவது போட்டிருக்கலாம். எங்கப்பன் பாத்துட்டாரு. வெவகாரம்

# கல்கி




**VBC Jewellery**

*House of Vummidi*

• 78, G.N.Chetty Road, Vani Mahal Circle, (Opp. Hotel Residency), T.Nagar, Chennai - 600 017.
✆ : 8229556, 8229560

• 11-B, Nageswara Rao Road, Panagal Park, T.Nagar, Chennai - 600 017. ✆ : 4342407, 4346297

இணைந்து வழங்கும்

## புன்னகைப் போட்டி; பொன்நகைப் பரிசு!

### பாப் பல்லவி!

உலகக் கோடீஸ்வரர்களுள் ஒருவராக இருந்த பாப் பாடகர் மைக்கேல் ஜாக்ஸன் போண்டியாகிவிட்டதாகத் தகவல். பலகோடி ரூபாய் மதிப்புள்ள தமது கடிகாரத்தை விற்று ஜீவனம் நடத்துவதாக கிசு..கிசு..! அந்த வாட்சைப் பிரியும் முன், ஜாக்ஸன் என்ன சொல்லிப் பாடியிருப்பார்? தமாஷாக யோசித்து நான்கு வரி எழுதுங்கள். சுவையான இரண்டு பல்லவிகள் தேர்ந்தெடுக்கப்பட்டு தலா நான்கு கிராம் தங்கம் பரிசு.

**புன்னகைப் போட்டி - 12**

என்று குறிப்பிட்டு உங்கள் தமாஷ் பாப் பல்லவி எழுதி, முகவரியைக் குறிப்பிடுங்கள். தபால் உறை அல்லது தபால் கார்டில், கீழே உள்ள கூப்பனை வெட்டி ஒட்டி அனுப்புங்கள்.

கடைசி தேதி : **13.5.2002**

**ஆசிரியர், கல்கி,**
**47, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல்,**
**சென்னை - 600 097.**

வெடிச்சிட்டு."

"இங்க இப்ப இருக்க மாதிரி தெனமும் ஒன்ன சந்திச்சுப் பேச வசதியா இருந்தா இந்த வெவகாரமே வந்திருக்காது. நீ என்னை டான்னா எப்ப பாத்தாலும் பக்கத்து வீட்டு வாலுங்க கூடவே வார! நான் உன்னப் பாக்க நின்னா, அதுங்க பண்ணுத 'சிமிட்டு'த் தாங்க முடியல. அதான் லட்டர் போட்டேன்"

"இன்னும் எத்தனை நாளைக்கு இப்படி?"

அவள் கேட்டதும் உடனடியாக அவனால் பதில் சொல்ல முடியவில்லை. மண்டைக்குள் மின்னல் வெட்டியது. ஊரில் இரத்த ஆறு ஓடுவது போலவும் அரைகுறை உயிருடன் அவனும் அவளும் தத்தளிப்பது போலவும் தோன்றியது அவனுக்கு. அவள் கண்களையே பார்த்தபடி மெதுவாக அவளின் கைகளைப் பற்றினான்.

"அத நெனச்சாதான் பயமாயிருக்கு; உங்க தெருக்காரங்க என்னையப் பாத்தாங்கன்னா உயிரோட விடமாட்டாங்க. ரெண்டு பேரும் ஊரவிட்டு இப்படியே ஓடிப் போலாம்னா கைல காலணா இல்ல; போனாலும் எங்க போயி தங்க?"

தண்ணீர் வைக்கோல், புல் எதுவுமின்றி பவுண்டியில் சிறைப்பட்டுக் கிடக்கும் மாடுகளின் தவிப்புணர்ச்சியை அவள் முகம் காட்டியது. வானத்து நிலவு வாய்க்கால் தண்ணீரில் தெரிந்தது. சுற்றும் முற்றும் பார்த்துவிட்டு, ஆறுதல் சொல்லுவது போல அவளின் முகத்தை இரண்டு கைகளாலும் தூக்கினான். தாமரை இலையில் தவழும் தண்ணீர் போல அவன் கரங்களில் அவள் முகம். அவள் கண்களைப் பார்த்தான்.

"இந்த வடக்குவா செல்வி அம்மன் சத்யமா சொல்லுதேன். நாம ரெண்டு பேரும் தான் சேர்ந்து வாழணும். வாழ்வோம்" என்று கூறிவிட்டுக் கண்களைப் பொத்திக் கொண்டான். பொத்திய கைகளிலிருந்து வெளியே வந்து விழுந்தது கண்ணீர்த் துளி.

"உனக்கு இவ்வளவு தெடம் இருந்தா போதும் மரகதம். என்னால எதையும் செய்ய முடியும்" என்று சொல்லிவிட்டு கைகளை முகத்திலிருந்து பிரித்தான் அவன்.

"இப்ப ஏன் அழுத? பயப்படுத மாதிரி எதுவும் நடக்காது. எல்லாத்தையும் அம்மா பாத்துக்கிடுவா" என்று சொல்லிவிட்டு அவளின் கண்ணீரைத் துடைத்தபோது, அவள் தோள்களை இரண்டு கரங்கள் படாரென்று பலங்கொண்டு அழுத்தின.

(தொடரும்)



# திருக்கயிலாயம் - மானசரோவர் புனித யாத்திரை!



**ஆன்மீக அன்பர்களுக்கு ஓர் அரிய வாய்ப்பு!**

காஷ்மீர் முதல் கன்னியாகுமரி வரை பரந்த பாரததேசத்தில் இறைவன் திருக்கோயில் கொண்டு அருள்பாலிக்கின்றார்.

மூர்த்தி, தலம், தீர்த்தம் முறையாய் தொடங்கினோர்க்கு ஓர் வார்த்தை சொல சற்குருவும் வாய்க்கும் பராபரமே என்பார் தாயுமானவர். எனவே பக்தர்கள் தென்னகத்திலிருந்து வடக்கும் வடக்கிலிருந்து தென்னகமும் யாத்திரை செய்வது மிக முக்கியம்.

இந்திய திருநாட்டைத்தவிர நமது நாயன்மார்களால் போற்றப் பெற்றதும், பாடல் பெற்றதும், பாரத சமயத்தாராலும் வணங்கப் பெற்றதுமான திருக்கயிலாயம் - மானசரோவர் யாத்திரையை நேபாளம் வழியாக விமானம், டயோட்டா கார் மூலம் சென்று தரிசித்து அழைத்து வர ஏற்பாடு செய்துள்ளோம்.

இவ்வருடம் பன்னிரெண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை வரும் மகாகும்பமேளா போன்று திபெத்தியர்களின் குதிரை ஆண்டு 2002 திருக்கயிலாயத்தில் கொண்டாடப்பட உள்ளது. இவ்வருடம் யாத்திரையில் பங்குகொண்டு கயிலாயம் சென்று வருவோர் 108 முறை பரிக்கிரமம் வந்ததற்குரிய பலனாகும். உட்பரிகிரமா, நந்தி பரிகிரமா உண்டு. தனி கட்டணம் செலுத்த வேண்டும். இதற்கு பாஸ்போர்ட் அவசியம் தேவை. கடல் மட்டத்திலிருந்து 22,000 அடிக்கு மேலாக இருப்பதால் உடல்நலத்திற்கு மருத்துவ சான்றிதழ் மிக அவசியம்.

கயிலாய - மானசரோவர் யாத்திரையைத் தொடர்ந்து வடநாட்டு யாத்திரையை மாதந்தோறும் துவங்குகிறோம். நன்கு அனுபவம் மிக்கவர்களைக் கொண்டு ஆன்மீக சேவை மட்டுமே முக்கியமாக கருதி இந்த யாத்திரையை நடத்தி வருகிறோம். ஜூன் 2002 முதல் வாரத்தில் முதல் குருப்பும், ஜூலை முதல் வாரத்தில் இரண்டாவது குருப்பும் கயிலாய யாத்திரை புறப்படுகிறது.

**(சென்னை - காசி - காட்மாண்ட் வழியாக) திருக்கயிலாயம் - மானசரோவர் யாத்திரை**
**27 நாட்களாகும் யாத்திரை கட்டணம்: ரூ.69,000/-**

மேலும் விவரங்களுக்கு:

## ஸ்ரீ இராமகிருஷ்ணா யாத்ரா சர்வீஸ்

H.O : 13, பொன்னம்பல வாத்தியார் தெரு, மயிலாப்பூர், சென்னை - 4. ☎ : 044- 4616466
B.O: No. 20, வைஷ்ணவி நகர், சந்திரன் கார்டன், சின்ன திருப்பதி, சேலம் - 636 008.
☎ : 0427 - 410100, 411810 Cell No: 98427 - 44868
B.O. பிளாட் எண்.48, மீனாட்சி மில் பழைய காலனி, A.R. தோப்பு, மதுரை - 625 003 ☎ :0452- 604415

# பட்டுப் போன்ற மென்மையான ஒரு அனுபவம்



- 100% சேலம் ஸ்டீல்
- சிறந்த சோக்-ஸ்டாப்
- 22 மாடல்கள் 59 விதமான அளவுகளில்
- ஸாடின் ஃபினிஷில் கிடைக்கிறது

*Introducing Elegance Unique*

• பாத்திரங்கள் துரிதமாக உலர்வதை உறுதி செய்யும் விதத்தில் டிரெய்ன் போர்டில் தண்ணீர் தேங்காதபடி வெளியேறும் அமைப்பு

இந்தியாவின் நம்பர்.1 சிங்க்

**NIRALi**

Mfgrs: JYOTI (I) METAL INDUSTRIES P. LTD., P.O. Box No: 9136, Mumbai -400025. Fax: 022-4362543 Website: www.niralisinks.com

Distributors: M/s. Sagar Metals Corp., Chennai. Tel: 044-5353871/4165 • M/s. Truthful Co., Madurai. Tel: 0452-604440/624496 • M/s. Shri Raja Traders, Pondicherry. Tel: 0413-252681/254799

Sunny

சித்திரை மாதம் பிறந்து விட்டாலே, மதுரை மற்றும் சுற்றியுள்ள மக்களுக்குக் கொண்டாட்டம் தொடங்கிவிடுகிறது. மீனாட்சி சுந்தரேஸ்வரர் திருக்கல்யாணமும், கள்ளழகர் வைகை ஆற்றில் இறங்கும் வைபவமும் சேர்ந்த 'சித்திரைத் திருவிழா' வெகு கோலாகலமாக நடைபெறுவது இக்காலத்தில் தானே! மக்கள் பயபக்தியோடு விரதமிருந்து, அழகர் போல வேடமணிந்து, பதைக்கும் வெயிலில் அழகரைத் தரிசிக்க வரும் பக்தர்களின் பாதங்களில் தண்ணீரைப் பீய்ச்சியடித்துக் கொட்டி, வெயிலின் கடுமையைக் குறைத்து தங்கள் வேண்டுதலை நிறைவேற்றுகின்றனர். சைவ_வைணவப் பெருமை இந்தத் திருவிழா!

– தடாதகை.

**ஊரறிந்த பெயர் – அசல் பெயர்**

சகோதரி நிவேதிதா _ மார்கரெட் எலிசபெத் நோபில்'
பாரதிராஜா – சின்னசாமி
அன்னை (பாண்டிச்சேரி) _ மீர்ரா ரிச்சர்ட் (மாடம்)
ஹோசிமின்ஹ் – குயென் தத் தன்ஹ்
இளையராஜா – ராசய்யா
முகமது அலி (குத்துச் சண்டை) _ காஸியஸ் க்ளே
லெனின் _ விளாடிமிர் இலிச் உலியனோவ்
தலாய்லாமா – டென்சிங் க்யாட்சோ
நக்மா – நம்ரதா சாதனா
கண்ணதாசன் – முத்தையா
மணியம் செல்வன் – லோகநாதன்
மர்லின் மன்றோ – நார்மா ஜீன் மார்டென்சன்
ஜான்சிராணி – மணிகர்னிகா
சின்னி ஜெயந்த் – நாராயணா

– டாக்டர் எஸ். ஆர். கௌசிக்












சீட்டு விளையாட்டு இந்தியாவில்தான் கண்டுபிடிக்கப்பட்டது. இதில் 1392ம் ஆண்டு சில மாற்றங்கள் செய்யப்பட்டதுதான் இப்போதைய சீட்டு கட்டு.

வருடத்தின் 52 வாரங்களைக் குறிக்க 52 சீட்டுகள். நான்கு பருவங்களைக் குறிக்க நான்கு ஜாதி. இரவு, பகலைக் குறிக்க கறுப்பு, சிவப்பு நிறம். ஒரு பருவத்தில் உள்ள 13 வாரங்களைக் குறிக்க 13 வித சீட்டுகள் என வகுத்தவர் 'கஸ்கோலூர்' என்பவர்.

– ப. இராம் முருகன்

ஏறத்தாழ 80 ஆண்டுகளாக மூடிக்கிடந்து புல், பூண்டு சூழ்ந்து பாழடைந்திருந்த கூந்தலூர் அருள்மிகு ஸ்ரீ விசாலாக்ஷி அம்பிகா சமேத விஸ்வநாத சுவாமிக்கு மகா கும்பாபிஷேகம் மிக விமரிசையாகச் சமீபத்தில் நடைபெற்றது.

இக்கோயிலின் சுவாமி, காசி விஸ்வநாதர் / அம்பாள் விசாலாக்ஷி என்பதால் காசி க்ஷேத்திரத்திற்கு ஈடானது.

இங்குள்ள பிள்ளையார் மண்டபத்தில், அஷ்ட விநாயகர்கள் உள்ளனர். இவ்வாறு அஷ்ட விநாயகர் மண்டபம் வேறு எங்கும் கிடையாது. மேலும் மண்டப மூர்த்திகளுடன் உள்ளே இருக்கும் விநாயகரைச் சேர்த்து நவ விநாயகர்கள் உள்ளதால் மிகுந்த மகிமை வாய்ந்தவர்.

– கூந்தலூர் ஜெயராமன்

பிரபல பிரெஞ்சு எழுத்தாளரான மாப்பஸான் ஒரு பெண்ணைக் காதலித்தார். அதே பெண்ணை பாரிஸ் நகர டாக்டர் ஒருவரும் காதலித்தார். இருவரும் ஒரு நாள் நாடகக் கொட்டகையில் சந்திக்க நேர்ந்தது. "இந்தப் பெண் உங்கள் உரையைக் கேட்டு நோயுறும்போது நான் குணப்படுத்துவேன்'' என்றார் டாக்டர், எழுத்தாளரை மட்டம் தட்டும் எண்ணத்தில்.

"அவன் உங்கள் மருந்தைச் சாப்பிட்டுச் சாகும்போது என் எழுத்தினால் அவளைச் சிரஞ்சீவியாக்குவேன்" என்றார் மாப்பஸான்!

– *'அறிஞர்களின் வாழ்வில் சுவையான நிகழ்ச்சிகள்'*

நூலிலிருந்து: இரா. பார்த்திபன்

சீனாவிலிருக்கும் 'மக்கள் ஆயுள் காப்பீட்டுக் கழகம்' விவாகரத்து எதிர்ப்பு பாலிசியை அறிமுகப்படுத்தியிருக்கிறது. நீண்டகால திருமண வாழ்க்கையில் ஈடுபட்ட தம்பதிகளுக்கு நிறைய பணம் கிடைக்கும்.

விவாகரத்து செய்துகொண்ட தம்பதிகள் கட்டிய பணத்தை இழந்து விடுவார்கள்!

– *'ப்ருடென்ஷியல் ப்ளானரி'*லிருந்து

– என். பங்கஜம்

அந்தக் காத்திருப்பு அபத்தமானதாகப்பட்டது- சரவணனுக்குப் பொறுமை நழுவிப் போயிற்று. விளங் காத காரணத்துக்காகக் கவலைத் தோய்ந்த முகத் துடன் சற்று எட்டி காமாட்சி உட்கார்ந் திருந்தது சரியான பைத்தியக்காரத்தன மாகத் தோன்றிற்று. 'மறுபடியும் போன் பண்ணுவாங்கபோல' என்று அவன் சொன்ன கையுடன் உள்ளே செல்லாமல், தனக்குத்தான் ஏதோ செய்தி வரும் என்கிற எதிர்பார்ப்பில் உள்ளவன் போல அங்கேயே உட்கார்ந் திருந்தது ஆத்திரத்தைக் கிளப்பிற்று.

4

''நீ எதுக்காக இப்படி முகத்தை வெச்சுக்கிட்டு உட்கார்ந்திருக்கே? போன் வந்தா நா கவனிச்சிட்டுப் போறேன். நீ

# பொய்யில் பூத்த நிஜம்

உள்ளே போ.''

''உள்ளே என்ன வெச்சிருக்கு?'' என்றான் அவன் அர்த்தமில்லாத ஆவேசத்துடன். ''இங்கே நா உக்காந்தா உங்களை என்ன செய்யுது?''

''சரி உக்காரு. சரியான மூடம். போன் யார் செஞ்சது, எங்கேருந்து வந்தது ஒண்ணும் சொல்லத் தெரியல்லே. தில்லியிலேருந்து போனுன்னு என்ன நிச்சயம்?''

''தில்லிங்கற வார்த்தை சொன்னாங்க, வேகமா இங்கிலீஷ் பேசறான், சரியா விளங் கல்லே.''

அவர் கூர்மையாக அவளைப் பார்த்தார்.



"தில்லிங்கற வார்த்தைப் புரிஞ்சது. அப்புறம் வேற என்ன வார்த்தை புரிஞ்சது?"

காமாட்சி தலையைக் குனிந்து கொண்டாள்.

"என்ன?" சரவணனின் குரலில் வேகம் கூடிற்று.

காமாட்சி நிமிர்ந்தபோது கண்களில் நீர் பளபளத்தது.

"ராஜமோகனுடைய ஃப்ரெண்டுன்னு அந்த ஆள் சொன்னதாப்பட்டது."

சரவணன் ஆத்திரத்துடன் கத்தினார்.

"நீயா நினைச்சுக்க! உறவே இல்லாதபோது ஃப்ரெண்டு எதுக்குப் பண்ணணும்?"

காமாட்சி பதில் சொல்லவில்லை. இறுக்கமாக உட்கார்ந்திருந்தாள். இவன் சொல்வது சரிதானா என்று அவருக்கு யோசனையாக இருந்தது. போன் வந்தால் எடுக்கத் தேவையில்லை என்று கோபம் வந்தது. அந்த மாதிரி முடிவுக்கு அவர் வரலாம் என்ற நினைப்பில் தான் காமாட்சி இங்கேயே உட்கார்ந்திருக்கிறாள் என்று புரிந்தது. சினேகிதன் எதற்காகச் செய்ய வேண்டும்? சமாதான தூதாக இருக்குமா? பணத் தேவையாக இருக்குமோ? எதுவாக இருந்தாலும் அவரிடம் பதில் தயாராக இருந்தது.

"எனக்கு ராஜமோகன் என்கிற மகன் இல்லை." போன் ஒலித்தது. எஸ்.டி.டி. போன், நீண்டு ஒலித்தது. சரவணன் அதைச் சற்று நேரம் ஒலிக்கவிட்டு நிதானமாக எடுத்தார். காமாட்சியின் உருவம் விறைத்து நிமிர்ந்ததை கவனித்துவிட்டு, "சரவணன்" என்றார் எச்சரிக்கையுடன்.

மறுமுனையில் சற்றுப் படபடப்பாக ஆங்கிலத்தில் யாரோ பேசினார்கள்.

"என் பெயர் விவேக் குப்தா, ராஜமோகனுடைய ஃப்ரெண்ட்."

"ராஜமோகன் என்பது யார்?"

"ப்ளீஸ் அங்கிள், கேளுங்கள்." என்று விவேக் தொடர்ந்தான் அவசரத்துடன். "ராஜா மிகவும் சீரியஸ் நிலையிலே ஆஸ்பத்திரியிலே படுத்திருக்கிறான். டாக்டர் உங்களுக்குத் தெரிவிக்கச் சொன்னார்."

திடீரென்று சரவணனின் கால்கள் வலுவிழந்து போனதுபோல துவண்டன. அவர் நாற்காலியில் அமர்ந்து மெல்ல, சற்றுமுன் கேட்ட கேள்வியை மறந்து "எனி ப்ராப்ளம்?" என்றார்.

"கார் டிரைவ் பண்ணும்போது மாரடைப்பு ஏற்பட்டு ஆக்ஸிடென்ட் ஆகிவிட்டது."

சரவணனுக்குக் குரல் எழும்ப சற்று நேரம் பிடித்தது.

"உங்கள் நம்பர் கொடுங்கள். நான் மறுபடி உங்களுக்குச் செய்கிறேன்."

விவேக் சொன்ன நம்பரைக் குறித்துக் கொள்ளும்போது கை நடுங்குவதை அவர் கவனித்தார். போனைத் துண்டித்துவிட்டு, சற்று நேரம் யோசனை செய்யும் திறனே மழுங்கிப் போனதுபோல மௌனத்தில் ஆழ்ந்த போது, காமாட்சி "என்னங்க, என்ன விஷயம்?" என்றாள்.

அவர் பிரமை விலகி நிதானமாகச் சொன்னார்.

"ராஜாவுக்கு ஆக்ஸிடென்ட் ஆயிட்டதாம்."

"ஐய்யய்யோ! எப்ப? எப்படியிருக்கானாம்?" அவளுக்கு நினைத்த மாத்திரத்தில் இவ்வளவு கண்ணீர் எப்படி வருகிறது என்று சரவணன் வியந்தார். அவளுடைய கண்ணீர் அவரைப் பலவீனப்படுத்திற்று. இயலாமையால் கோபம் வந்தது.

"அடச்சே! எதுக்கு இப்படி அலர்றே, ஒப்பாரி கணக்கா?"

அவளுடைய கண்ணீர் அதிகமாயிற்று. "ஒப்பாரியா? என்ன வார்த்தை வருது உங்களுக்கு? அந்தப் பிள்ளை என்ன சொன்னான்?"

சரவணன் தன்னை நிதானப்படுத்திக் கொண்டார். "ராஜா சீரியஸ்ஸா ஆஸ்பத்திரியிலே படுத்திருக்கானாம். டாக்டர் உங்களுக்குத் தெரிவிக்கச் சொன்னாங்கன்னான்."

காமாட்சியின் கண்கள் பீதியில் விரிந்தன. அவள் முகம் போன போக்கும் உடம்பு பதறிய விதமும் அவருக்குத் திகைப்பை ஏற்படுத்தின. இனி உறவு இல்லை என்று ராஜாவைப் பார்த்து கதறிய அன்று இப்படி அவள் பதறியதாக அவருக்கு நினைவில்லை.

"எப்படி ஆக்ஸிடென்ட் ஆச்சாம்? காரா, பைக்கா?"

"கார் ஓட்டிக்கிட்டுப் போகும்போது ஹார்ட் அட்டாக் ஆயிடுச்சுன்னு சொல்றாங்க; ஓட்ட முடியாமபோயி ஆக்ஸிடென்ட் ஆகியிருக்கு."

"ஹார்ட் அட்டாக்கா?" காமாட்சி வெறி பிடித்தவள் போல தலையில் அடித்துக் கொண்டாள்.

"இனிமே உறவில்லேன்னு கழுத்தைப் பிடிச்சுத் தள்ளாத குறையா அனுப்பினீங்களே? ரத்த சம்பந்தம் இல்லேன்னு சொல்ல முடிஞ்சுதா உங்களுக்கு? பரம்பரை சொத்து கொடுக்கலேன்னாலும் பரம்பரை வியாதி போய் சேந்துட்டுது அவனுக்கு."

"வாயை மூடிக்கிட்டு இருக்கப்போறியா இல்லையா சித்த நாழி?" என்று வாய் சொன்னாலும் அவருக்கும் அதே எண்ணம் வந்து மனசு திடுக்கிட்டது. தாத்தா, அப்பா எல்லாரும் இறந்தது மாரடைப்பால். ஆனால் அவர்கள் போனது ஐம்பது வயதுக்குமேல். அவருக்கும் ஐம்பது வயதில் மாரடைப்பு வந்தது. ஆனால் அதற்குப் பிறகு மிக கவனமாக உடம்பையும் சாப்பாட்டையும் பராமரித்ததில் இதுவரை தொல்லை இல்லை.

"வாயை மூடிக்கிட்டு இருந்து இருந்துதான் இந்த நிலைக்கு ஆளாகியிருக்கேன். பெத்த ஒரே பிள்ளையே கைகழுவி விட்டு..."

காமாட்சி அதற்குமேல் தாங்காதவள்போல கேவிக்கேவி அழ ஆரம்பித்தாள்.

சரவணன் இதை எதிர்பார்க்கவில்லை. இப்படி அவள் அழுது பார்த்ததில்லை. அது அவரை நிலைகுலைய வைத்தது. பலவீனப்படுத்தியது. கோபத்தால் அதை மறைக்கத் தோன்றிற்று.

"நீ சும்மா இருக்க மாட்டே? பிள்ளைதான் வேணும்னா அவனோட நீ போலாம். இங்கே இருக்கத் தேவையில்லேன்னு நா அன்னிக்கே சொல்லல்லே?"

அவள் கேவிக் கொண்டே மறுபடி தலையில் அடித்துக் கொண்டாள்.

"ஆமாம், போயிருக்கணும். நா ஒரு மூடம்தான் நீங்க சொல்றமாதிரி. போயிருக்கணும் அவனோட. இங்க ஏதோ வெச்சிருக்கிறமாதிரி தங்கினேன். மாரடைப்பு வந்த உடம்பு - நா இல்லேன்னா என்ன செய்வீங்கன்னு தங்கினது அசட்டுத்தனம்தான்."

அவர் சற்று நேரம் பேசாமல் இருந்தார், அவளுக்குப் பதில் சொல்வதில் ஏதும் அர்த்தமில்லை என்று நினைத்தவராய்.

"டாக்டர் உங்ககிட்ட சொல்லச்



**"குத்து விளக்கு ஏற்றினதும் தலைவர் கையிலே இருந்து மெழுகுவர்த்தியை உடனே வாங்கிடு..."**

**"ஏன்?"**

**"போன விழாவில் மறந்துபோய் ஜிப்பா பையிலே போட்டுக்கிட்டு ஜிப்பாவே பத்திக்கிச்சு.."**

**- பர்வதவர்த்தினி**

சொன்னார்."

அதற்குப் பின்னால் ஒரு செய்தி இருந்தது. "ராஜாவை உயிரோடு பார்க்க விரும்பினால், உடனே வாருங்கள்."

அவருக்கு உள்ளுக்குள் இலேசாக நடுங்கிற்று. இதே இடத்தில் அமர்ந்து இரண்டு ஆண்டுகளுக்கு முன் தான் கத்தியது நினைவுக்கு வந்தது.

"எனக்கு மகனே பிறக்கல்லேன்னு நினைச்சுக்கறேன் - நான் செத்துப் போயிட்டேன்னு யாராவது தகவல் சொன்னா, இங்கே கொள்ளிபோட வந்து நிக்காதே."

"ரொம்ப சரி" என்று ராஜா அவரைப் பார்த்து இலேசாகச் சிரித்தது. அவன் கிளம்புவதற்கு முன் காமாட்சியைத் தீர்க்கமாகப் பார்த்தது. அவள் தலைப்பால் முகத்தை மூடி அழுதது. எல்லாம் எதிரில் நின்றது.

இரண்டு ஆண்டுகளுக்கு முன், ஒரு நாள் இப்படிப்பட்ட செய்தி வரும் என்று நினைத்திருக்க முடியாது. நினைத்திருந்தால் அப்படிப்பட்ட வார்த்தைகளை வாய் கக்கியிருக்குமா என்று யோசித்துப் பார்ப்பது வேலையற்ற வேலை. இனிமேல் என்ன செய்ய வேண்டும் என்று தீவிரமாக ஒரு கேள்வி எட்டிப் பார்த்தது. பிள்ளை என்ற உறவே இல்லை என்று இன்று காலை வரை இருந்த வீம்பு வலு விழுந்துபோனது போல அவருக்குப் பலவீனம் ஏற்பட்டது.

"இப்ப என்ன செய்யப் போறீங்க?"

அவர் உலுக்கப்பட்டாற்போல நிமிர்ந்து பார்த்தார். காமாட்சி அவர் எதிரில் ஏதோ நீதி கேட்பவள் போல நின்றிருந்தாள். முகம் பயங்கரமாக இருந்தது.

"என்ன செய்யணும்?" என்றார் அவர் எனக்கும் அந்த செய்திக்கும் என்ன சம்பந்தம் என்பவர்போல.

காமாட்சியின் முகம் ரௌத்ரமாக மாறிற்று.

"நீங்க இங்கேயே குந்தியிருங்க. நா போறேன், என் மகனைப் பார்க்க. என்ன செய்யணும்னு கேக்கணும்னா எத்தனைக் கல்நெஞ்சனா இருக்கணும் நீங்க! அங்கே யிருந்து யாரோ போன் பண்றாங்க. சீரியஸ்ஸா மகன் படுத்திருக்கான்னு. நீங்க கல்லுளி மங்கனாட்டம் என்ன செய்யணும்ங்கிறீங்க!"

சரவணன் வாயே திறக்காமல் உட்கார்ந்திருக்க, அவள் வெறிபிடித்தவள்போல அரற்றினாள்.

"ராஜா மாதிரி இருக்க வேண்டிய பையன், அங்கே அநாதையா கிடக்கிறான். உடம்பிலே வேதனைன்னா அம்மான்னுதான் முனகுவான். உங்களைக் கூப்பிடமாட்டான் ஞாபகம் வெச்சுக்குங்க."

சரியான சினிமா வசனம் பேசுகிறாள் என்று அவருக்கு ஆத்திரம் பொத்துக் கொண்டு வந்தது.

"பேசாம இரு. நீங்க வாங்கன்னு அந்தப் பையன் சொல்லல்லே!"

"சொல்ல வேண்டிய அவசியமில்லேன்னு நினைச்சிருப்பான்! ஊர் உலகத்திலே இருக்கிற அப்பா மாதிரி நீங்க நடந்துப்பீங்கன்னு நினைச்சிருப்பான். அவனுக்குத் தெரியுமோ உங்களைப் பத்தி?"

காமாட்சி உடைந்துபோனவள் போல மறுபடியும் கேவிக்கேவி அழுதாள். பிறகு நிமிர்ந்து,

"நீங்கதானே அவனோடு சண்டை போட்டீங்க? நானா போட்டேன்? நா போறேன் அவனைப் பார்க்க. என்னை அனுப்புங்க. ப்ளேன்லே கிளம்பிப்போறேன். அந்தப் பையனுக்குத் தகவல் சொல்லுங்க. அவன் ஏர்போர்டுக்கு வந்து கூட்டிக்கிட்டுப் போகட்டும்." என்றாள். அவர் வியப்புடன் அவளைப் பார்த்தார். இங்கிருந்து செங்கல்பட்டிற்கு அவள் தனியாகச் சென்றதில்லை.

"கொஞ்சம் என்னை யோசிக்க விடறியா?" என்றார் அவர். மனசு ஏகக் குழப்பத்தில் இருந்தது. ராஜாவின் மரணச் செய்தி வந்துவிட்டால் ஆயுசுக்கும் இவள் தன்னை மன்னிக்க மாட்டாள். தன்னுடைய மனசாட்சியே மன்னிக்குமா என்று அவருக்குச் சந்தேகம் வந்தது. செய்தி கேட்டதிலிருந்து மனத்திலும் உடம்பிலும் ஒரு ரசாயன மாற்றம் ஏற்பட்டிருந்தது உண்மை. ஒரு முடிவுக்கு வந்தவர்போல் காமாட்சியிடம் சொன்னார்:

"சரி அப்ப, சாயந்திர ஃப்ளைட்லே இடம் கிடைக்கிறது கஷ்டம், காலை ஃப்ளைட்லே கிளம்பிப் போறேன்!"

ஒரு விநாடி நம்பாதவள் போல காமாட்சி அவரைப் பார்த்தாள். முக தசைகள் இலேசாகத் தளர்ந்தன. கண்கள் மறுபடி விரிந்தன.



"நா? நா வரவேண்டாமா?"

"நீ எதுக்கு? நா போய் என்ன ஏதுன்னு பார்த்துட்டு வரேன்!"

காமாட்சி சரேலென்று நகர்ந்து வந்து அவரது தோள்களைப் பிடித்துக் கொண்டாள். சரம் சரமாகக் கண்ணீர் விழுந்து புடைவைத் தலைப்பை நனைத்தது.

''நானும் வரேன் - வரவேண்டாம்னு சொல்லாதீங்க. இங்க தனியா உட்கார்ந்து கவலைப்பட்டு நா செத்துருவேன்."

"காமாட்சி சொன்னதைக் கேளு, நீ வர வேண்டிய அவசியமில்லே." அவர் எரிச்சலுடன் அவளுடைய கைகளை விலக்கப் பார்த்தார். அவளுடைய கைகள் உடும்புப் பிடியாக மாறி இருந்தன.

"இல்லே, நா வருவேன். என்னை நீங்க விட்டுட்டுப் போக முடியாது. ஒரு நாளைக்கு உங்கக் கோபம் ஆறிடும், ராஜா வீட்டுக்கு வந்துருவான்னு கனாக்கண்டுக்கிட்டிருந்தேன் இத்தனை நாளும். அது கனவாவே முடிஞ்சிடுச்சுன்னா எனக்குத் தாங்காது."

அவள் 'ஓ'வென்று அழுதாள். அவளது துக்கம் ஆதியும் அந்தமுமில்லாத பிரளயம் போல் தோன்றிற்று. அவரைத் திக்கு முக்காட வைத்தது. ஒரு வகையில் அவரை நெகிழ்வித்தது. அந்தராத்மாவில் இருந்த ஏதோ ஓர் உயிரிழை இருவரையும் பிணைத்ததான பிரமையேற்பட்டது. காமாட்சியும் கூட இருந்தால் ராஜாவுடன் தொடர்பு ஏற்படுத்திக் கொள்வது சற்று சரளமாகும் என்று தோன்றிற்று.

"நீ அங்கே ஆஸ்பத்திரிக்கு வந்து இப்படி அழுது புரண்டா அவனுக்கு நல்லதில்லே."

அவள் கண்களில் சட்டென்று ஒரு பிரகாசம் ஏற்பட்டது.




"மாட்டேன் - அவன் எதிரே அழமாட்டேன். என்னைக் கட்டுப் படுத்திக்குவேன். அத்தனை விவேகம் எனக்கு இல்லையா?"

"சரி அப்ப" என்றார் சரவணன் சலுகை காட்டும் கம்பீரத்துடன், ''கொஞ்சமா துணிமணி எடுத்து வெச்சுக்க, எனக்கும் எடுத்துவை."

அவள் அதரங்களில் இலேசான புன்னகை அரும்பிற்று. முகமே மாறிப் போயிற்று. அவரைப் பற்றியிருந்த பிடியின் இறுக்கம் தளர்ந்தது.

"சரி, நீங்க டிக்கெட் புக் பண்ற வேலையைக் கவனிங்க" என்றாள் அவள். "நீங்க இப்படிப் பேசறதே நல்ல சகுனமாத் தோணுது. ராஜா பிழைச்சுடுவான்னு நம்பிக்கை வருது."

அவர் நம்பிக்கையில்லாமல் விமான டிக்கெட்டுக்காகத் தனக்குத் தெரிந்த ஏஜென்டுடன் பேசினார். மறுநாள் காலை ஃப்ளைடுக்குத்தான் டிக்கெட் கிடைத்தது. அது உறுதியானதும் தில்லியில் தனக்குத் தெரிந்த இடம் ஒன்றுக்கு ஃபோன் செய்து பேசிவிட்டு, விவேக் குப்தாவின் நம்பருக்கு போன் செய்தார். விவேக்கின் குரல் கேட்டதும்,

"நான் சரவணன் சென்னையிலேருந்து பேசுகிறேன். நானும் என் மனைவியும் நாளைக் காலை ஃப்ளைட்டில் தில்லி வருகிறோம்" என்றார்.

"ஓ?" என்றான் விவேக் நம்பாதவன் போல, "நான் ஏர்போர்ட்டுக்கு வருகிறேன். நீங்கள் தங்க."

அவர் குறுக்கிட்டு, "அதற்கு நானே ஏற்பாடு செய்துவிட்டேன்" என்றார். "எனக்கு தில்லி பழக்கம்தான், மகாராணி பாகில் ஒரு கெஸ்ட் ஹவுஸ் இருக்கிறது. அதில் ரூம் புக் செய்துவிட்டேன். நீங்கள் அங்கு வந்து என்னைச் சந்தித்தால் போதும்."

"ஓ.கே.ஸார்."

அவர் விலாசத்தைக் கொடுத்தார். காமாட்சி ஏழுமலையானுக்கு மஞ்சள் நீரில் நனைத்த துணியில் காசு முடிந்து வைத்தாள். கண்ணீர் பெருக்கியபடி "ராஜாவை நல்லபடியா ஆக்கிடு, மலையேறி தரிசனம் பண்ணவரேன்" என்று வேண்டினாள். - "உன் சன்னிதியிலே அவனுக்குக் கல்யாணம் செய்விக்கற பாக்கியத்தை எனக்குக் கொடு. பேரன் பிறந்தா உன் பேரை வைக்கறேன்."

சென்னையிலிருந்து போன் வரும் என்று விவேக் எதிர்பார்த்தான். ஆனால் ராஜாவின் பெற்றோர்கள் இருவரும் கிளம்பி வருவார்கள் என்று எதிர்பார்க்கவில்லை. இதைச் சகுந்தலா எப்படி எதிர்கொள்வாள் என்கிற யோசனையுடன் அவளுடைய தொலைபேசி எண்களைச் சுழற்றினான்.

(தொடரும்)

இராமஸேதுவுக்கு வாருங்கள்! சிவசிவ வாழ்வில் ஆனந்தம் பெறுவீர்கள்!

# பெருவாழ்வும் பேரின்பமும் அளிக்கும் இராமேஸ்வரத்தில் மாதாமாதம் அமாவாசையன்று நெய் தீபமேற்றி அன்னதானம் செய்வோம் வாருங்கள்!

**ஆன்மீக அன்பர்களின் வேண்டுகோளுக்கிணங்க ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் அருளாசியுடன் பெருவாழ்வும், பேரின்பமும் அளிக்கும் புனித க்ஷேத்ரமான இராமேஸ்வரத்தில் நெய் தீபமேற்றி அன்னதானம் செய்வதில் நீங்களும் பங்குகொள்ள அன்புடன் அழைக்கிறோம்!**

பேரன்புடையீர்! வணக்கம். அருள்மிகு ஸ்ரீ இராமநாதசுவாமி தங்களுக்கு அனைத்து நலன்களையும் தந்தருளப் பிரார்த்திக்கிறோம்.

பன்னிரெண்டு ஜோதிர்லிங்க ஸ்தலங்களுள் ஒன்றான இராமேஸ்வரத்தில் ஸ்ரீ பர்வதவர்த்தினி சமேத ஸ்ரீராமநாதசுவாமி உடனிருந்து அருள்பாலிக்கிறார். ஸ்ரீராமபிரான் இராவணனை வென்று இலங்கையிலிருந்து திரும்பியதும் சீதாதேவியாருடன் ராமேஸ்வரம் வந்து, அங்கு சிவலிங்கம் பிரதிஷ்டை செய்து வழிபட விரும்புகிறார். அப்போது சீதாதேவியார் மணலால் பிரதிஷ்டை செய்துவைத்த சிவலிங்கமே கர்ப்பக்கிரகத்திலுள் இன்று காட்சியளிக்கிறது. மூர்த்தி, தீர்த்தம், தலம் மூவகையாலும் இராமேஸ்வரம் சிறப்புற்று சிவவிஷ்ணு ஸ்தலமாக பிரகாசிக்கிறது. மாங்கல்ய தோஷம், புத்திர தோஷம், செவ்வாய் தோஷம், நாகதோஷம் போன்ற எல்லாவிதமான தோஷங்களுக்கும் பரிகாரத்தலமாக இராமேஸ்வரம் விளங்குகிறது. இத்தகைய சிறப்புமிக்க புண்ணிய க்ஷேத்ரமான இராமேஸ்வரத்தில் நேரில் சென்று நெய் தீபமேற்றி அன்னதானம் செய்ய இயலாத அன்பர்களுக்காக, ''ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்''மூலம் அன்னதானத் திருப்பணி நடைபெறுகிறது. புண்ணியபூமி இராமேஸ்வரத்தில் ஏழைகளுக்கும், அடியார்களுக்கும் அன்னதானம் அளிக்கும் பணியிலும், குடும்பம் நலம் பெற நெய் விளக்கேற்றும் பணியிலும் நாமும் பங்குகொண்டோம் என்ற ஆத்ம திருப்தியை அடைய இது ஒரு சிறந்த வாய்ப்பாகும்.

* தங்கள் சார்பாக நெய் தீபமேற்றி அன்னதானம் செய்ய தங்களால் இயன்ற நன்கொடையை அனுப்பலாம்.
* ரூ.500/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு 'ஆன்மீகம்' மாத இதழ் ஒரு ஆண்டிற்கு அனுப்பி வைக்கப்படும்.
* ரூ.1000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு 'ஆன்மீகம்' மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
* ரூ.5000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு 'ஆன்மீகம்' மாத இதழ் பத்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

அன்னதானத்திற்கும், நெய் தீபம் ஏற்றுவதற்கும் நன்கொடையை அனுப்புவோர், திருமண நாள், பிறந்த நாள் மற்றும் திதி நாள் மேலும் தாங்கள் எதை நினைத்து அன்னதானம் செய்ய விரும்புகிறீர்கள் என்பதைத் தெரிவித்தால் அதன்படி தாங்கள் விரும்பும் மாதத்தில் அமாவாசை அன்று இராமேஸ்வரத்தில் நெய் தீபமேற்றி அன்னதானம் செய்கிறோம். அன்னதானத்திற்கு நன்கொடையாக ரூ.1000, ரூ.5000 அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு இராமேஸ்வரத்தில் பூஜிக்கப்பட்ட 'கோடி தீர்த்த' சொம்பும், வலம்புரி சங்கும் ஸ்ரீ பர்வதவர்த்தினி சமேத ஸ்ரீ இராமநாதசுவாமி வண்ணப்படமும், சிறிய அளவில் சிவபுராண புத்தகமும் அனுப்பி வைக்கப்படும்.

* ரூ.5000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்கள் சார்பாக, ஒவ்வொரு மாதமும் அமாவாசை அன்று இராமேஸ்வரத்தில் நெய் தீபம் ஏற்றி அன்னதானம் செய்து தொடர்ந்து பத்து வருடங்கள் பிரசாதமும், ''ஆன்மீகம்'' மாத இதழும் தங்களுக்கு அனுப்பி வைக்கப்படும். மேலும் தாங்கள் விரும்பும்போது சந்ததியினரின் முகவரிக்கும் மாற்றம் செய்து தருகிறோம். ஆன்மீக அன்பர்கள் ஒவ்வொருவரின் பூஜை அறையும் புனிதம் பெறவேண்டும் என்ற எண்ணத்துடன் ரூ.5000 செலுத்துபவர்களுக்கு 336 பக்கங்களுடன் கூடிய பெரிய அளவில் உள்ள ''ஸ்ரீமத் இராமாயணம்'' புத்தகத்தை (தமிழில்) அனுப்பி வைக்கிறோம்.

அன்னதானம் செய்ய விரும்பும் ஆன்மீக அன்பர்களுக்கு இராமேஸ்வரத்தில் அமாவாசையன்று நெய் தீபம் ஏற்றுகிறோம். பதினாறு வகை இறைவழிபாட்டில் மிகச் சிறப்பாகச் சொல்லப்படுவது தீபவழிபாடாகும். இராமேஸ்வரத்தில் தீபமிடுவது மிகுந்த புண்ணியத்தைத்தரக்கூடியது. தாங்கள் என்ன வேண்டுதலுக்காக தீபம் ஏற்ற வேண்டும் என்பதையும், உங்கள் பெயர், நட்சத்திரத்தையும் குறிப்பிட்டு எங்களுக்கு எழுதி அனுப்பினால் அதன்படி அமாவாசையன்று தீபம் ஏற்றி தங்களுக்கு பிரசாதம் அனுப்பி வைக்கப்படும்.

நெய் தீபமேற்றும் பணியிலும், அன்னதானப் பணியிலும் ஈடுபட விரும்பும் ஆன்மீக அன்பர்கள் தங்கள் நன்கொடையை Cheque/D.D/M.O மூலம் (Sri Annapoorani Annadhana Seva Trust, Chennai - 4) என்ற பெயருக்கு எடுத்து கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். பெருவாழ்வும், பேரின்பமும் அளிக்கும் புண்ணிய க்ஷேத்ரமான இராமேஸ்வரத்தில் அன்னதானப் பணியும், தீப வழிபாட்டுப் பணியும் தெய்வீகப்பணியாக தழைத்திட உதவுமாறு அன்புகூர்ந்து வேண்டுகிறோம்.

*Cheque/D.D/M.O அனுப்ப வேண்டிய முகவரி:*

ஸ்ரீ பர்வதவர்த்தினி

ஸ்ரீ இராமநாதசுவாமி


**ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்**

**SRI ANNAPOORANI ANNADHANA SEVA TRUST (Regd.)**

68, Nadu Street, (Opp: Sri Kapaleeswarar Temple), Mylapore, Chennai - 600 004.

Tel: 4959302 Fax: (044) 4616311 E-mail: sivasiva@vsnl.net


**சேது தீர்த்தத்தை தொட்டாலும், பார்த்தாலும் புண்ணிய பலனைப் பெறலாம்!**

அரசியல் மேடைப்பேச்சுக்கான தம் சன்மானத்தை காமராஜ் சற்று உயர்த்தினால் நன்றாயிருக்கும் என நினைத்தார் நா.பா. அந்தக் கோரிக்கையைத் தக்க சமயத்தில் காமராஜிடம் தெரிவிக்குமாறு தம் உற்ற நண்பர் கு. ராஜவேலுவிடம் கேட்டுக் கொள்ள வேண்டி அவர் வீடு சென்றார். நானும் உடன் சென்றேன். வெளியே காரில் காத்திருந்தேன். கு. ராஜவேலு என்மேல் அன்பைப் பொழிபவர். என் மரியாதைக்கு உரியவர். எனினும் பொருளாதார ரீதியான இப்படியோர் அந்தரங்கக் கோரிக்கையை நா.பா. அவரிடம் தெரிவிக்கும்போது நான் அங்கே இருப்பது நாகரிகமாகப் படவில்லை. காரிலேயே காத்திருந்தேன்.

சிறிது நேரத்திற்குப் பின் அவர் வீட்டை விட்டு வெளியே வந்தார் நா.பா. நாங்கள் நா.பா. வீடு திரும்பினோம்.

'கு. ராஜவேலு காமராஜுக்கு மிக நெருங்கியவர். உரிமையோடு அவரிடம் பேசக்கூடியவர். நேர்மை, நாணயம், ஒழுக்கம் ஆகியவற்றின் உறைவிடம். வாக்குறுதிக்காக உயிரையும் விடத் தயங்கமாட்டார். இவர் காமராஜிடம் சொல்வதாகச் சொல்லிவிட்டார். பொறுத்திருந்து விளைவைப் பார்ப்போம்' என்றார் நா. பா.

நான் தீபம் அலுவலகத்தில் இருந்த போது நா.பா தம் வீட்டிலிருந்து மகிழ்ச்சியோடு எனக்கு ஃபோன் செய்தார்.

"என் அரசியல் மேடைப் பேச்சுக்கான தொகை உயர்த்தப்பட்டுவிட்டது."

என் மகிழ்ச்சிக்கும் அளவே இல்லை. நா.பா.வுக்கு இந்தப் பெரிய உதவியைச் செய்த கு. ராஜவேலு, தம் 'காதல் தூங்குகிறது' நாவலுக்காக, கலைமகள் நாராயணஸ்வாமி ஐயர் பரிசு பெற்றவர். சுதந்திரத் தியாகியும் கூட. (திருப்பூர் குமரனுடன் சுதந்திரப் போரில் கலந்துகொண்டு தடியடி பட்டு, காது முற்றிலும் பழுதுபட்ட பி.எஸ். சுந்தரம் இவரது நெருங்கிய நண்பர்.) ராஜவேலு அடிக்கடி மௌனவிரதம் இருக்கும் ஆன்மிகவாதி. அவர் மனைவி பரமேஸ்வரி பிரமாதமாகச் சமைப்பார். நானும் கு. ராஜவேலுவுமாக தில்லி எழுத்தாளர் மாநாடுகளுக்குச் செல்லும்போது, அவர் மனைவி தயார் செய்து அனுப்பும் உணவைத்தான் சாப்பிடுவோம். பிரயாணம் முழுவதும் வெளியே உணவு வாங்கிச் சாப்பிட விடமாட்டார். (அழ. வள்ளியப்பாவுடன் பயணம் செய்திருக்கிறேன். அவரும் இப்படித்தான்.) நா.பா. மீதும் அகிலன் மீதும் கு. ராஜவேலுவுக்கு மிகுந்த பிரியம். பிறகொருமுறை ராஜவேலுவைச் சந்தித்தபோது அவர் சொன்னார்:

"நா.பா.வின் பொருளாதாரப் பிரச்னையையும் தீபம் இதழின் சிரமங்களையும் பெருந்தலைவரிடம் சொன்னேன். உடனே நா.பா.வின் மேடைப் பேச்சுக்கு எவ்வளவு தொகை கொடுக்கிறார்கள் என்று விசாரித்தார். 'என்னய்யா, இவ்வளவு குறைவான தொகையா! நமக்காக மேடைல பேசறவங்களுக்குக் குழந்தை குட்டி எல்லாம் இல்லியா! அந்தக் குழந்தைகளுக்குப் படிப்புச் செலவு இல்லியா! உடனே தொகையை இரண்டு மடங்கு ஆக்குங்கள்' என உத்தரவு போட்டார். அப்படியானால் நா.பா.வுக்கு உயர்த்துவதைப் போலவே அவருக்கு இணையான மற்ற பேச்சாளர்களுக்கும் உயர்த்த வேண்டியிருக்கும் என்றார் உதவியாளர். "எல்லோருக்குமே உயர்த்துங்கள். எல்லோரும் குடும்பம் உடையவர்கள் இல்லையா! என்னை மாதிரித் தனிக்கட்டையா என்ன!" என்று கேட்டார் காமராஜ்.

இதைச் சொல்லிவிட்டு ராஜவேலு நெகிழ்ந்தபோது என் கண்களும் பனித்தன.

ஒருநாள் அலமாரியிலிருந்து எதையோ எடுக்கும்போது கைதவறிக் கீழே விழுந்து

# ஒரு மனிதரின் மனமும்...

**திருப்பூர் கிருஷ்ணன்**



காமராஜ் காலமானபின் ஒருமுறை தீபத்தின் அட்டையில் காமராஜ் படத்தை வெளியிட்டார் நா.பா. 'இலக்கிய இதழில் ஓர் அரசியல்வாதியின் அட்டைப்படமா!' சிலரிடம் கேள்வி எழுந்தது. 'காமராஜே ஓர் இலக்கியம்தான்' என்று அழுத்தந்திருத்தமாகப் பதில் சொன்னார் நா.பா. அந்த அட்டைப் படத்திற்குப் பொருத்தமாக பெருந்தலைவர் பற்றி நான் எழுதிய ஒரு முழுப்பக்கப் புதுக் கவிதையும் அதே தீபத்தில் இடம் பெற்றது.

*கிராமப்புறப் பள்ளிகளின்*
*தண்டவாளப் பள்ளிமணி*



• நா. பார்த்தசாரதி



• கு. ராஜவேலு

*'டாண் டாண்'*
*என ஒலிக்கும்...*
*அந்த ஆரம்பப்*
*பள்ளிமணி*
*தன் முதிரா*
*மழலையிலே*
*காம்ராஜ் என்பதைத் தான்*
*இப்படிக் கைகொட்டிச் சொல்கிறது...*

*ஆகட்டும் பார்க்கலாம்*
*அவர் சொன்னார், ஆனால்*
*அவரின் தேசிய வாதங்கள்*
*செல்லரிக்கும் இந்நாளில்*
*மனம் கொதித்துத் தொண்டர்கள்*
*சொல்கிறோம்,*
*'ஆகட்டும் ஒரு கை பார்க்கலாம்' என்று....*

உடைத்தது ஓர் இசைத்தட்டு. கல்லூரிக் காலத்தில் கட்டுரைப் போட்டியில் பரிசாகக் கிடைத்த வாணிஜெயராம் பாடிய இசைத்தட்டு. முழுவதும் காமராஜ் பற்றிய பாடல்கள். 'காமராஜ் ஆளவந்தால் கட்டாயம் வாழ்வு வரும்... காலம் வரும் கண்ணே நீ கண்துயில்வாய் முன்னே..!' அந்த வரிகள் உடைபட்டுவிட்டன. மனம் துக்க வசப்பட்டது.

ஒரு காந்தி ஜயந்தியன்று நாளிதழ் துயரமான அச்செய்தியைத் தாங்கி வெளிவந்தது. காந்தியவாதியாக வாழ்ந்த காமராஜ், காந்தி பிறந்த நாளிலேயே அமரராகியிருந்தார்.

அன்று சாப்பிடப் பிடிக்காமல் விக்கித்து உட்கார்ந்திருந்தேன். முன்பு கல்கியில் வெளிவந்த நா.பா.வின் 'சத்திய வெள்ளம்' தொடர் நாவலின் பைண்டிங் என்னிடம் இருந்தது. அதை எடுத்து மறுபடி மறுபடி வாசித்துக் கொண்டிருந்தேன். அதில்தான் காமராஜ், ராமராஜ் என்ற பெயரில் ஒரு கதாபாத்திரமாக உருவாக்கப்பட்டிருந்தார்.

பெருந்தலைவரைத் தலைவராக ஏற்றிருந்த பல இலக்கியவாதிகள் காமராஜ் மறைவுக்குப் பின் முற்றிலுமாக அரசியலிலிருந்து ஒதுங்கத் தொடங்கினார்கள். நா.பா.வும் அரசியலை விட்டு விலகலானார். அரசியல் பலருக்கு அலுக்கத் தொடங்கியது.

இப்படிப் பல வரிகள் அந்தக் கவிதையில். என்ன கவிதை எழுதி என்ன! காமராஜ் இறந்த துயரத்தின் அதிர்ச்சி என் மனத்திலிருந்து மட்டுமல்ல, என் நண்பர்கள் பலர் மனத்திலிருந்தும் நீங்கவேயில்லை இன்னும் கூட!

(தொடரும்)



• மதிப்புக்குரிய புரட்சித் தலைவிக்கு...



• குடைபிடிக்கும் ரெடிமேட் மனு வியாபாரம்

வேலை நாட்களில் பகல் ஒரு மணி நெருங்க, நெருங்க தலைமைச் செயலகத்தில் செயின்ட் மேரி சர்ச்சுக்கும் முதல்வர் அலுவலகம் உள்ள கட்டடத்துக்கும் இடையில் உள்ள பகுதியில் பரபரப்பு தொற்றிக் கொள்கிறது. முதல்வரின் பாதுகாப்புப் பிரிவு போலீஸார் பதற்றத்துடன், "எல்லாம் சரியாக இருக்கிறதா?" என்று கண்களாலேயே ஒருவருக்கொருவர் கேட்டுக் கொள்ள, போர்டிகோ பகுதியிலிருந்து மக்கள் பார்வைக்கு வருகிறார் ஜெயலலிதா. காலில் கான்வாஸ் ஷு. லைட்டான கலரில் புடவை. (இப்போதெல்லாம் சற்று வெளிர் நிறங்களையே அணிகிறார் ஜெ) காவலர் பின்னால் குடைபிடிக்க 'அம்மா... அம்மா' என்று கூட்டம் உணர்ச்சி வேகத்தில் குரல் கொடுக்கிறது. முதல்வருடன் கூடவே, உதவியாளர் ஒரு பையைப் பிடித்து வர, தடுப்புக்குப் பின்னே முதல் வரிசையில் இருப்பவர்களிடம் மட்டும் மனுக்களைப் பெற்றுக் கொள்கிறார் முதல்வர். பேசவாய்ப்பு கிடைக்கும் சிலர் வாய்விட்டு அழுது கோரிக்கையை வைக்கும்போது முதல்வரின் முகமும் வாடிப் போய் விடுகிறது. மற்றபடி கண்களில் கனிவும் புன்னகையும் தான்.

"புரட்சித் தலைவி வாழ்க" என்று கோஷம் எழுப்பும் கூட்டத்தை கைகளாலேயே அடக்கி வைக்கிறார் முதல்வர். மனு வாங்கும் படலம் அதிகபட்சம் இருபது நிமிடம் தான். அம்மாவிடம் நேரிடையாக மனு கொடுக்க வாய்ப்பு கிடைக்காதவர்களிடம் முதல்வரின் தனிப் பிரிவு அதிகாரி பீலா ராஜேஷ் பெற்றுக் கொள்கிறார்.



• "அம்மா... அம்மா..."

மூன்று, நான்கு பைகள் நிரம்பி விடுகின்றன. "ஆனால் முதல்வரிடம் நேரிடையாகக் கொடுக்க முடியவில்லையே'' என்ற வாட்டம் மக்கள் முகத்தில் பளிச்சென தெரிகிறது. சில சமயங்களில் போலீஸ்காரர்களும் மனுக்களைப் பெற்று முதல்வர் அலுவலகத்தில் சேர்க்கிறார்கள்.

கடந்த ஆண்டு மே மாதம் 14ம் தேதியிலிருந்தே (இடையில் பன்னீர் காலத்தைத் தவிர) கோட்டையில் திருவிழா கூட்டம்தான். முதல்வரிடம் மனு கொடுத்தால் எப்படியும் தங்கள் பிரச்னைகளைத் தீர்த்து வைப்பார் என்ற நம்பிக்கையில், குமரி முனையிலிருந்து திருத்தணிவரை பல்வேறு பகுதிகளிலிருந்தும் நூற்றுக் கணக்கான மக்கள் காலையிலேயே கோட்டை வாசலில் குவிகிறார்கள். ஆனால் அவர்களால் உடனே உள்ளே போய் முதல்வரைப் பார்த்து மனு கொடுத்துவிட முடியாது. பதினோரு மணி வாக்கில் அனைவரையும் கடுமையாகச் சோதனையிடுகிறார்கள் போலீஸார். அவர்கள் கொண்டு வரும் மூட்டை, முடிச்சுக்கள். டோக்கன் கொடுக்கப்பட்டு தனியாக வாங்கி வைக்கப்படுகின்றன. பன்னிரண்டு மணிக்கு இரும்புக் குழாய் தடுப்புக்குப் பின்னே அமர வைக்கப்படுகிறார்கள். இதிலும் முன்னே வருபவர்கள் தான், முதல் வரிசையில் இடம் பிடிக்க முடியும். சாவகாசமாக ஒரு மணி அளவில் வருபவர்கள் "நாளைக்கு வாருங்கள்" என்று அனுப்பி வைக்கப்படுகிறார்கள். முதல்வர் வந்து மனுக்களைப் பெற்றுக் கொண்டு போனவுடன் அந்தப் பகுதியே வெறிச்சோடி விடுகிறது. ஆனால் கண்களில் நம்பிக்கையுடன் "அம்மா செஞ்சுடுவாங்கல்லே தம்பி" என்று கேட்டுக் கொண்டு தயங்கி, தயங்கி நகர்கிறது தாய்மார்களின் கூட்டம். வேலை பளு காரணமாக சில நாட்களில் முதல்வரால் நேரடியாக வந்து மனுக்களைப் பெற முடிவதில்லை. திருவேற்காட்டிலிருந்து வந்த மங்கையர்கரசியும், போரூரிலிருந்து வந்திருந்த மணிமேகலையும் மனு கொடுக்க வந்த அன்று முதல்வர் மனுக்களைப் பெற வரவில்லை. கையில் ஊன்று கோலுடன் வந்திருந்த மங்கயர்கரசி "நடக்க முடியலை. கண்ணும் தெரியலை. அம்மாதான் நிதியுதவி செய்யணும். நேரா மனுவைக் கொடுக்க வந்தேன். நேரம் சரியில்லை." என்று தனிப் பிரிவு அதிகாரியைப் பார்க்க ஊன்று கோலுடன் கஷ்டப்பட்டு படியேறிக் கொண்டிருந்தார். அதேபோல மகன் மணிகண்டனின் மருத்துவ உதவிக்குப் பணம் கேட்டு வந்திருந்தார் மணிமேகலை. "இவுங்ககிட்ட கொடுத்தா அம்மா பார்ப்பாங்களா?" என்று நம்மை அப்பாவித்தனமாகக் கேட்டார் மணிமேகலை.

முதல்வரை நேரில் சந்திக்க முடியாதவர்கள் விஷ பாட்டிலுடன் ஸ்டண்ட் அடிப்பது, திடீரென்று அவரது காரின் முன்னால் பாய்வது, ஆசிட் குடித்து உயிரை விடுவேன் என்று பயமுறுத்துவது, மண்ணெண்ணெய் பாட்டிலுடன் 'எரித்துக் கொள்வேன்' என்று பயமுறுத்துவது போன்ற செயல்களையும் செய்யத் தயங்குவதில்லை. அதனால் புலனாய்வு போலீஸார் மிகவும் உஷாராக இருக்கிறார்கள். மனு கொடுக்க வரும் மக்களோடு மக்களாக சுடிதாரில் பெண் போலீஸும், லுங்கி டீஷர்ட்டில் காவலர்களும் கலந்தே நின்று மக்களின் அசைவுகளைப் பதிவு செய்கிறார்கள்.

முதல்வரிடம் கொடுக்கப்படும் மனுக்களில் பெரும்பாலானவை நிதியுதவி

"ஊருக்குள்ளே கடந்த ஒரு மாசமா ஒரு திருட்டு கூட நடக்கலையே. என்ன விஷயம்?"

"மாமூல் விஷயமா நாம ரொம்ப கெடுபிடி பண்றோம்னு திருடங்க ஸ்டிரைக் பண்றாங்க!"

- அம்பை தேவா



வேண்டித்தான். விதவை ஓய்வூதியம், சுய வேலை வாய்ப்பு என்று பல்வேறு கோரிக்கைகள். இவற்றிற்கான பல வகை ரெடிமேட் மனுக்கள் கோட்டை வாசலிலேயே விற்கப்படுகின்றன. அவரவர் தேவைக்கேற்ப வாங்கி, தத்தம் பெயர் மற்றும் முகவரி மட்டும் எழுதினால் போதும். ரெடிமேட் மனு ஒன்றின் விலை மூன்று ரூபாய். இதில் குறிப்பிடத்தக்க விஷயம் என்னவென்றால் ரெடிமேட் மனுக்கள் எல்லாவற்றிலும் ஜெயலலிதாவும், எம்.ஜி.ஆரும் இருக்கிறார்கள். சிலவற்றில் அண்ணாவும் இருக்கிறார். 'ஜெயலலிதா படம் போட்ட மனுவைக் கொடுத்தால் மட்டுமே காரியம் விரைந்து நிறைவேறும்' என்று தோரணை கொடுக்கக் கூடிய அளவில் அல்லது மக்களை அப்படி நினைக்க வைக்கும் நோக்கத்தில் தனியார் சிலர் இந்த ரெடிமேட் மனுக்கள் தயாரித்து சக்கை போடு போடுகிறார்கள். அ.இ.அ.தி.மு.க.வினர் மட்டுமே அம்மாவிடம் மனு கொடுக்க வருகிறார்கள் என்ற ஊகத்தின் அடிப்படையாலும் விற்கப்படுகின்றன இந்த ரெடிமேட் மனுக்கள். ஜெயலலிதா படம் போட்ட வெற்று (லெட்டர் ஹெட் போன்று) பேப்பரும் விற்கப்படுகிறது. இதில் மனு எழுதிக் கொடுக்க பத்து ரூபாய் வாங்கிக் கொள்கிறார்கள். கஷ்டப்பட்டு, கடன் வாங்கிக் கொண்டு முதல்வரைப் பார்க்க சென்னை வரும் மக்கள் இந்த சின்ன செலவைப் பற்றிக் கவலைப்படுவதில்லை.

அ.இ.அ.தி.மு.க. ஆட்சி வந்ததிலிருந்து இந்த வருடம் பிப்ரவரி முடிய முதல்வரின் தனிப்பிரிவுக்குக் கிட்டத்தட்ட ஐந்து இலட்சம் மனுக்கள் வந்திருக்கின்றன. அவற்றில் இரண்டு இலட்சம் மனுக்கள் மக்களின் தனிப்பட்ட பிரச்னை தொடர்பானவை. இவர்களில் 6428 பேருக்கு முதியோர் ஓய்வூதியமும் 134 நபருக்கு தியாகிகள் ஓய்வூதியமும் அனுமதிக்கப்பட்டுள்ளன. 8892 பேருக்கு நிதிக்கடன் வழங்கப்பட்டுள்ளதாம். 926 பேருக்கு அறுவை சிகிச்சைக்கு உதவியும் செய்யப்பட்டிருக்கிறது. இது தவிர மூவாயிரத்துக்கும் மேற்பட்ட நிலத் தகராறுகள் தீர்த்து வைக்கப்பட்டிருப்பதாக முதல்வர் சமீபத்தில் வெளியிட்ட அறிக்கை ஒன்றில் சொல்லியிருந்தார். அந்த அறிக்கைப் படியே பார்த்தாலும், கிட்டத்தட்ட மூன்று இலட்சம் மக்களுடைய கோரிக்கைகளுக்கு



"தலைவர் பலே பேர்வழி!"
"என்ன விஷயம்?"
"கட்சி ஆபீஸ் வாசல்ல 'தேர்தல் கூட்டணி கடைசி நேர மாறுதலுக்குட்பட்டது'னு போர்டு வைச்சுட்டார்!"
- அம்பை தேவா

என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது என்பது தெரியவில்லை. இத்தனைக்கும் மனுக்கள் குறித்து மாதா மாதம் ஆய்வு கூட்டங்கள் நடத்தப்படுகின்றனவாம்.

"எல்லாருடைய கோரிக்கைகளையும் எந்த அரசாலும் நிறைவேற்ற முடியாது. ஆனால் மக்கள் கொடுக்கும் எல்லா மனுக்களும் முறைப்படி பரிசீலிக்கப்பட்டு சம்பந்தப்பட்ட அலுவலகங்களுக்குப் பதில் பெற அனுப்பப்படுகின்றன. முதல்வரின் கையில் கொடுத்தால், அரசு விதிகளுக்குப் புறம்பான கோரிக்கைகளும் நிறைவேற்றப்படும் என்று எதிர்பார்ப்பது எப்படிச் சரியாகும்? ஆனால் சுணக்கம் எங்கு வருகிறது என்றால், முதல்வர் அலுவலகத்திலிருந்து அனுப்பப்படும் மனுக்கள் கீழ்நிலை அலுவலகங்களில் கோப்புகளோடு கோப்புகளாக உறங்கிப் போய்விடுகின்றன. கோட்டையில் காட்டப்படும் அதே மனிதாபிமானம், வேகம் எல்லா மட்டங்களிலும் காட்டப்பட வேண்டும். அப்போதுதான். உண்மையான விடிவு காலம் வரும்." என்கிறார் ஓர் இளம் ஐ.ஏ.எஸ். அதிகாரி.

முதல்வர் தீவிர முனைப்பு காட்டினால் இந்த போக்கை மாற்ற முடியுமே!

- ப்ரியன்

படங்கள் : ராஜன்

# சிரிப்பு வருது பிரபோ!



"எம தர்மரே! ஆயுள் முடிஞ்ச பின்னும் அந்தத் தலைவரின் உயிரை ஏன் கொண்டு வரவில்லை?"

''ஒருவருக்கு இரு பதவி கூடாதாம்! ஏற்கெனவே அமைச்சர் பதவியில் இருக்கும் அவர், சிவபதவி வேண்டாம் என்கிறார் பிரபோ!"

- தஞ்சை தாமு



''ஹலோ.. நான் சம்பந்தம் பேசுறேன்.''

''சம்பந்தம் எல்லாம் ஃபோனில் பேச முடியாது. நேரில் வாரும்.''

- எஸ். மோகன்

(சில்லறை மிஷினிடம்)

''ஐயா, சாமி... பிச்சை போடுங்க...''

- எஸ். மோகன்



''ஏன் நேத்து லேட்டா வந்தே?''

''அதுக்குதான் நேத்தே பதில் சொல்லிட்டேனே சார். நீங்க கூட மன்னிச்சு விட்டுட்டீங்களே.''

''மறுபடியும் காரணம் சொல்லுய்யா, வேலை இல்லாம போரடிக்குது...''

_ வந்தவாசி பா. ஜெயக்குமார்



**மேஷம்** : வெஸ்ட் இண்டீஸ் மண்ணுல இந்திய கிரிக்கெட் அணி இருபத்தாறு வருஷத்துக்குப் பிறகு ஜெயித்த மாதிரி உற்சாகத்துல துள்ளப் போறீங்க. உங்க புத்தி சாலித்தனம் வெளிப்படும். வேலை பார்க்கிற இடத்துல மறைமுகமான எதிர்ப்புகள் இருந்தாலும் பிரச்னை இருக்காது. பாராட்டும் மதிப்பும் கிடைக்கும். சொந்த பிஸினஸ் பண்றவங்களுக்கு ஆதாயம் கிட்டும். உறவினர்கள் நண்பர்கள் எல்லாம் ஓடோடி வந்து உதவுவாங்க. விவசாயிகள் தொழிலாளர்களுக்கு அதிர்ஷ்ட வாய்ப்புகள் இருக்கு. ஜமாய்ங்க.

**கடகம்** : தெய்வ பலம், கிரகங்கள் பலம் எல்லாம் உங்களுக்குச் சாதகமா இருக்கறதால அதிர்ஷ்ட வாய்ப்புகளுக்கு வழியிருக்கு. எதிர்ப்புகளைத் தாண்டி வெற்றி பெறுவீங்க. எதிரிகள் அடங்கிப் போவாங்க. குடும்பத்துல அமைதியும், இனிமையும் உருவாகும். இதுவரை இருந்து வந்த கடன் தொல்லைகள் நீங்கும். புதிய தொழில் சம்பந்தமான முயற்சிகள்ல வெற்றி கிடைக்கும். சின்னச் சின்ன வாக்குவாதங்கள் வரும் என்றாலும் அதன் மூலம் பெரிய பாதிப்பு வராது.

# நடக்குமென்பார்; நடக்கும்!

**ரிஷபம்** : நீங்க எதிர்பார்க்கற விஷயங்கள் இந்த வாரம் நடக்கும். பயணங்களால் நல்லது நடக்கும். உயர்ந்த பதவில இருக்கறவங்களுக்கு அவ்வப்போது சில தடங்கல்கள் வந்து இம்சை பண்ணும். நவக்கிரக வழிபாடு அவசியம். மனசுல அமைதியும் தெளிவும் உண்டாகும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்குப் புகழ், பாராட்டு உண்டு. எழுத்து, பத்திரிகை, பதிப்பகத்தார் ஆகியோருக்கு அனுகூலமுண்டு. வெளிநாடு போக திட்டமிட்டிருந்தவங்களுக்கு அதுக்கான வாய்ப்பு வந்து சேரும்.

**சிம்மம்** : மத்தவங்க வியக்கற மாதிரி நல்ல காரியங்கள் பண்ணப் போறீங்க. பணம் பல வழிகள்ல வந்து பையை நிரப்பும். பார்ட்னர்ஷிப்ல புதிய தொழில் தொடங்க வாய்ப்பிருக்கு. குடும்பத்துல ஒற்றுமை ஏற்படும். வெளிநாட்டுத் தொடர்புடன் தொழில் பண்றவங்களுக்குப் பணம் கொட்டும். குடும்பத்துல சுபகாரியங்கள் நடக்கும்.

நடிகை ஆஷிமாவின் (மகரம்) முயற்சிகள் வெற்றிகரமாக அமைய வாழ்த்து.

**மிதுனம்** : எந்தக் காரியத்துலயும் இந்த வாரம் உங்களுக்கு வெற்றிதான். செல்வம், அறிவாற்றல், திறமை எல்லாம் வெளிப்படும். மதிப்பு, மரியாதை ஜில்லென்று உயரும். எடுத்த காரியங்கள் திட்டமிட்டபடி நடக்கும். பண நடமாட்டத்துக்குப் பஞ்சமில்லை. குடும்பத்துல மகிழ்ச்சி தாண்டவமாடும். உறவினர்கள் நண்பர்கள் வருகைனு வீடு அமர்க்களப்படப் போகுது. கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு ஆதாயமுண்டு.

**கன்னி** : வாழ்க்கையில முக்கியமான திருப்பங்கள் உண்டாகப் போகுது. சிலருக்கு அதிர்ஷ்டகரமான திருப்பமாகவும் அமையலாம். புதிய முயற்சிகள்ல இறங்க இது நல்ல நேரம். பொருளாதார நிலை சீராக இருக்கும். அரசு விவகாரங்கள் அளவோடு நன்மை தரும். அரசியல்வாதிகளுக்குப் புதிய திருப்பம் இருக்கு. குடும்ப சகிதம் சிலர் வெளியூர் / வெளிநாடு டூர் போக சான்ஸ் இருக்கு. கலைத் துறையைச் சேர்ந்தவங்க முன்னணிக்கு உயருவாங்க. வீண் அலைச்சலைத் தவிர்த்திடுங்க.

# மே 1 முதல் 7 வரை அக்னிசர்மா பக்கம்

**துலாம்** : இந்த வாரம் உற்சாகத்துல துள்ளப் போறீங்க. நீண்ட நாளா சந்திக்காத உறவினர்கள் / நண்பர்கள் போன்றோரைச் சந்திக்க வாய்ப்பிருக்கு. பணியிலிருப்பவர்களுக்குப் புதிய பொறுப்புகள் வந்து சேரும். சிலர் புதிய பணிக்காக வெளிநாடு செல்ல வாய்ப்பிருக்கு. கடன் தொல்லைகள் குறையும். பண உதவி எதிர்பாராத வகையில் வந்து சேரும். குடும்பத்துல சுபகாரியங்கள் நடக்கும். பெயர், புகழ் பாராட்டுக் கிடைக்கும்.

**விருச்சிகம்** : எதிர்பாராத அதிர்ஷ்டத்தை இந்த வாரம் சந்திக்கப் போறீங்க. குடும்பத்துல சந்தோஷ மழை பொழியும். அலுவலகப் பணியாளர்களுக்குப் புகழ், பாராட்டு உண்டு. சிலர் புதிய பொறுப்புகளை ஏற்க வாய்ப்பிருக்கு. வியாபாரிகளுக்கு இதுவரை இருந்து வந்த மந்த நிலை இப்ப விலகும். கொடுக்கல், வாங்கல்ல அளவோடு அனுகூலம் உண்டாகும். சட்டம், காவல், இராணுவம் போன்ற துறையைச் சேர்ந்தவங்களுக்கு எதிர்பாராத ஆதாயம் உண்டாகும்.

**தனுசு** : இதுவரை உங்களை இழுத்தடித்துக் கொண்டிருந்த பிரச்னை இப்ப முடிவுக்கு வரும். என்னதான் எதிரிகள் பிரச்னையைக் கிளப்பினாலும் தெய்வ பலத்தால் அது தவிடு பொடியாகிவிடும். பணியில் இருப்பவர்களுக்குப் புகழ், பாராட்டு உண்டு. சிக்கலான விஷயங்களைக்கூட மிக சாமர்த்தியமாகக் கையாண்டு வெற்றிக் காண்பீங்க. புதிய முயற்சிகள் கூடிவரும். புதிதாகத் தொழில் தொடங்க இது நல்ல சந்தர்ப்பம். திருமணமாகாதவங்களுக்கு இப்ப அதுக்கான வாய்ப்பு வரும்.

**மகரம்** : இந்த வாரம் உங்க ராசிநாதன் கூட்டுக் கிரகங்களுடன் பூர்வ புண்ணியஸ்தானத்தில் சஞ்சரிப்பதால் எதிர்ப்புகள் மறையும். எல்லா முயற்சிகளும் வெற்றிகரமாக நிறைவடையும். பதவி உயர்வு, ஊதிய உயர்வு கிடைக்கும். கடன்சுமை குறையும். சுயமாகத் தொழில் செய்பவர்கள் முன்னேற்றம் அடைவார்கள். குடும்பத்துல செலவுகள் எகிறும். ஏற்றுமதி இறக்குமதி லாபம் தரும். வழக்கு விவகாரங்கள்ல நல்ல திருப்பம் வரும்.

**கும்பம்** : இந்த வாரம் முக்கியமானவங்க உங்களுக்குப் பக்கபலமா இருப்பாங்க. இதனால் சில நல்ல காரியங்கள் நடக்கும். பணியிலிருப்பவர்களுக்குச் சக ஊழியர்களால் பிரச்னை வரலாம். பக்குவமாகச் சமாளிங்க. எதிலேயும் அவசரம், பதற்றம் வேண்டாம். குடும்பத்துலயும் பிரச்னைகள் முளைக்க இருப்பதால் எல்லார்ட்டயும் சுமுகமா பழகறது நல்லது. இதுவரை தடைபட்டிருந்த குலதெய்வப் பிரார்த்தனைகள் இப்போது நிறைவேறும். ஏற்றுமதி இறக்குமதி இனங்கள்ல லாபம் உண்டு.

**மீனம்** : இந்த வாரம் கொஞ்சம் உஷாராகவே இருங்க. பிரச்னைகள் அப்பப்ப வந்து தலை தூக்கும். இதனால சில சங்கடங்கள் ஏற்படலாம். அலுவலகப் பணியாளர்களுக்கு இது அசத்தல் வாரம். சிக்கலான காரியத்தையும் சுமுகமாகக் கையாண்டு அதிகாரிகள் பாராட்டைப் பெறுவாங்க. குடும்பத்துல மகிழ்ச்சி கரை புரளும். உறவினர்கள். நண்பர்கள் உதவு வாங்க. சிலருக்கு வெளியூர் / வெளிநாடு பயணத்துக்கான வாய்ப்பிருக்கு. பண நடமாட்டம் சீரா இருந்து வரும்.

சுபம் AC — பேபி ஆல்பட் AC — அன்னை அபிராமி AC
4 காட்சிகள் — 4 காட்சிகள் — 4 காட்சிகள்
AVM ராஜேஸ்வரி AC — மகாராணி AC — ஆல்பட் AC
4 காட்சிகள் — 4 காட்சிகள் — பகல் காட்சி

# குழந்தைகளோடு பார்க்கவேண்டிய குதூகலச்சித்திரம்



உங்கள் குழந்தைகளுக்கு
இந்தப்படம்
பிடித்திருப்பதற்கான காரணத்தை
குழந்தைகளை வைத்தே எழுதி
புகைப்படத்துடன் அனுப்புங்கள்.
தேர்வு பெறும் கடிதத்திற்கு
வித்தியாசமான பரிசு உண்டு
முகவரி - "ஜெமினி"
போஸ்ட் பாக்ஸ் - 2270,
சென்னை - 26



## ஓ...போடு...ஓ...போடு...

சீயான்
விக்ரம்
நடிக்கும்
ஏ வி எம் மின்

# ஜெமினி

UA

சரண்

AVM PRODUCTIONS

பரத்வாஜ் வைரமுத்து

A.வெங்கடேஷ் தோட்டா தரணி சுரேஷ் அர்ஸ்

M.சரவணன் M.பாலசுப்ரமணியன் M.S.குகன் B.குருநாத்

# காவிரியில் தனி நபர் போட்ட ரோடு!



ஆற்றங்கரையில் மணல் கொள்ளையடிக்கப்படுவது சர்வ சாதாரணமாக நடக்கும் செயல்தான். இருந்தாலும் இந்த அளவுக்கா? காவிரியின் தென் கரையையே முப்பதடி அகலத்துக்கு வெட்டிப் போட்டு, காவிரியின் உள்ளே குறுக்காக மண் சாலை போடப்பட்டு, நெடுஞ்சாலைக்கு இணைப்பும் கொடுக்கப்பட்டிருக்கிறது. காவிரியின் குறுக்காக அக்கரையிலிருந்து இக்கரைவரை இலட்சக் கணக்கில் சம்பாதித்துக் கொண்டிருக்கிறார் கோவையைச் சேர்ந்த மணல் கண்ட்ராக்டர் ஒருவர்.

திருச்சி - கரூர் - கோவை நெடுஞ்சாலையில் குளித்தலைக்கு அடுத்துள்ள காவிரியோர கிராமம் கருப்பத்தூர்.

இங்கேதான் இந்தக் கோவை மணல் பிரமுகர் காவிரிக்குள் மூன்றடி உயரம், இருபதடி அகலம், இரண்டரை கிலோ மீட்டர் நீளத்துக்குப் பந்தாவாக ரோடு போட்டிருக்கிறார்.

இந்த விஷயம் சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்குத் தெரியாமலில்லை. கனிம வளத் துறை, பொதுப் பணித் துறையின் ஆற்றுப் பாதுகாப்புக் கோட்டம் மற்றும் மாவட்ட நிர்வாகம் ஆகியன ஒன்றின் மீது ஒன்று புகார் கூறிக் கொண்டு, பொறுப்பைத் தட்டிக் கழிக்கின்றன.

இந்த அலட்சியப் போக்கினால், மணல் மட்டுமா கொள்ளை போகிறது. தண்ணீர்ப் பஞ்சத்துக்கும் அல்லவா வழி வகுத்துள்ளது! மேட்டூர் அணையிலிருந்து வருகின்ற சொற்ப தண்ணீரின் நீர்ப் போக்கில் தேக்க நிலை உருவாகியுள்ளதையடுத்து, காவிரியிலிருந்து நீர் பெற்றுத் தரும் குடிநீர்த் திட்டங்கள் பெரும் சவாலை எதிர்நோக்கியுள்ளன. திருச்சி மாநகராட்சி, பாய்லர் துப்பாக்கித் தொழிற்சாலைப் பகுதி, மணப்பாறை குளித்தலை, துறையூர், முசிறி பேரூராட்சி மற்றும் புதுக்கோட்டை பகுதிகளுக்கான கூட்டுக் குடிநீர்த் திட்டங்கள் இக்கோடை காலத்தில் பெரும் பாதிப்புக்குள்ளாகும் அபாயம் உள்ளது.

அதுமட்டுமல்ல, காவிரியில் தண்ணீர் அதிகமாக வரும் காலங்களில் ஊருக்குள் வெள்ளம் புகுந்துவிடும் வாய்ப்பும் மிக அதிகம்.

இது பற்றி கருப்பத்தூர் கிராம மக்கள் என்ன சொல்கிறார்கள் என்றறிய அவர்களைச் சந்தித்தோம். காமிராவுக்கு முகம் காட்ட மறுத்த அவர்கள் சொன்ன பதில் நம்மைத் திகைக்க வைத்தது.

“சட்டத்துக்கு மாறா மணல் குவாரிலே இயந்திரங்கள் மூலமா மணல் அள்ளுகிற விஷயம் தெரிஞ்சதும் எதிர்ப்புக் காட்டினோம். பெரிய ரோடாவே போட்டுக் கடத்த ஆரம்பிச்சதும், கிராம பொதுமக்கள் எல்லாருமாச் சேர்ந்து மணல் லாரிகள் முன்னாலே மறியல் செய்தோம். ஆனால் அந்த மணல் தொழிலதிபரோட நிர்வாகம், கிராமத்துக் கோயிலைப் புதுப்பிச்சுத் தர்றதாகவும், திருவிழா நடத்த கணிசமான நன்கொடை தருவதாகவும் ஒப்புக்கிட்டதனாலே ஜனங்களோட எதிர்ப்பு அடங்கிடுச்சு” என்கிறார்கள்.

விதிமுறைகளை மீறி, காவிரிக் கரையைப் பிளந்து, மணல் கடத்தி வரும் இந்தக் கோவை தொழிலதிபர், தமிழக அமைச்சரவையில் முன்பு இரண்டாமிடத்திலிருந்து தற்போது மூன்றாம் இடத்திற்கு நகர்த்தப்பட்டிருக்கும் 'பசை'யுள்ள அமைச்சருக்கு மிகவும் நெருக்கமானவராம். ஆளுங்கட்சிப் பிரமுகரின் பொன்னான ஆசீர்வாதத்தால் காவிரியில் அரங்கேறியிருக்கும் அத்துமீறல்களைத் தமிழக அரசு கண்டு கொள்ளுமா? காவிரி காப்பாற்றப்படுவாளா?

- கட்டுரை, படம் :

**இருள்நீக்கியான்**



**கு**ஜராத் பத்தி நாம எல்லாரும் புலம்பிட்டிருக்கற நேரத்துல காலச்சுவடு சிற்றிதழ் ஒரு யூஸ்ஃபுல் வேலை பண்ணியிருக்கு. வி.ஆர். கிருஷ்ணய்யர், ஜஸ்டிஸ் சுரேஷ், அனில் தாப்பர், விஜய் டெண்டுல்கர், அலிக் பதம்ஸீ, ஜாவித் ஆனந்த்னு சமுதாயப் பிரக்ஞையுள்ள ஆட்கள் அடங்கிய 'சிடிஸன்ஸ் ஃபார் ஜஸ்டிஸ் அண்ட் பீஸ்' அமைப்போட கை கோத்துக்கிட்டு, குஜராத்துக்கு நிவாரண நிதி திரட்டற வேலையில இறங்கியிருக்கு. காலச்சுவடு திரட்டுற பணம் மேற்படி அமைப்புக்கு அனுப்பப்படுமாம். Kalachuvadu Gujarat Carrage Victims Relief Fund, (A/c No.0110056031, SBI, Nagercoil - 629 001) அப்படின்ற பேர்ல செக் அனுப்பலாம். அட்ரஸ் : *காலச்சுவடு, 669, கே.பி. ரோடு, நாகர்கோயில் - 629 001.*

நேஷனல் விமன்ஸ் கமிஷன் குஜராத் போய்ட்டு வந்து, அங்கத்திய காவல் துறையைப் பத்தி ரொம்ப டாமேஜிங்கா ஓர் அறிக்கை கொடுத்திருக்கு. இன்டிபென்டன்டா அங்கே போன ஆறு பெண் இயக்கவாதிகள் எழுதியிருக்கற ரிப்போர்ட்டைப் படிச்சா விமன்ஸ் கமிஷன் ரிப்போர்ட் இஸ் நத்திங்! பாதிக்கப்பட்ட பெண்களை அகதி முகாம்களில் பார்த்துப் பேசியிருக்காங்க அந்த ஆறு ஆக்டிவிஸ்ட்களும். அந்தப் பெண்கள் சொன்ன அனுபவங்கள் ஹாரர் ஸ்டோரீஸ் மாதிரி இருக்கு. தெலோல் கிராமத்தைச் சேர்ந்த கல்தானி, மிருகத்தனமா பலாத்காரம் செய்யப்பட்டிருக்கார். மெஹினா முஸ்தஃபா ஷேக், தன் மகள் பலாத்காரம் செய்யப்படறதைத் தடுக்க முடியாம தவிச்சிருக்கார். "அவ கதறி அழறதும் வலியில துடிக்கறதும் தெரிஞ்சுகூட என்னால உதவ முடியலை. பூ மாதிரி இருந்த என் மகளைத் துண்டுத் துண்டா சிதறடிச்சுட்டாங்க பாவிங்க!"ன்னு அழுதிருக்கார் மெஹினா.

நிவாரண முகாம்ல வேலை செஞ்ச வாலன்டியர்ஸ், நடுராத்திரி பெண்கள் அழுதுக்கிட்டே நிர்வாணமா வந்து சேர்ந்த பயங்கரத்தை விவரிச்சுத் துயரப்பட்டிருக்காங்க. எரியற வீடுகள்லேருந்து வெளியே ஓடின பெண்கள் நெருப்பைக் காட்டிலும் கொடூரத்தைச் சந்திச்சு ஆயுசுக்கும் மீள முடியாத கண்டிஷன்ல இருக்காங்க.

அரசும் நிர்வாக இயந்திரமும் கை கட்டி வேடிக்கை பார்த்ததா இந்தப் பெண்கள் சொல்றாங்க. வழக்கம்போல கவர்ன்மென்ட் தரப்பு எல்லாத்தையும் மறுத்திருக்கு.

# தாகம் தீருது!



• ஞானம்

**'வா**க்குகள் கொடுப்பதெல்லாம் வாக்கு வாங்கும் வரைதான். அப்புறம் கான், வித் தி விண்டு'னு நம்ப ஆனரபிள் பொலிடீஷியன்ஸ் பற்றிச் சொல்லுவாங்க. அந்தப் பொலிடீஷியன்களுக்கே தண்ணி காட்டற சமாசாரம் சென்னையிலே நடக்கப் போகுது. அனந்தபூர் மாவட்டத்துக் குடிநீர்ப் பிரச்னையை சால்வ் பண்ண மாதிரி, சென்னையின் குடிநீர்ப் பிரச்னையை சால்வ் பண்ண, மெகா வாட்டர் வர்க்ஸ் பிளான் ரெடி! "வண்டர்ஃபுல் பிளானா இருக்கே. இந்தாங்க நீங்க கேட்ட பணம்"னு உலக வங்கியும் ஃபண்ட்ஸ் கொடுக்க முன் வந்திருக்காம். ஒரு சின்ன பூஜையோ, பிரஸ்மீட்டோ, எதுவுமில்லாம காதும் காதும் வைச்சதுபோல வேலை நடந்துக்கிட்டிருக்காம். சரி. இவ்வளவு சொல்றியே சுமி, யாரந்த தாகம் தீர்க்க வந்த தயா பிரபுனு ஸ்ட்ரெயிட்டா கேட்டா, நானும் ரெஸ்பெக்டோட பதில் சொல்லிடறேன். அவர்தான் ஸ்ரீ சத்ய சாயி பாபா.

பிளான் இருக்குன்னு தெரியும். ஆனா வேலை ஆரம்பிச்ச சங்கதி, வெளியே தெரியவேயில்லையேன்னா, "தட்ஸ் ஹிஸ் ஸ்டைல்"ன்னு பதில் வருது!

**க்ளீ**வ்லண்ட்ல தியாக ராஜ ஆராதனைன்றது புதுசில்ல. பட், இந்த வருஷம் மிருதங்க வித்வான் ராஜாராவ் அங்கே வாய்ப்பாட்டு கச்சேரி பண்ணினது புதுசு! அதைவிட புதுசு அவர் பாடின பல்லவியோட வார்த்தைகள் : *க்ளீவ்லண்ட் ஃபெஸ்டிவல் காணக் கிடைக்குமோ சுந்தரம், ப்ரியா, கோமதி வெங்கட்ராமன், கோவிந்தா பாலு சேர்ந்து நடத்தும்... (க்ளீவ்லண்ட்)*

மணிப்பிரவாளம் வேணும்னா சுமியோட இன்ஃப்ளுயன்ஸா இருக்கலாம். ஆனா நரஸ்துதி!

- சுமி



# ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ் ®



அறிமுகப்படுத்தும்

## கல்யாண சீர்பலகாரங்கள்



**எல்லா சீர்பலகாரங்களையும் வகைக்கு ஒன்றாக வைத்து அதற்காகவே வடிவமைக்கப்பட்ட அழகிய சீர்பலகார பெட்டிகளில் வழங்குகிறோம்.**

**பரிசளிக்க, சீர்வரிசைக்கு புதுமையானவை.**

**ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ் ®**

பாண்டி பஜார், சென்னை. போன் : 4312345

காந்தி நகர் முதல் மெயின் ரோடு, அடையார், சென்னை. போன் : 4413805

அண்ணாநகர், சென்னை. போன் : 6192345

DIMENSIONS

# எம்.ஜி.ஆர். வாய்ஸ்

'புதுவையில் ஒருவர் தனித்து இருப்பாரேயானால் 'பார்'களில் புகுந்து வாழ்க்கையை அனுபவித்துக் கொண்டிப்பார். இருவராக இருந்தால் ஒரு கட்சியைத் துவக்கி விடுவார்கள். மூவராக இணைந்தால் கூட்டணி அமைத்து ஆட்சியைப் பிடிப்பார்கள். அவர்களே நால்வராக மாறும்போது ஆட்சியைக் கவிழ்த்து விடுவார்கள்' என்று தமாஷாகச் சொல்வதுண்டு. இது கொஞ்சம் அதிகபட்ச கற்பனையாக இருந்தாலும் அங்கு ஆட்சி அமைக்கப்படுவதும் உடனே கவிழ்க்கப்படுவதும் வரலாறாய் இருந்து வந்திருக்கிறது. இரண்டே நாளில் கவிழ்ந்த ஆட்சியும் உண்டு. பதினேழு நாட்களில் கவிழ்ந்த ஆட்சியும் உண்டு.

"ஆனால், அதெல்லாம் 1980க்கு முன்புள்ள கதை. 1980க்குப் பிறகு இடையில் ஒரு வருடம் தவிர இங்கு முழு பதவிக் காலத்தையும் அனுபவித்த நிலையான ஆட்சிகளே அமைந்தன. அவை காங்கிரஸ் ஆட்சிகளாகவும், காங்கிரஸ் அல்லது காங்கிரஸைச் சார்ந்த கட்சிகளின் ஆதரவைப் பெற்ற மாநிலக் கட்சிகளின் ஆட்சிகளாகவும் இருந்தன" என்கிறார், புதுவை மாநில த.மா.கா. தலைவர் பாலாஜி.

பல விதங்களில் புதுவை அரசியல் வித்தியாசமானது. இங்கு ஜாதி ரீதியாகவோ மத ரீதியாகவோ எந்தக் கட்சியும் மக்களைத் திரட்டி வாக்குகளைக் கைப்பற்ற முடியாது. வன்னியர்கள் கணிசமாக வாழ்ந்தாலும், கடந்த தேர்தலில் பா.ம.க. ஒரு இடத்தில் கூட வெற்றி பெற முடியவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. லாஸ்பேட்டை என்றொரு தொகுதி. 55,000 வாக்காளர்களைக் கொண்ட இதில் இரண்டு சதம்தான் முஸ்லிம்கள். ஆனாலும் இங்கு வெற்றிக் கொடி நாட்டி வந்தவர் பரூக் மரக்காயர். இப்போது அவரது மகன் ஷாஜகான்.

இங்கு நடக்கும் தேர்தல்களில் ஊழல் ஒரு பொருட்டாகப் பேசப்படுவதில்லை. காரணம் இங்குள்ள அரசியல்வாதிகள் ஊழலே செய்யவில்லை என்று பொருளல்ல. சிறு அளவில் அது நடக்கத்தான் செய்யும். ஆனால் தேர்தல் பிரச்னையாகும் அளவுக்கு ஊழல் நடப்பதில்லை. அதற்கு மற்றொரு காரணம் அரசியல்வாதிகள் மக்களுக்கு நன்றாகத் தெரிந்தவர்கள், அவர்களால் நேரிடையாகக் கண்காணிக்கப்படுவார்கள். சில குறிப்பிட்ட சமயங்களைத் தவிர இங்கு தேர்தல் முடிவுகள் தமிழகத்தை நோக்க வித்தியாசப்பட்டே இருக்கின்றன. அரியாங்குப்பம் என்று சிறு தொகுதியில் 1970களில் எம்.ஜி.ஆர். தெருத் தெருவாக நடந்து அ.இ.அ.தி.மு.க.வுக்கு வோட்டு கேட்டார். ஆனால் கட்சி வெற்றி பெற முடியவில்லை. எம்.ஜி.ஆர். வாய்ஸ் எடுபடாத பிரதேசம் புதுவை. காரணம், அந்த மாநில மக்களின் உணர்வுக்கு மாறாக, 'புதுவையை தமிழகத்தோடு இணைக்க வேண்டும்' என்று எம்.ஜி.ஆர். குரல் கொடுத்ததுதான்.

• பாலாஜி



• வைத்தியலிங்கம்

# எடுபடாத நகரம்!




"தமிழகத்திலுள்ள மாநிலக் கட்சிகள் இங்குள்ள மக்களின் உணர்வை வெளிப்படுத்தும் வகையில் செயல்படவில்லை. புதுவைவாசிகள் தேசியக் கண்ணோட்டத்துடன் வாழ்ந்து வருபவர்கள். இதன் காரணமாக காங்கிரஸ் மிகுந்த செல்வாக்குடன் இருக்கிறது. இந்தப் பகுதிக்கு என்று தனியாக மாநிலக் கட்சி உருவாகவும் வாய்ப்பில்லை. காரணம் பூகோள ரீதியாக பல மொழி பேசுபவர்களைக் கொண்ட மாநிலமாக இது இருப்பதுதான்" என்கிறார் முன்னாள் காங்கிரஸ் முதல்வர் வைத்தியலிங்கம். "1969ல் காங்கிரஸ் பிரிவின்போதே இங்கிருந்த காங்கிரஸ்காரர்கள் காமராஜரை விட்டு மத்தியில் ஆட்சியில் இருந்த இந்திரா தலைமையில் அணிவகுத்தார்கள். அதற்குக் காரணம், புதுச்சேரி அரசு மத்தியில் ஆளும் கட்சியைச் சார்ந்திருக்க வேண்டிய நிலையில் இருக்கிறது. மாநிலத்தின் வளர்ச்சி மத்தியில் உதவியை எதிர்பார்த்து இருப்பதும், மக்களின் தேசியக் கண்ணோட்டத்துக்கு ஒரு காரணம்" என்கிறார் பாலாஜி. அதே சமயம் மத்தியில் பா.ஜ.க. வலுவாக இருந்தும் புதுவையில் அது ஒரு சக்தியாக உருவாகவில்லை.

ஒரு வேட்பாளர் வெற்றிபெற கட்சி செல்வாக்கு இருபது முப்பது சதம் உதவினால் அதுவே பெரிய விஷயம். இங்கு போட்டியிடும் தனிப்பட்டவர்களின் சாதக, பாதகங்கள் எடைபோடப்படுகின்றன. "ஜெயிக்கிறதுக்கு உழைக்கணும்" என்கிறார் வைத்தியலிங்கம். ஆனால் சமீப காலங்களில் வேட்பாளர்கள், ஒரு தொகுதிக்கு நாற்பதிலிருந்து அறுபது இலட்சம் வரை செலவழிக்க வேண்டியிருக்கிறதாம். "அந்த அளவுக்கு இங்கு அரசியலை காஸ்ட்லியாக மாற்றிவிட்டது பா.ம.க.தான்" என்று குற்றம் சாட்டுகிறார் பாலாஜி.

"இங்கு காங்கிரஸ், திமுக. தான் பலம் பெற்ற கட்சிகள். இவையிரண்டில் ஏதேனும் ஒன்றுதான் மாற்றி மாற்றி பொறுப்புக்கு வரும். மற்ற கட்சிகள் ஜாதியை முன்னிறுத்தினாலும், பணத்தை வாரியிறைத்தாலும், வெற்றி பெற முடியாது" என்கிறார் முன்னாள் முதல்வர் ஜானகிராமன். புதுவை அரசியல்வாதிகள் அனைவரும் ஒட்டு மொத்தமாகச் சொல்வது : தேர்தல் செலவுகளைப் பொறுத்தமட்டில் தமிழகத்தின் பாதிப்பு இங்கும் வந்துவிட்டது என்பதுதான். புதுவையில் இப்போதிருக்கும் அரசியல் சூழ்நிலையில் காங்கிரஸ் மட்டுமே வருங்காலத்தில் இன்னமும் பலமிக்கதாக உருவாகும் என்பது மட்டும் உறுதி. அதே காங்கிரஸ் தமிழகத்தில் தள்ளாடுவதையும் குறிப்பிடாமல் இருக்க முடியாது. கண்ணன் தலைமையிலான புதுச்சேரி மக்கள் காங்கிரஸ், த.மா.கா. ஆகியவை மீண்டும் தாய்க் கட்சியான காங்கிரஸுடன் இணைந்த நிலையில், புதுவையில் காங்கிரஸ் ஆட்சி தொடர்வதற்கான வாய்ப்புகளே அதிகம்.


● ஜானகிராமன்


● பரூக்

பாரதி வாழ்ந்த மண்; பாரதிதாசன் பிறந்த பூமி என்ற பெருமைகளே புதுவையைத் தமிழிலக்கிய வானில் நிலைநிறுத்தப் போதுமானவைதான். ஆனால், பாரதிக்கும் பாரதிதாசனுக்கும் பாதை போட்ட தமிழ் சான்றோர்கள் பலரும்கூட புதுவைக்காரர்கள்! உதாரணமாக, தமிழ் முனிவர் அகத்தியருக்குச் சொந்த ஊர் பாண்டிச்சேரி! இது என்ன புதுக்கதை! அவர் வாழ்ந்தது தென்பொதிகை மலைச் சாரலில் அல்லவா என்று சண்டைக்கு வருவீர்கள்! பொதிகையே பாண்டிதான் என்றொரு ஆராய்ச்சி முடிவை முன் வைக்கிறார் வரலாற்றாசிரியர் ஐராவதம் மகாதேவன்.

யவனர்கள் நமது கிழக்குக் கடற்கரையின் துறைமுகங்கள் வழியே வந்து போய்க் கொண்டிருந்த காலகட்டத்தில் இன்றைய பாண்டிச்சேரி நகரம் என்பது கிடையாது. ஆனால் கடற்பயணிகளான தாலமியும் ப்ளினியும் அப்பகுதியை 'பொதுகே' என்று குறிப்பிட்டு எழுதி வைத்திருக்கிறார்கள். 'பொதுகே' என்பதைத்தான் 'பொதிகை' என்று நாமறிந்த சொல்லோடு தொடர்பு படுத்திக் காட்டுகிறார் ஐ.மகாதேவன். அகஸ்தீஸ்வரம் என்ற புராதனப் பெயர் பாண்டிச்சேரிக்கு உண்டு என்பது தர்க்க ரீதியாக இந்தக் கருத்துக்குப் பலம் சேர்க்கிறது. அப்படியெனில் தமிழின் ஆதிமூலஸ்தானம் பாண்டிச்சேரியாகத்தான் இருக்க வேண்டும்!


• பாரதிதாசன்


• பாரதி

# தமிழின்

புதுவையின் வரிவடிவ வரலாறு என்பது ஆனந்தரங்கம் பிள்ளையின் நாட்குறிப்புகள் மூலம் நாம் பெற்றிருப்பது தான். சென்னையில் பிறந்து புதுவையில் குடியேறிய இந்த வியாபாரி பன்மொழி வல்லுனர். தமிழ், தெலுங்கு, பிரெஞ்சு, போர்ச்சுகீஸ், ஆங்கிலம், பெர்ஷியன் எல்லாம் தெரியும். பிரெஞ்சுக்காரர்களால் 'திவான்' ஆக்கப்பட்டு செல்வாக்குடன் வாழ்ந்தார் ஆ.ர.பிள்ளை. டுப்ளேயின் பதவிக் காலத்தில் அவருக்கு வலக்கரமாய் விளங்கியிருக்கிறார். கலை-இலக்கியத்திலும் இவருக்குப் பேரார்வம். வைணவரான போதும் சைவ கோயில்கள் மட்டுமின்றி பிறமத கோயில்களுக்கும் ஆதரவு அளித்தவர். குயவர் பாளையத்தில் இவர் கட்டிய கண்ணன் கோயில் இன்றும்

• அனந்தரங்கம்பிள்ளை



• வ.வே.சு.



• பிரபஞ்சன்

குறிப்புகள் (1736 - 1761) அக்காலத்தைப் பிரதிபலிக்கும் கண்ணாடி!

பாரதியார் 'இந்தியா' இதழைத் தொடங்கி, தொடர்ந்து நடத்திய இடம் புதுவை. பிரிட்டிஷ் அரசிடமிருந்து அவருக்கு அடைக்கலமும் அளித்தது. பிரெஞ்சு ஆதிக்கத்திலிருந்த பாண்டிச்சேரி. அரவிந்தரும் வ.வே.சு. அய்யரும்கூட இங்கே அடைக்கலம் தேடினர். புதுவை ஈசுவரன் கோயில் தெருவில், பாரதி வாழ்ந்து தமிழையும் கவிதையையும் வாழச் செய்த வீடு இன்று அருங்காட்சியமாக விளங்குகிறது.

சிறப்புடன் விளங்குகிறது.

பாண்டிச்சேரி வரலாறுக்கு ஆதாரமான பிள்ளையின் டைரிக் குறிப்புகளைக் கொண்டு இன்றைய எழுத்தாளர் பிரபஞ்சன் எழுதியுள்ள 'வானம் வசப்படும்' நாவல் சாகித்ய அகாடமி பரிசு பெற்றது. அந்த அளவுக்கு பிள்ளையின்

# ஆதிமூலஸ்தானம்



திராவிட எழுச்சி, தமிழின உயர்வு, தமிழ்மொழிச் சிறப்பு என்று கிளைத் திசையில் புதிதாய் சாதனை புரிந்த பாரதிதாசன் இங்கே பாரதி கவிதா மண்டலத்தையே நிறுதி ஒரு கவிஞர் பட்டாளத்தை உருவாக்கினார்.

இன்றைய புதுவை எழுத்தாளர்களைப் பட்டியலிட்டு மாளாது. அந்த நல்ல காரியத்தை ஏற்கெனவே செய்துள்ள புதுவை தோட்டம் இலக்கிய நண்பர்கள் அமைப்பை வாழ்த்துவதோடு நிறுத்திக் கொள்வோம். 'தமிழ்மாமணி' பட்டம் பெற்று, அந்தப் பட்டியலில் சிறப்பிடம் பெறும் கோபாலய்யரை மேலும் வாழ்த்துவோம்.

ஓவியங்கள் : ராஜன், ஜெயராமன், வேதா.

காலையில் யாரைப் பார்க்கக் கூடாதென நினைத்தேனோ... அவனே எதிரே வந்து கொண்டிருந்தான்.

கடன்காரன்!

மூர்த்தியிடம் ஆயிரம் ரூபாய் கடனாக வாங்கியிருந்தேன். அப்படி இப்படியென்று ஆறுமாதம் அது குட்டிகளை வேறு ஈன்று தொலைத்திருந்தது.

இப்போது மூர்த்தியின் பார்வையில் பட்டாலோ, சும்மாவிடமாட்டான். நடுத் தெரு என்றும் கூட பார்க்காமல் பணத்தைக் கேட்டு அவமானப்படுத்தி விடுவான். மானம் போயே போய்விடும்.

அவனிடமிருந்து தப்பிக்க வேண்டும்.

பக்கத்து டீக்கடைக்குப் போய் நாளிதழைப் புரட்டுவது போல பாவனை செய்தேன்.

என் போதாத நேரம், மூர்த்தியும் டீக்கடைக்கு வந்து நின்றான். டீ சொன்னான். என்னைப் பார்த்தும் விட்டான். பயம் தலைக்கேறியது. கேட்டு விடுவானோ...? மெல்ல நழுவி விடலாம் என்று நினைத்தேன்.

வேண்டாம்! தன்னைப் பார்த்ததும் ஓடி விட்டானென்று இளக்காரமாக நினைப்பான். அதற்கு இடம் கொடுக்கக் கூடாது!

அவனிடம் எனக்கென்ன பயம்? கொடுத்த பணத்தைக் கேட்கப் போகிறான். கேட்கட்டுமே... இன்று இல்லையென்றால் இன்னொரு நாள் வட்டியும் முதலுமாகக் கொடுத்து விட்டுப் போகிறேன். அதற்காக அவனுக்குப் பயந்தோடுவதா? மனம் தைரிய கிளையைப் பற்றியது.

# “ஏடா பணத்தை!”

ஐந்து நிமிடம் வெறுமனே கழிந்தது.

மூர்த்தி டீ சாப்பிட்டு விட்டுப் போயே விட்டான்.

எனக்கு உள்ளுக்குள் 'புஸ்' என்று குறைந்துவிட்டது.



எஸ். நீலலோசினி

அட, போய் விட்டானே! என்னைக் கண்டு கொள்ளவே இல்லையே... அப்படியென்றால் என்னை அவன் ஒரு பொருட்டாகவே மதிக்கவில்லையா...?

என்னைப் பார்த்தானே! மரியாதைக்காகவாவது ஒரு 'ஹலோ' சொல்லியிருக்கலாம். சொல்லவில்லை. போகட்டும்!

"என்ன சுந்தர், எப்ப பணத்தைத் தரப்போறே... எம்புட்டு நாளாச்சு..." என்று கேட்டிருக்கலாம். அதுவும் கேட்கவில்லை.

அலட்சியப்படுத்தி விட்டானே. என்ன ஒரு தெனாவட்டு.

என் சட்டையைப் பிடித்திழுத்து 'காசை வைச்சுட்டுப் போடா நாயே' என்று மூர்க்கத்தனமாகக் கேட்டால் கூட தாங்கிக் கொண்டிருப்பேன். இப்படி ஒரேயடியாக அலட்சியம் செய்து மனத்தில் கீறலை உண்டாக்கி விட்டானே!

முதலில் அவனுக்குத் தர வேண்டிய பணத்தை எப்பாடு பட்டாவது வட்டியோடு முகத்தில் வீசி எறிய வேண்டும்.○

# புயலைக் கிளப்பும் புதுவைத் தளபதிகள்!

**(தமிழக அரசியலில் ஸ்டாலின், அன்புமணி, வாசன் போன்ற வாரிசுத் தளபதிகள் இருக்க, புதுவை அரசியலைக் கலக்கும் தளபதிகளைப் பார்க்கலாமா!)**

எந்தவிதமான பொறுப்பில் இல்லாத நிலையிலும் இரண்டு சி.பி.ஐ. வழக்குகளைச் சந்தித்து, 'சுத்தமாக' தன்னை நிரூபித்து வந்திருக்கிறார் ஆர்.வி.ஜே. ரமேஷ். முன்னாள் முதல்வர் ஆர்.வி. ஜானகிராமனின் மூன்றாவது மகன் இவர்.

"முதலில் புதுவையில் நடந்த வீடு ஆக்கிரமிப்பு பிரச்னையில் என்னைத் தொடர்புப்படுத்தி விஷயத்தை ஊதி விட்டார்கள். அடுத்து, என் விசிட்டிங் கார்டை ஒருவர் பயன்படுத்தி இலட்சக்கணக்கான மதிப்புள்ள நெசவு நூலை காரைக்கால் நூற்பாலையிலிருந்து வாங்கிக் கொண்டு போய் விட்டார். என் தந்தை முதல்வராக இருக்கும்போது இந்த இரண்டு புகார்களும் வந்தன. உடனே அவர் பாரபட்சமற்ற முறையில் விசாரணை நடக்க வேண்டுமென்று சி.பி.ஐ.யிடம் ஒப்படைத்து விட்டார். அவர்களும் விசாரித்து கடைசியில் 'க்ளியர்' செய்தார்கள்" என்கிறார் ரமேஷ்.

இவரது அலுவலகத்தில் ஒரே இளைஞர் கூட்டம். இத்தனைக்கும் தி.மு.க. இளைஞர் அணியில் இவருக்கு எந்தப் பொறுப்பும் கிடையாது. பலவிதமான கட்டைப் பஞ்சாயத்துக்கள், கோஷ்டி மோதல்கள் ஆகியவற்றில் ரமேஷின் பெயரும் அடிபடும். ரமேஷ் பெயரைப் பயன்படுத்தி, சில சமூக விரோதிகள் தொழில் நடத்திக் கொண்டிருக்கிறார்கள் என்ற பேச்சும் உண்டு. ஆனால் இவை எல்லாவற்றையும் மறுக்கிறார் ரமேஷ்.

"எனக்குத் தெரியாமலேயே என் பெயரைப் பலர் பயன்படுத்தி வில்லங்கமான செய்கைகளில் ஈடுபடுகிறார்கள். இதனால் என் பெயர் கெடுகிறது. இதுவரை இது போல் மோசடி செய்த நாற்பத்து இரண்டு பேர் பற்றி போலீஸில் புகார் கொடுத்திருக்கிறேன்" என்கிறார் அவர்.

கிட்டத்தட்ட பதினைந்து வருட காலம் அப்பாவுக்கு அருகிலேயே இருந்து அரசியலின் நெளிவு சுளிவுகளைக் கற்றிருக்கிறார். இது தவிர குடும்பத் தொழில்களையும் கவனித்துக் கொள்கிறார்.

"நான் எல்லோரிடமும் நன்றாகப் பழகுவேன். ஆனால் பலர், என்னிடம் பழகாததால், என்னைப் பற்றிப் பரப்பப்படும் வில்லத்தனமான கதைகளை நம்பி விடுகிறார்கள்" என்று வருத்தப்படுகிறார் ரமேஷ். அவரது அலுவலக அறை முழுதும் சுவாமிப் படங்கள்!

"சென்ற சட்டமன்றத் தேர்தலில் நான் போட்டியிட்டிருக்க வேண்டும். ஆனால் துரதிர்ஷ்டவசமாகத் தலையில் ஓர் அறுவைச் சிகிச்சை நடந்ததால் போட்டியிடவில்லை. டாக்டர் ஆலோசனைப்படி சற்று ஓய்வில் இருக்கிறேன். வரும் சட்டமன்றத் தேர்தலில் கண்டிப்பாகப் போட்டியிடுவேன்" என்கிறார் ரமேஷ்.

புதுவையில் எந்த பிரிவைச் சார்ந்தவர்களாக இருந்தாலும், ஏதாவது சங்கத்தைத் துவக்கினால் அதற்கு ரமேஷ் காப்பாளராகப் போடப்பட்டு விடுகிறார். அவரது பெயர் லெட்டர் ஹெட்டில் இருந்தால் எந்தப் பிரச்

• ரமேஷ்

• ஷாஜகான்

## பயமுறுத்தும் யாத்ரி நிவாஸ்!

புதுவை அரசின் சுற்றுலாத்துறை புதுவையில் 'யாத்ரி நிவாஸ்' என்ற தங்கும் விடுதியை, சுற்றுலாப் பயணிகளுக்கு நடத்தி வருகிறது. ஆனால் ஒரு முறை அங்கு தங்க வரும் பயணிகள் அடுத்த முறை அந்தப் பக்கம் தலை வைத்துப் படுக்கமாட்டார்கள். புன்சிரிப்பை மறந்த பணியாளர்கள், ஓடாத மின்விசிறிகள், மோசமான பாத்ரூம்கள் என்று வரிசையாகக் குறைகளைப் பட்டியல் இட லாம். அதுவும் வெயில் காலத்தில் பின்னணி இசையுடன் ஓடும் மின் விசிறி திடீரென நின்றுவிட்டால் வேர்த்து விறுவிறுப்பது ஒரு பக்கம் இருக்க, கொசுக்கள் நம்மை பாடாய்ப் படுத்துகின்றன. இது நமது அனுபவம். பணி யாளர்கள் மட்டும் கொசுவத்தி துணையுடன் நன்றாக ஓடும் மின் விசிறியின் அடியில் சுக மாகத் தூங்குகிறார்கள். இவை எல்லாவற்றை யும்விட, அருகில் இருக்கும் இலவம் பஞ்சு மரம் ஒன்றிலிருந்து சதா உதிர்ந்து கொண்டே இருக்கும் பஞ்சு அந்தப் பகுதி முழுவதும் ஆக்ரமித்துக் கொண்டு இருக் கிறது. ஆஸ்துமா வியாதிக்காரர் கள் பாடு திண்டாட்டமாகப் போய் விடும். புதுவைச் சுற்றுலாத் துறை உடனடி யாக இதற்குத் தீர்வு காண வேண்டும்.



னையும் வராது என்று உறுதியாக நம்புகிறார்கள்.

"எங்கள் குடும்பமே கழகத்தில் ஈடுபாடு கொண்டதாக இருந்தாலும் அதற்கு அடிப் படை கலைஞர் குடும்பத்தின் மீது எங்களுக்கு இருக்கும் பற்றும், பாசமும்தான்'' என்று சொல்லும் ரமேஷ் விரும்பிச் செய்வது கோயில் திருப்பணிகள்.

புதுவை காங்கிரஸ் வரலாறில் புது நட்சத்திரமாய் மின்னுபவர் எம்.ஓ.எச். ஷாஜ கான். பரூக் மரைக்காயரின் மகன். "என் அப்பா காங்கிரஸில் இருந்தாலும் எனக்குக் காங்கிரஸைப் பிடித்ததற்குக் காரணம், நேரு குடும்பத்தவர் மேல் உள்ள மதிப்பும் கட்சியின் மதச்சார்பற்ற கொள்கையும்தான்'' என்கிறார் ஷாஜகான். பள்ளிப் படிப்பிலிருந்தே சென் னையிலும், பின்னர் வெளிநாட்டிலும் பயின்ற தால் விடுமுறைக்குத்தான் புதுவைக்கு வருவாராம் இந்த எம்.பி.ஏ. பட்டதாரி. "எனக்கு சென்னையில்தான் நண்பர் கள் அதிகம்" என்கிறார்.

"என் அப்பாவின் தொகுதி லால் பேட்டை. ஆனால் ராஜீவ் விருப்பப் படி அப்பா பாராளுமன்றத்திற்குச் சென்ற பிறகு, லால்பேட்டை மக்கள் அப்பாவிடம், நான் அங்கு போட்டி




யிட வேண்டும் என்று வற்புறுத்தினர். அந்த அடிப் படையில்தான் என் அரசியல் பயணம் துவங்கியது'' என்கிறார் ஷாஜகான். லால் பேட்டை தொகுதி வாக்காளர்களில் முஸ்லிம் களின் எண்ணிக்கை ஒரு சதத்துக்கும் குறைவு தானாம். 1996ல் தமிழகத்தைப் போன்று பாண்டியில் அடித்த தி.மு.க.-த.மா.கா. அலை யில் ஷாஜகான் லால்பேட்டையில் தோற்று விட்டார். இருந்தும் அந்த மக்களிடையே தொடர்ந்து தொண்டாற்றி, சென்ற தேர்தலில் வெற்றிக் கனியைப் பறித்தார் ஷாஜகான்.

"என் அப்பாவிடம் எனக்குப் பிடித்தது அவரது நிதானம்; மாற்றுக் கட்சி என்றும் பாராது எல்லோரிடமும் பாசமாகப் பழகும் போக்கு. இதைத்தான் நானும் கடைப்பிடிக்க விரும்புகிறேன்'' என்கிறார் ஷாஜகான்.

"அரசியலுக்கு இளைஞர்கள் – அதுவும் படித்த இளைஞர்கள் வரவேண்டும். அப்போது தான் புது வெள்ளம் பாயும். பார்வைகள் விசாலமாகும்'' என்று சொல்லும் ஷாஜகான், மத ஸ்பீட் பிரேக்கர்களைக் கடந்து, பல மகான் களின் வரலாற்றைப் படிப்பதில் ஆர்வம் காட்டுகிறார்.

"மதம் என்பது வேறு; ஆன்மிகம் என்பது வேறு. ஆன்மிகத்தை அறிந்து நம்மை நெறிப்படுத்திக் கொண்டால், எந்தத் துறையில் இருந்தாலும் வெற்றியடைய லாம்'' என்று உறுதியாகச் சொல்கிறார் ஷாஜகான்.

அவரது தலைக்கு மேலே ஆசீர் வதிக்கும் ஷிர்டி சாய்பாபா படம்.

